# மங்கையர் மலர்



உணவும் ஆரோக்கியமும்

என் கதை - ரேகா

MANGAYAR MALAR

மார்ச் '81 ரூ.1-50

# சுஜாதா

எழுதும் புதிய தொடர் அடுத்த இதழில் —





மார்ச் 1981





சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-

Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kesturi Rangan

# 'குடிசை' நாயகி



''உடல் ஊனமுற்றவர்கள் ஆண்டாகக் கருதப்படும் இவ்வாண்டிலாவது என் கணவருக்குச் சந்தர்ப்பம் கொடுக்கக் கூடாதா இந்தத் திரைப்படத் தயாரிப்பாளர்கள்...'' என்று வருந்துகிறார் பிரபல இசையமைப்பாளர் காமேஷின் மனைவியான திருமதி கமலா காமேஷ்.

காமேஷ் மெல்லிசைத் துறையில் பிரபலமாக விளங்குவது போலவே, கமலா சிறந்த நாடக நடிகை. ஓரிரு திரைப் படங்களில் நடித்திருந்தாலும், 'குடிசை' திரைப் படத்தின் கதாநாயகியாகி அந்தப் பாத்திரத்திற்கே உயிரூட்டினார். கணவன் மனைவி இருவருமே புகழ் பெற்றவர்களாகவும், திறமையாளர்களாகவும் இருந்தாலும், வாய்ப்புக்கள் அதிகம் இல்லை என்று வருந்துகிறார் கமலா.

''நாடகத் துறையில் இருக்கும் பெண் என்ற முறையில் நான் மற்ற துறைப் பெண்களைப் போலத்தான் சிரமப்படுகிறேன். என் வருத்தங்கள், துன்பங்களுக்கு எல்லாம்' ஒரு வடிகாலாகவே என் நடிப்பைக் கொண்டிருக்கிறேன்.'' என்கிறார் இவர்.

''மற்றவர்களுக்கு இல்லாத ஒரு பிரச்னையும் எனக்கு உண்டு. நாடகத்துக்கு இசை அமைக்க அவரையும், நடிக்க என்னையும் அழைக்கிறார்கள். சில சமயங்களில் அவர் போக முடியாமல் போகும்போது என்னையும் விலக்கி விடுகிறார்கள். என்ன செய்வது?''

இப்படி வாழ்க்கையில் பல சிரமங்கள் இருந்தாலும், என்னுடைய துறையில் என்னை ஆதரித்தவர்களை நான் மறக்க மாட்டேன். திரு விகவால் அறிமுகப்படுத்தப்பட்டுப் பிரபலமானவள் நான். என்னுடைய கணவர் திடீரென்று நோய்வாய்ப்பட்டு ஒரு காலை எடுக்க வேண்டி வந்தபோது திரு ப. நீலகண்டன் எனக்கு நாடக சந்தர்ப்பங்கள் கொடுத்து ஆதரித்தார்.'' என்கிறார் திருமதி கமலா காமேஷ்.

தற்போது சில திரைப் படங்களில் நடித்து வருகிறார் இவர்.

— **பல்லவி**



சமீபத்தில் சென்னையில் குமாரி பாரதி துறவு மேற்கொண்ட சம்பவத்தைப் பெரும் விழாவாகக் கொண்டாடினார்கள். 23 வயது பெண்ணான இவர் மெட்ரிகுலேஷன் வரை படித்தவர். உடன் பிறந்த சகோதர, சகோதரிகள் உள்ள இவர், இவ்வுலக பந்த பாச இன்பங்களிலிருந்து விடுபட்டுத் துறவியாக மாறினார்.

— செய்தி

பெண்கள் துறவியாக ஆக முடியுமா என்று இளம் பெண்களான நால்வரைக் கேட்டபோது —

# பெண்கள் சந்யாசி ஆகலாமா?

குமாரி கல்பகம்

பெண்கள் சந்யாசி ஆக வேண்டியது அவசியமில்லை என்பது என்னுடைய கருத்து. பெண்கள்தான் நம் பண்பாட்டின் காவலாளிகள். வீட்டுக்கே ஒளி விளக்கு. அவர்கள் இல்லையென்றால் வீடேது, குழந்தைகள் ஏது?

அப்படியே சந்யாசியாக வேண்டுமென்றால், இல்லறத் துறவியாக இருக்கலாமே? ஏன், கஸ்தூரிபாய், சாரதா அம்மையாரெல்லாம் இல்லையா? அவர்கள் வீட்டைக் கவனித்துக் கொண்டே துறவியாகவும் வாழ்ந்தார்கள் இல்லையா?

அதுவுமில்லாமல், சந்நியாசி என்றாலே நாம் அவர்களை கடவுளின் அவதாரமாக, நம்மை விட உயர்ந்தவர்களாக நினைத்து வழிபட ஆரம்பித்து விடுவோம். அவர்கள் கூறும் அறிவுரைகள் எல்லாம் ஏதோ மிகவும் உயர்ந்தது; அதெல்லாம் சாதாரண மனிதர்களாகிய நம்மால் பின்பற்ற முடியாதது என்று அவர்களைத் தூக்கி வைத்து விடுவோம். அப்படி இருக்கும் போது பெண் எப்படி சந்யாசியாக முடியும்?

குமாரி கோசலை

பெண் துறவியாகக் கூடாது என்பதை நான் ஒத்துக் கொள்ள மாட்டேன். ஒரு பெண் உண்மையான இன்பத்தை அடைய வேண்டுமென்றால் துறவியாக ஆனால்தான் முடியும்.

நாம் இன்றைக்கு ரொம்பவும் அவசரமான உலகத்தில் வாழுகிறோம். இந்தப் பரபரப்பான உலகில் கடவுளைப் பற்றி நினைக்கக்கூட நேரமில்லை. அப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைத்து, நல்ல நெறியுடன் வாழும் வாழ்க்கையாகிய துறவி வாழ்க்கையை மேற்கொண்டால் கண்டிப்பாகக் கடவுளை அடையலாம்.

கஸ்தூரிபாய், சாரதா அம்மையாரெல்லாம் இல்லறத் துறவிகளாக வாழ்ந்தார்கள், உண்மைதான். அதற்குக் காரணம் அவர்களுடைய கணவன்மார்களே. கஸ்தூரிபாய்க்குக் காந்திஜியும், சாரதாவிற்கு ராமகிருஷ்ண பரமஹம்சரும் இல்லாமல் சாதாரண ஆண்கள் கணவராக அமைந்திருந்தால் அவர்களால் துறவியாக இருந்திருக்க முடியுமா?

திருமதி வசந்தா சிவராமன்

பெண்கள் சந்யாசி ஆகித்தான் பேரின்பத்தை அடைய வேண்டும் என்பதில்லை. உலகில் தொண்டு செய்வதற்கு எத்தனையோ வழி வகைகள் இருக்கிறது. பெண்கள் வீட்டை சீர்திருத்த அவசியமானவர்கள். அவரவர்கள் வீட்டை சரி செய்தால்தானே நாட்டை ஒழுங்கு படுத்த முடியும். அதற்கும் அப்பால் தொண்டு செய்ய வேண்டும் என்றால் சமூக சேவையாகச் செய்யலாம். இன்னும் எத்தனையோ வழிகள் இருக்கின்றன.

மழலை இன்பத்தை விட பேரின்பம் ஒன்றிருக்கிறதா?

குமாரி நீலா

நம்முடைய வள்ளுவரே துறவிகளாகும் அவசியமில்லை என்பதை 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' என்று குறிப்பிடுகிறார். ஆண்களுக்கே அவசியமில்லை என்னும் போது, குலவிளக்குகளாகிய பெண்களுக்கு ஏன் துறவு?

குமாரி புவனா

நாளுக்கு நாள் பெண்களுக்குப் பிரச்னைகள் அதிகமாகிக் கொண்டே வருகிறது. அவர்களுக்குச் சமூகத்தில் தகுந்த பாதுகாப்பில்லை. எவ்வளவோ கஷ்டங்களைக் கேள்விப்படுகிறோம். மனம் பதறுகிறது. வாழ்க்கையில் வருத்தப்பட்டுக் கண்ணீர் விடும் சகோதரிகளைப் பார்க்கும்போதுப் மனம் குமுறுகிறது. இப்படிப்பட்ட நிலையில் நிம்மதியான வாழ்வு வாழ்வதற்குப் பெண்கள் சந்யாசிகளாக ஆகலாம் என்பதுதான் என்னுடைய கருத்து.

○ குமாரி கற்பகம் ○ குமாரி கோசலை ○ திருமதி வசந்தா ○ குமாரி நீலா









பெண்களை ஏமாற்றித் திருமணம் செய்து செய்து கொள்ளும் ஆண்களைப் பற்றி அடிக்கடி செய்தித் தாள்களில் படிக்கிறோம்; ஏதாவது ஒரு பெரிய வேலையில் இருப்பதாகச் சொல்லி ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு பெண்ணை மணந்து கொண்டு, பெண்களின் வாழ்க்கையை நாசமாக்கிய காமுகர்களைப் பற்றிக் கேள்விப்படுகிறோம்; ஆனால் இந்தச் செய்தி இன்னும் விசித்திரமானது —

திருமணமாக வேண்டிய நிலையில் இருக்கும் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவளை மணந்து கொள்ள வேண்டும் என்று முயலுகிறார் ஒருவர். தந்தை, யாரும் இல்லாத இந்தப் பையனுக்கு மணம் செய்து தர மாட்டேன் என்று சொன்னவுடன் வழக்கே போடுகிறார் என்னவென்று?

பாதிக்கப்பட்ட லட்சுமி என்ற அந்தப் பெண்ணே சொல்கிறார் கேளுங்கள் :



# கல்யாணம் ஆகாமலே கணவன் போட்ட வழக்கு!

பெரிய குடும்பம் எங்களுடையது. என் தந்தை ரிட்டையர்ட் ரயில்வே ஊழியர். என் குடும்பமே என் ஒருத்தியின் வருமானத்தை நம்பித்தான் இருக்கிறது. என் தம்பி தங்கைகள் படித்துக் கொண்டிருக்கிறார்கள். எனக்கு வயது 28 ஆகிவிட்டதால் எப்படியும் எனக்குத் திருமணம் செய்து பார்த்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தில் என் தந்தை முயற்சி செய்ய ஆரம்பித்தார்.

ஒருசில தினங்களில் சீனிவாசன் என்பவர் எங்கள் வீட்டுக்கு வந்தார். கும்பகோணத்தில் போக்கு வரத்துக் கழகத்தில் தான் பணியாற்றுவதாகவும், தனக்குப் பெண்ணைப் பற்றிய விவரங்கள் பிடித்துப் போய்விட்டதாகவும், உங்கள் பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறேன் என்றும் அவர் என் தந்தையிடம் கூறினார்.

'உங்களுக்கு வேண்டிய பெரியோர்களை அழைத்து வாருங்கள்; மேற்கொண்டு பேசுவோம்' என்று என் தந்தை கூறினார். 'சரி, அழைத்து வருகிறேன்' என்று அவரும் போனார்.

சில நாட்களில் அவர் தனியாகவே மீண்டும் திரும்பி வந்தார். 'எனக்குப் பெரியோர்கள் யாரும் வேண்டியவர்கள் கிடையாது. ஆகவே நாமே மேற்கொண்டு பேசி முடிப்போம்' என்றார் அவர். இதனால் என் தந்தைக்குச் சந்தேகம் தோன்றியது. பெரியவர்கள் யாருமில்லாத உங்களுக்கு என் பெண்ணைக் கொடுக்க மாட்டேன்' என்று என் தந்தை கண்டிப்பாகக் கூறிவிட்டார். அந்த மனிதர் விடாமல் தொடர்ந்து வற்புறுத்தினார். என் தந்தை இறுதிவரை சம்மதிக்காமல் போகவே, அவர் ஆத்திரத்துடன் ஏதோ கறுவிக் கொண்டே புறப்பட்டுப் போனார்.

பிறகு ஆரம்பித்தது எனக்குத் தொல்லை. நான் தினமும் ஆபீசுக்குப் போகும்போதும் வரும்போதும் அந்த மனிதர் என்னைப் பின் தொடர ஆரம்பித்தார். வேறு யாருமற்ற தனிமையான இடம் வழியாகப் போகும் போதும், இருட்டான வழியாகப் போகும் போதும் அவர் என்னை நெருங்கி வந்து, அசிங்கமாகவும், அநாகரிகமாகவும் பேசத் தொடங்கினார்.

இது பற்றி நான் என் தந்தையிடம் கூற, அவர் போலீசுக்குப் பல புகார்களைக் கொடுத்தார். இருந்தும் தொல்லை குறையவில்லை.

சில நாளில் கும்பகோணம் கோர்ட்டில் அவர் என்மீது Restitution of Conjugal Rights (இல்லற வாழ்க்கைக்கு மனைவியைத் திரும்பக் கோரும்) வழக்குப் போட்டிருப்பதாக எனக்கு நோட்டீஸ் வந்தது.

அடுத்து மதுரைக் கோர்ட்டில் இதே போல வழக்குப் போட்டிருப்பதாக சீனுவாசன் எனக்கு நோட்டீஸ் அனுப்பியிருந்தார். அதைத் தொடர்ந்து கோர்ட்டு சம்மனும் எனக்கு வந்தது. நான் மதுரைக்குப் போனதே கிடையாது. என் வழக்கறிஞர் மூலமாக மதுரையில் ஒரு வழக்கறிஞருக்கு வக்காலத்துக் கொடுத்து கோர்ட்டில் வாய்தா வாங்கினேன். இப்படியே விட்டுக் கொண்டிருந்தால், ஒவ்வொரு ஊராக இவர் கேஸ் போட்டு என்னை இழுத்தடிப்பார் என்று நான் பயந்ததால் சென்னை உயர்நீதிமன்றத்தில் மனுப் போட ஏற்பாடு செய்தேன்.

சென்னை உயர்நீதி மன்றத்தில் லட்சுமி சார்பில் மனு தாக்கல் செய்து வாதிட்ட வழக்கறிஞர் திரு எம். வி. எல். நரசிம்மனைக் கேட்டபோது இது குறித்து விவரித்தார்.

இல்லற வாழ்வுக்கு மனைவியைத் திரும்பு மாறு கோருவது போன்ற இல்லற வழக்குகளை (Matrimonial cases) எவரும் எந்த கோர்ட்டிலும் தாக்கல் செய்யலாம். இதற்கு அவர் செய்ய வேண்டியதெல்லாம் திருமணம் நடந்த இடம், தேதி, கணவன் மனைவியாகக் கடைசியாக வாழ்ந்த இடம் ஆகியவைகளைக் குறிப்பிட வேண்டும். அவ்வளவே. கும்பகோணம் கோர்ட்டில் கொடுத்த மனுவில் லட்சுமியுடன் கடைசியாக கணவன் மனைவியாக மானாமதுரையில் வாழ்ந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார். மதுரைக் கோர்ட்டில் போட்ட வழக்கில் இருவரும் கடைசியாக வாழ்ந்த இடம் அழகர் கோவில் என்று குறிப்பிட்டிருக்கிறார். இப்படி ஊர் ஊராக எனது கட்சிக்காரரான லட்சுமி போய் கோர்ட்டில் பதில் சொல்வதானால் அவரையே நம்பியிருக்கும் அவரது குடும்பம் என்னவாகும்? அவர் செலவுக்குப் பணத்துக்கு எங்கே போவார்? ஆகவே, மதுரைக் கோர்ட்டில் உள்ள இந்த வழக்கை சென்னை சிட்டி சிவில் கோர்ட்டுக்கு மாற்ற வேண்டும் என்று லட்சுமி சார்பில் சென்னை உயர்நீதி மன்றத்தில் ஒரு மனு போட்டேன். இந்த மனு நீதிபதி திரு ரத்தினம் அவர்கள் முன்பு விசாரணைக்கு வந்தது. அதன்படி சென்னை 6வது சிட்டி கோர்ட்டுக்கு வழக்கு விசாரணையை மாற்ற நீதிபதி உத்தரவிட்டார்.

இந்த சீனுவாசன் வேறு பல பெண்களுக்கும் இதுபோலத் தொல்லை கொடுத்துள்ளதாகவும் இதுபோல வழக்கு மன்றங்களுக்குப் பல வழக்குகளில் அவர் வந்துள்ளதாகவும் எனக்குத் தகவல்கள் கிடைத்துள்ளன. இவை சம்பந்தமாகவும் அவர் மீது சட்டபூர்வமாக வேறு நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்திருக்கிறேன்.''

பேட்டி: **வி. மஞ்சுளா ரமேஷ்**



முதல் இதழே முழுத் திருப்தியைத் தருவதாக அமைந்து விட்டது. ரஜனி காந்த் என்ன சிகரெட் குடிக்கிறார், படத்துக்கு அவர் வாங்கும் பணம் என்ன என்பன போன்ற அரைத்த மாவையே அரைக்கும் தனமின்றி வித்தியாசமாக அன்புக்கு அலைந்த அவரையும் பாசம் பொழிந்த அந்தத் தாய் திருமதி ரெஜினா வின்செண்ட் அவர்களைப் பற்றியும் ''அம்மாவோட பேசணும்'' என்ற கட்டுரையில் எழுதிய நீங்கள் தொடர்ந்து புதுமையாய்ச் செய்யுங்கள்.

ரத்தினகுமார், மேட்டுப்பாளையம்

புதிய பொலிவில் புதிய வடிவில் புதிய முறையில் மீண்டும் பூத்திருக்கும் மங்கையர் மலர் பெருமளவில் மாதருக்கு மட்டும் பயன் பட்டாலும் ஆடவரும் அதனைப் படித்து மகிழும் வண்ணம் வந்திருப்பது பாராட்டுக் குரியது.

ப. மூர்த்தி, பெங்களூர்

'சாருல் - எனக்காக டிக்கெட் ப்ளீஸ்' நாவல் ஏதோ சுவையான சமாசாரம் என்று எண்ணிப் படித்தேன். ஆனால் அந்நாவல் வாழ்க்கைப் போராட்டங்களுக்கிடையே சிக்கித் திணறும் அரவிந்தா போன்ற பெண்களின் மன இயல்பைச் சித்திரிக்கும் நாவலாய்ப் பரிமளித்தது. லட்சுமி ராஜரத்தினம் அவர்களின் உரைநடையே பிரமாதம்.

ரஜனி காந்த் அவர்களின் வளர்ப்பு அன்னையின் புகைப்படத்தைப் பிரசுரித்தால் என்னவாம்? தொடர்ந்து பல நட்சத்திரங்களின் வாழ்க்கையையும் எதிர்பார்க்கிறோம்.

கலாபாரதி, சங்கரன்கோவில்

சீனி விற்கும் விலையில் ரொட்டியே கிடைக்க மாட்டேன்கிறது. இந்த லட்சணத்தில் உடைந்த கண்ணாடித் துண்டை ஒத்தி எடுக்க ரொட்டியை உபயோகிக்க யோசனை சொல்லும் உங்களை....

பாமாமணி, திருவனந்தபுரம்



''மங்கையர்க்கு வாய்ப்பளித்து மனம் மகிழச் செய்திடும் மங்கையர் மலரே, பூத்துக் குலுங்கி, புதுமைகள் செய்து, பொன் விழா கொண்டாடி, வாசகருக்கு வாய்ப்பளித்து, வாழி நீ பல்லாண்டு''

சாரதா ராமசுவாமி,
குரோம்பேட்டை
உப தலைவி, நேரு நகர்
மாதர் சங்கம்



**ஊருக்குள் ஒரு உபயோகமான சங்கம்!**

பொதுவாக எல்லா ஊர்களிலும் பெண்கள் தங்களுக்கென்று ஒரு சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டு செயலாற்றி வருகிறார்கள். ஏழைகளுக்குத் தையல் கற்றுத் தருவது, நல்ல சமையல் கலையை வளர்ப்பது, பாட்டு வகுப்பு நடத்துவது என எல்லோரும் செய்து வருகின்றனர்.

'இது போன்ற காரியத்தை வேறு யாரும் செய்யவில்லை; நாங்கள்தான் செய்கிறோம்', என்று பெருமை கொள்ளும்படியாக ஏதேனும் சாதனைகள் புரியும் சங்கமாக உங்களுடைய பெண்கள் சங்கம் இருந்தால் எங்களுக்கு எழுதுங்கள்.

அப்படிப்பட்ட ஒரு சங்கத்தையே... பக்கம் 75-ல் காண்கிறீர்கள்.



# கோடையில் ஒரு நாள்

'லக்ஷ்மி'

இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம். நான் வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். யுத்த காலப் பணிகளின் அவசியத்தை முன்னிட்டு நாளின் பகல் நேரத்தை ஒரு மணி கூடுதலாக்கி விட்டிருந்தனர் அரசியலார். அதாவது சாதாரணமாக காலை ஆறு மணியை ஏழு மணியாகக் கொண்டு மக்கள் செயல்படத் தொடங்க வேண்டும்.

நான் வசித்தது மயிலாப்பூர். படித்தது நகரத்தின் மறு கோடியில் இருக்கும் ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி. மூன்று ரூபாய்களுக்குக் கிட்டும் சீஸன் டிக்கெட்டை வாங்கிக் கொண்டு மரவட்டையாக நகர்ந்த டிராம் வண்டிகளில்தான் அந்தக் காலத்தில் நாங்கள் கல்லூரிக்குப் போக வேண்டியிருந்தது. மயிலையிலிருந்து நகரத்தில் உள்ள கடிகாரக் கூண்டு வரை ஒரு டிராம். அதற்குப் பின் வண்ணாரப் பேட்டைவரை அங்கிருந்து கிளம்பும் மற்றொரு டிராம் என்று இரண்டு வண்டிகள் பிடித்து நாங்கள் கல்லூரி போய்ச் சேருவதற்குக் குறைந்தது ஒரு மணி நேரம் பிடிக்கும். யுத்த கால நேர மாற்றத்தை ஒட்டி நாங்கள் ஏழு மணி அளவில் கவனிக்க வேண்டிய அவுட் பேஷண்ட் கிளினிக்கிற்கு ஒரு மணி முன்னதாகவே வந்துவிட வேண்டியிருந்தது. இருள் பிரியுமுன்பே வீட்டை விட்டுக் கிளம்ப சில சங்கடங்கள் ஏற்பட்டன.

காலையில் வீட்டை விட்டுக் கிளம்பு முன் குளிக்க வெந்நீர் தயாராக இருக்காது. பச்சைத் தண்ணீரில் குளித்துவிட்டு அவசரமாகக் கிடைக்கும் பழைய பால் காப்பியை வாயில் ஊற்றிக் கொண்டு டிராம் பிடிக்க ஓடவேண்டும். தாமதமாகிவிட்டால் கொத்தவால் பஸாருக்குக் காய்கள் வாங்கப் புறப்படும் காய்கறிக்காரர்கள் ஆளுக்கு ஒரு பெரிய கூடையுடன் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விடுவார்கள். ஸ்டான்லி ஆஸ்பத்திரியிலிருந்து

கண் நோய் ஆஸ்பத்திரி, மன நோய் ஆஸ்பத்திரி, பிள்ளை பேறு ஆஸ்பத்திரி என்று நகரத்தில் உள்ள அத்தனை மருத்துவ மனைகளுக்கும் சிகிச்சை முறைகளைக் கற்றுக்கொள்ளப் போய் வர வேண்டியிருப்பதால் நாளின் பெரும் பகுதியை நாங்கள் டிராம் பயணத்திலேயே கழித்துக் கொண்டிருக்க நேர்ந்தது. நேரத்தை நாசமடிக்க விரும்பாது டிராம் வண்டியில் ஒரு மூலையில் ஒடுங்கிக்கொண்டே பாடங்களைப் படித்துக் கொண்டு பயணப்படுவது வழக்கம்.

என்னுடன் கூட கல்லூரி போய் வர வகுப்புத் தோழி ஒருத்தி அருகில் வசித்துக் கொண்டிருந்தாள். ஒரே கல்லூரி — ஒரே வகுப்பு என்ற நெருக்கத்திலே நாங்கள் எப்பொழுதும் சேர்ந்தே கல்லூரிக்குப்போவோம் சேர்ந்தே திரும்புவோம். சேர்ந்தே வகுப்புகளுக்கு மட்டம் போடுவோம்.

ஒரு நாள் இருவருமே அவசரம் அவசரமாகப் புறப்பட்டிருந்தோம். பகல் சாப்பிட ஏதும் எடுத்துச் செல்லவில்லை. ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் அவுட் பேஷண்டைக் கவனித்துவிட்டு ராயப்பேட்டையிலிருந்த காச நோய் ஆஸ்பத்திரிக்கு சிகிச்சை முறைகளைக் கற்றுக்கொள்ளச் செல்ல வேண்டியிருந்தது. வெறும் காப்பியுடன் காலையில் புறப்பட்டிருந்த எங்களுக்குப் பகல் பன்னிரண்டு மணிக்கு மேல் பசியைத் தாங்கிக்கொள்ள

முடியவில்லை. காச நோய் ஆஸ்பத்திரி தலைவருடன் ஆஸ்பத்திரியைச் சுற்றிப் பார்த்து விட்டு சிகிச்சை முறைகளைப் பற்றி அவர் பேசுவதைக் கேட்டுக் குறிப்பெடுத்துக் கொண்டு நாங்கள் வெளியே வருவதற்குள் பகல் ஒரு மணியாகி விட்டது. மண்டை பிளக்கும் வெய்யில். பசி காதை அடைத்தது. ஹோட்டலில் சாப்பிட மணி பர்ஸை எடுத்து துழாவினோம். இருவரிடமும் அதற்குப் போதிய பணம் இருக்கவில்லை. ஒரு அடி கூட மேலே எடுத்து வைக்க முடியாது போன்று சோர்ந்து போய் விட்டேன். என் தோழியும் அதே நிலைதான்.

'கவலைப்படாதே. எங்கள் நண்பர் ஒருவரின் வீடு அருகில் இருக்கு. சாப்பாட்டு நேரந்தான். போய் நிற்போம். கட்டாயம் அவர்கள் சாப்பிடச் சொல்லி உபசரிப்பாங்க. நாம் பிகு செய்யாது சாப்பிட்டுவிட்டு கல்லூரிக்குக் கிளம்பலாம்...' உற்சாகம் கொடுத்தாள் தோழி.

அந்த வீட்டைத் தேடி மெள்ளநடந்தோம். சற்றுத் தொலைவில் ஒரு சந்தில் இருந்த வீட்டை அடைவதற்குள் வெய்யில் நெருப்பாகத் தலையில் வீசியது. குடல் சுருண்டு வலித்தது.

பசியில் பத்தையும் பறக்க விட்டு வந்து நின்ற எங்களைக் கண்ட வீட்டுத் தலைவி மலர்ந்த முகத்துடன் வரவேற்றாள். உடனேயே எனக்குப் புதுத்தெம்பு ஏற்பட்டது.

''நல்ல வெய்யிலில் வந்திருக்கிங்க.... இங்கே எங்கே? ஓ! காச நோய் ஆஸ்பத்திரிக்கு வந்தீங்களா? இப்பச் சிரமப்பட்டுப் படிச்சாத்தானே பின்னாலே சௌகரியமா வாழ முடியும்... படிக்கிற வயசில் படிக்கணும்... சாப்பிடற வயசில் சாப்பிடணும்... ஆமாம் சாப்பிட்டு விட்டுத்தானே வரீங்க... பால்காரன் நாலு மணிக்கு வந்துடுவான். காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம், உட்காருங்க'' —உபசரித்தாள்.

சமையலறை மேடை சுத்தமாகக் கழுவப் பட்டிருந்தது. மீதிச் சோற்றைப் பாத்திரத்தில் தூக்கிக்கொண்டு வேலைக்காரி வெளியேறிக் கொண்டிருந்தாள். வெட்கத்தை விட்டுச் சாப்பாட்டைத் தேடிக் கொண்டு வந்த இடத்தில் இப்படியா? — அதிர்ந்து போனோம்.

என்னவோ பேசிவிட்டு விரைவாகக் கிளம்பினோம். வேகாத வெய்யிலில் நடந்து டிராமைப் பிடித்து மாலை வகுப்புகளுக்காக நாங்கள் மீண்டும் கல்லூரிக்கு வருவதற்குள் நேரம் யுகமாகத் தெரிந்தது. வகுப்பு துவங்கக் கொஞ்ச நேரம்தான் இருந்தது. பசியில் தள்ளாடிய எங்களால் எதுவும் சாப்பிடாது பாடங்களைக் கவனிக்க முடியாது போன்ற ஒரே களைப்பு.

நேரே கல்லூரிக் காண்டீனுக்கு விரைந்தோம்.

பகல் உணவு நேரம் தாண்டி விட்டதால் நாயர் பாத்திரங்களைச் சுத்தப்படுத்த அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்.

''என்ன இக்ர நாழியா? ஒண்ணும் கிட்டிட்டு இல்லே.'' சாப்பாடு ஏதும் இல்லை என்று கையை விரித்தார்.

''நாயர் எங்களுக்கு ஏகப் பசி. சாப்பிட ஏதாவது வேண்டும்'' — அழமாட்டாத குறையாக இருவரும் பெஞ்சில் தொப்பென்று உட்கார்ந்து விட்டோம்.

''ரெண்டு பழமுண்டு. மதியோ?'' — கேட்டுக் கொண்டே அவர் இரண்டு வாழைப் பழங்களையும் இரண்டு டம்ளர் தண்ணீரையும் மேஜை மேல் கொண்டு வந்து வைத்தபோது சங்கநிதி பதுமநிதி எல்லா நிதிகளையும் ஒட்டுமொத்தமாக அடைந்த மகிழ்ச்சி.

ஆளுக்கொரு பழத்தைச் சாப்பிட்டுவிட்டு அவசரமாகத் தண்ணீரைக் குடித்துவிட்டு வகுப்புக்குக் கிளம்பிய அந்த அனுபவத்தை நான் மறக்கவேயில்லை. அதை நினைத்துக் கொண்டு பல முறை சிரிக்கிறேன். ஆனால் அப்பொழுது எங்களுக்கு அழுகைதான் வந்தது. அப்படி ஒரு பசி!

'நாங்கள் அந்தக் காலத்தில் மிகவும் கஷ்டப்பட்டுப் படித்தோம். பணத்தின் அருமை தெரியாது இந்தக் காலத்தில் நீங்களும் படிக்கிறீர்களே?' என்று என் மகனை நான்சாடினால்,

''ஒருத்தர் கஷ்டப்பட்டால்தானே இன்னொருத்தர் சுகமாக வாழ முடியும். நீங்கள் அந்தக் காலத்தில் கஷ்டப்பட்டுப் படித்தீர்கள். அதன் பலன் இந்தக் காலத்தில் உங்கள் குழந்தைகளான நாங்கள் வசதியாக—சுகமாகப் படிக்கிறோம். அவ்வளவுதான்!'' என்கிறான்.

இதற்கு நான் மௌனம் சாதிக்கிறேன்.

---

''சட்டசபையை உடனே கூட்ட வேண்டும்! இல்லையேல்...''

''என்ன செய்வீர்கள்?''

''மூடிக்கிடக்கும் சபைக்குள் தேங்கியிருக்கும் குப்பை கூளங்களை நானே பெருக்கிக்கூட்டி வெளியேபோட நேரிடும்.''





# அன்புக்குழந்தாய்!
# இளமையில் கல்....

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களை
உங்கள் குருவாகக் கொண்டு...



உங்களுக்கு மிகவும் பிடித்தது கொழுக்கட்டை.

கொழுக்கட்டை ரொம்பப் பிடித்தவர் பிள்ளையார். உங்கள் இடர்களைக் களைபவர் அவரே. அவரைத் துதிக்க ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய ஸ்ரீ கணேச பஞ்ச ரத்தினம்.

நீங்கள் இராமாயணம் முழுவதையும் நூற்று எட்டே வரிகளில் பாடி மகிழலாம். இதற்கு நாம ராமாயணம் இருக்கிறது.

அனுமானை வணங்கினால் உங்களுக்கு அறிவு, சக்தி, புகழ், தைரியம், அச்சமின்மை, ஆரோக்கியம், சுறுசுறுப்பு இன்னும் என்னவெல்லாமோ கிடைக்கும் அனுமனைப் பாடித்துதித்த ஸ்ரீ துளசிதாஸ் அருளியது அனுமான் சாலிஸா.

இம்மூன்று துதிப்பாடல்களும் மற்றும் தசாவதார கீத கோவிந்தமும், மதுராஷ்டகமும், ஸ்ரீவெங்கடேச்வர பஞ்சரத்னமாலா எல்.பி. 3 இசைத் தட்டில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களால் பாடப்பட்டுள்ளது. இந்த இசைத்தட்டை உங்கள் பெற்றோர்களை இன்றே உங்களுக்குப் பரிசாக அளிக்கச் சொல்லுங்கள். கேட்டு கேட்டு மனப்பாடம் செய்து பக்தியுடனும் பாவத்துடனும் பாடி உங்கள் இஷ்ட தெய்வங்களின் ஆசியைப் பெறுங்கள்

அருமைப் பெற்றோர்களே! இந்த எல்.பி. 3 இசைத்தட்டு ஒன்றை உங்கள் குழந்தைகளுக்கு அவர்கள் பிறந்த நாளன்றோ அல்லது தீபாவளி நன்னாளிலோ பரிசாக அளித்து அவர்கள் பக்தியுடன் பாடுவதைக் கேட்டு மகிழுங்கள். இறையுணர்வும் இசையும் கற்பிக்க இதுவே சிறந்த வழி.



EMI

HMV

ஒலிமயமான எதிர்காலம்

## தி கிராமபோன் கம்பெனி ஆப் இந்தியா லிட்.

**வ**னிதா!

காலை அவசரத்தின் அலை மோதல்களுடன் பொழுது ஏன் விடிகிறது என்ற துடிப்பு உனக்கு ஏற்படுவது இயற்கைதான்.

ஐந்து மணிக்கே எழுந்து, அவசர அவசரமாகப் பல் துலக்கிமுகம் கழுவி, துடைத்துக் கொள்ளத் துண்டைத் தேடும்போது பால்காரன் குரல் கேட்கிறது. அல்லது பக்கத்து பால் பங்கில் பால் வந்திருக்குமா என்ற கவலை மனத்தைக் குடைகிறது. இருட்டில் வெளியே போய்ப் பால் வாங்கப் பயம்.

சரி, கணவரை எழுப்பிப் போகச் சொல்லலாம் என்று அவரை எழுப்பினால், நித்ரா தேவியின் மையலில் சிக்கியவர், எழுந்திருக்கப் புரட்சி செய்கிறார்!

அவசர அவசரமாக, டிகாக்ஷனைப் போட்டுப் பால் படலம் முடிந்து, காப்பிக் கடை ஓய்வதற்குள் மணி ஆறைத் தாண்டிவிடுகிறது.





சமையல் படலம்! என்ன சமைப்பது? கையில் டிபன். பிறகு குழந்தைகள் இருந்தால் அவர்களுக்கு. இல்லை, மற்ற பெரியவர்கள் இருந்தால் இன்னும் பிரச்னைகள்.

சாம்பாரா, ரசமா? என்ன பொரியல்? 'இதுவா அதுவா, எது வேண்டும் சொல் மனமே' என்ற வாக்கு வாதம். கியாஸ் அடுப்போ, ஸ்டவ்வோ எதுவானாலும் சமையலை நீதானே செய்ய வேண்டும்?

இதற்கிடையில் குளியல் அவசரம். உங்கள் வீட்டுக் குழாயில் எப்போதும் தண்ணீர் வருமா? ஒருசில மணி நேரங்கள்தான் வரும் என்றால், தீர்ந்தது!

அவசரத்துக்குக் கையை விட்டால் அரிக்கும் சட்டியில் கூட கை நுழையாது என்பார்கள். அது எவ்வளவு உண்மை என்பது புடவையைத் தேடினால், ரவிக்கையைக் காணாமல், 'ப்ரா'வைத் தேடினால் துண்டைக் காணாமல் தவிப்பவர்களுக்குத்தான் புரியும்.

கிடைத்ததை எடுத்துக் கொண்டு குளியலை முடித்து வெளியே வந்தால். அப்போதுதான் சாவகாசமாக, பேப்பரும் கையுமாக உட்கார்ந்தபடி, காப்பியை எதிர்பார்த்திருக்கும் கணவர்...கோபம் வரத்தான் செய்யும்.

''தானே போய்க் காப்பி கலந்து சாப்பிட்டால் என்னவாம்'' என்ற ஆத்திரம் வரும்.

குழந்தைகள் இருந்தால் ''அவங்களை எழுப்பிப் பல் தேய்க்கச் சொல்லி, குளிப்பாட்டினால் என்ன கொள்ளை?'' என்று முணுமுணுக்கத் தோன்றும்.

ஆபீசுக்குப் போகக்கையில் டிபனுக்கு ஒரு அடுப்பு. சமையலுக்கு ஒரு அடுப்பு. இடையே குழந்தை பராமரிப்பு. கணவனைக் கவனிக்க.. பம்பரமாய்ச் சுழல வேண்டிய நேரம்.

பின்கட்டில் வேலைக்காரி, ''அம்மா! 'விம்' போடு'' என்று குரல் கொடுப்பாள்.

''கறிகாய் வேணுமா?'' வாயிற்புறம் காய்கறிக்காரனின் அறைகூவல்.

''அம்மா! எனக்கு 'ஹோம் ஒர்க்!'' — குழந்தை.

''வனி! என் பனியன் எங்கே வச்சே?''— கணவன். இன்னும் தன் தலையைப் பிய்த்துக்கொள்ளாத குறை.

''எங்கேயாவது ஓடிடப் போறேன் ஒரு நாள். அப்பப்பா... என்னாலே முடியாது... இந்த ஆபீஸ் போய்விட்டு... வீட்டையும் கட்டிக்கிட்டு.... பல்லைக் கடிக்கிறாய், உறுமுகிறாய்.

உன் பிரச்னைகள் எனக்குப் புரிகிறது. உன்னைப் போல இரட்டை வேலைகளைச் சமாளிக்க நினைக்கும் பெண்களுக்கும் விளங்குகிறது. ஆனால் இதற்குத் தீர்வு? அதை நீ யோசி. நீ படித்தவள். வேலை செய்பவள். ''ஆணுக்குப் பெண் இங்கு இளைப்பில்லை காண்'' என்ற பாரதியின் வாக்குப்படி புதுமைப் பெண்.

பொருளாதார நெருக்கடியில் ''காதல் ஒருவனைக் கைப்பிடித்தே அவன் காரியம் யாவினும் கை'' கொடுப்பவள். அதை



# வேலைக்குச் செல்லும் பெண்ணே!



நித்யா மூர்த்தி



மறந்துவிடாதே. சற்றுச் சிந்தித்துச் செயல்படு.

முதலில் காலை வேளைப் பிரச்னைகளை மட்டும் சமாளிக்கக் கற்றுக்கொள்.

காலை பால்... அதை இருட்டில் சென்று வாங்க முடியாதா? கறிகாய்.. அதைத் தினசரி வாங்கி வைக்க முடியாதா? தயிர்... அதை வெளியே உரைகுத்தி வைத்தால், மாலை வீடு திரும்புவதற்குள் புளித்துவிடுமா? சமையல்... மாலை சோர்ந்து வருவதற்குள் மீண்டும் சமையலுக்கு ஆயத்தமாக முடியாதா? வழிகள் என்ன?

முதலில் ஒரு 'பிரிட்ஜ்' அவசியம். கண்களை அகல விரிக்காதே. இது ஆடம்பரமல்ல. பிரஷர் குக்கர், கியாஸ் அடுப்பு எப்படி அவசியமோ அதுபோல் இது அவசியம்தான்.

பாலை முதல் நாளே வைத்து விடலாம். காலை அவசரக் காப்பிக்கு உதவும். காய்



கறிகளை ஒரு வாரத்துக்கு மொத்தமாக வாங்கி அடைத்து வைக்கலாம். நேரம் மிச்சம். சமையலை இரவுக்கும் சேர்த்துச் சமைத்து அதை பிரிட்ஜில் வைத்துவிட்டு இரவில் எடுத்துச் சுட வைத்துச் சாப்பிடலாம். சோர்வு ஏற்படாது. தயிரை உறைந்ததும், பிரிட்ஜில் வைத்து விட்டால், புளிக்காது. பல சமயங்களில், புளிக் காய்ச்சல், சில ஊறுகாய்கள் முதலியவும் கெடாமல் சில நாட்கள் பிரிட்ஜில் இருக்கும்.

எனவே, ஒரு நகை வேண்டாம். அது இந்தக் காலத்தில் பாங்க் பெட்டகத்தில் தூங்கப் போகிறது. அதற்குப் பதில் பிரிட்ஜ் வாங்கலாம். இல்லையெனில் நாலு நைலக்ஸ், இரண்டு காஞ்சிபுரம் புடவைகளைத் தியாகம் செய்து தவணை முறையிலாவது 'பிரிட்ஜ்' வாங்கு. இது தவறல்ல.

மறுநாள் ஆபீஸ் புறப்படு முன் எடுத்துச் செல்ல வேண்டிய கைப் பையில், பஸ் பயணத்துக்கான சில்லறையை மாற்றி, சுலபமாக எடுக்கும்படி வைத்துக் கொள். மிக அதிகமான பணத்தைப் பையில் வைக்காதே. கொஞ்சம் கூடுதலான தொகையைச் சட்டென எடுத்துவிட முடியாதபடி பையில் வைத்துக்கொள். பவுடர், சீப்பு, போன்ற அழகுச் சாதனங்கள், கர்சீப் யாவற்றையும் பையில் நிலைவாக வைத்துக்கொள். மடக்குக் குடை வைத்துக் கொள்ளும்வழக்கம் உண்டா? மறக்காமல் எடுத்துப் பையில் வை.

மறு நாள் உடுத்த வேண்டிய சேலை, ரவிக்கை ஆகியவற்றைத் தயாராக வை. குளியலறை அவசரத்தில் தேட வேண்டாம்.

மறுநாள் சமையல் பட்டியல் தயார் செய். இன்ன பொரியல், சாம்பார் என நறுக்கி அதனதன் பாத்திரங்களில் வைத்து பிரிட்ஜில் காப்பாற்றிவிட்டால், காலைப் பரபரப்புக் குறையும்.

கணவரையும் கூட உதவிக்கு அழைக்கலாம். அவரது பனியன், ஷர்ட், பாண்ட் எல்லாவற்றையும் எடுத்து வைக்க உதவு.

மாலை வருவதற்குள் பால்காரர் போய் விடுவார் என்ற பயமானால் காலையிலேயே ஒரே நேரமாகப் பாலை வாங்கிவிடலாம். 'பிரிட்ஜ்' கை கொடுக்கும்.

நிறைய ஊதியம் வரும் உத்தியோகமானால், நம்பகமான, நாணயமான (அவரவர் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது!) உதவியாள் ஒருத்தியை வீட்டில் அமர்த்திக் கொள்ளலாம். நூறு ரூபாய் கொடுத்தாலும் பல சிரமங்களும், பொறுப்புக்களும் குறையுமல்லவா?

அப்படி இல்லையேல், முன்பு குறிப்பிட்டதுபோல், தன் கையே தனக்குதவிதான். காலையிலேயே வீட்டு வேலைக்காரியிடம், சகல வேலைகளையும் முடித்துக் கொண்டு, ஆபீசுக்குக் கிளம்பு!

## திருமதி ஜகதா சேகர்

முன்பின் தெரியாதவர்களுக் கெல்லாம் உதவுவது, யாருக்கு எந்த ஆபத் தென்றாலும் ஓடுவது இப்படி இவர் வசிக்கும் வட்டாரத்தில் இவர் ஒரு முக்கியபுள்ளி. மனிதாபிமானம் மிக்க இந்தப் பெண்மணியின் சிரித்த முகம் எப்போதும் யாருக்கும் மகிழ்ச்சியையே கொடுக்கும். தானும் சந்தோஷமாகி, மற்றவர்களையும் சந்தோஷப் படுத்துவது ஒரு சாதனையே, அல்லவா? மலையாளத்தில் பல சிறுகதைகள் எழுதியுள்ள இவர், தமிழிலும் தற்போது எழுதி வருகிறார்.



இவர்கள்

# திருமண மலர்

பி. எஸ்ஸி படித்து மத்திய அரசு அலுவலகத்தில் மாதம் 800/– பெறும் சென்னை வாசியான 30 வயது நெல்லை வெள்ளாளர் வாலிபருக்குப் பண்புமிக்க 25 வயதுக்குட்பட்ட பணிபுரியும் (அ) பட்டதாரி மணப் பெண் தேவை. ஜாதி, மதம், பணம் பொருட்டில்லை.

**பெட்டி எண் 1**

எட்டாவது வரை படித்த 21 வயது குடும்பப்பாங்கான பெண்ணுக்கும், ரூ 300/– மாத வருமானம் பெறும் 23 வயது பி. காம் பட்டதாரிக்கும், கள்ளர் இனத்தில் வரன் தேவை.

**பெட்டி எண் 2**

அய்யங்கார் வடகலை பாரத்வாஜம், அவிட்டம், 30 வயது, 5'5" பி. எஸ்ஸி, சென்னையில் மத்திய அரசாங்கத்தில் வேலை, மாதம் ரூ 600 சம்பாதிக்கும் பெண்ணிற்கு நல்ல நிலையில் உள்ள இளைஞர் தேவை.

**பெட்டி எண் 3**

அய்யர் வகுப்பைச் சேர்ந்த, ஜூனியர் பி. ஏ. படித்த 31 வயது பார்வையற்ற இளைஞருக்கு அவருடைய இனத்தில் பெண் தேவை. சொந்தப் ப்ளாட் உரிமையாளரான இவர் பம்பாயில் பிரசித்திபெற்ற நெசவாலையில் மாதம் 800/– வருமானத்துடன் பணிபுரிகிறார்.

**பெட்டி எண் 4**

பி. எஸ்ஸி பட்டதாரியான, ரூ 1000/– வருமானத்துடன் தொழிற்சாலை நடத்தும் 27வயது யாதவ வகுப்பு இளைஞனுக்கு அதே இனத்தில் பெண் தேவை.

**பெட்டி எண் 5**

மத்திய அரசாங்க அலுவலகத்தில் குமாஸ்தாவாகப் பணியாற்றும் 30 வயது பிராமண இளைஞருக்கு, வேலை செய்யும் பெண்களின் பெற்றோர்களிடமிருந்து ஜாதகம் வரவேற்கப் படுகிறது.

**பெட்டி எண் 6**

பிராமணர் வடமாள் வகுப்பைச் சேர்ந்த 35 வயது பட்டதாரிப் பெண்ணுக்கு வரன் தேவை. காலில் சிறிதே ஊனமுள்ள இவர் மத்திய அரசாங்கத்தில் மாதம் ரூ. 500/– வருமானத்தில் பணிபுரிகிறார். ஆத்ரேய கோத்ரம்.

**பெட்டி எண் 7**

## திருமண மலர்

திருமணம் செய்து கொள்ள விரும்பும் ஆண்களும் பெண்களும் **மங்கையர் மலரில்** விளம்பரம் செய்யலாம். கட்டணம் ரூ. 10/- மட்டுமே. இது **மங்கையர் மலர்** என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பப்பட வேண்டும். விளம்பரத்திற்குப் பதில் அனுப்புபவர் பெட்டி எண்ணை மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

முகவரி :

'திருமண மலர்'ப் பகுதி
மங்கையர் மலர், கிண்டி, சென்னை-32

**மாதிரி விளம்பரம்**

பி.எஸ்ஸி படித்து அரசாங்க வேலையிலுள்ள ரூ. 500/- மாத வருமானம் பெறும் 25 வயது முதலியார் வகுப்பு இளைஞனுக்கு அதே இனத்தில் பெண் தேவை.

பெ. எண்.

**மங்கையர் மலர்**

# பின்னல் கற்றுக்கொள்வோம்

நிர்மலா தேசிகன்

## சென்ற இதழ் தொடர்ச்சி

இரு ஊசிகளின் பிரயோகம்: இந்த முறையைப் பின்பற்றினால் பின்னலின் விளிம்பு அதாவது ஓரம் துவாரங்களுடன் அமைகிறது. ஆகையால் பின்னலின் அகலம் விரிந்துகொள்ளும். முன்பே கூறியதுபோல் சிறிது நூலைப் பின்னாமல் விட்டு மாட்டிக் கொள்ளவும். இந்த ஊசியை இடது கையில் பிடித்துக் கொள்ளவும். வலது கை ஊசியின் முனையை வளையத்தின் உள்ளே நுழைத்து, வலது கையில் உருண்டையிலிருந்து வரும் நூலை ஊசியின் முனையைப் பின்புறமாகச் சுற்றி முன்னால் கொண்டு வரவும். நூல் வளையத்தின் வழியாக இழுத்துக்கொண்டால் ஊசியில் தையல் நிற்கும். இவ்விதமாகத் தொடர்ந்து எத்தனை தையல்கள் வேண்டுமோ அமைத்துக் கொள்ளவும்.

பின்னலின் விளிம்பு (ஓரம்) உறுதியாக இருக்க வேண்டுமானால் முதல் வரிசைத் தையலைக் கண்ணிகளின் பின்புறமாக பின்னிக்கொள்ளவும். இந்த வரிசைக்குப் பிறகே டிசைனைத் தொடங்கவும்.



### பின்னலில் உபயோகிக்கும் தையல் வகைகள்:

பின்னலில் முக்கியமாக உபயோகிக்கும் ஆதாரத்தையல்கள் இரண்டே தான்-பின்னல் தையல், மறு பின்னல் தையல். எல்லாவித பின்னல் டிசைன்களிலும் இவ்விரு தையல்களின் மாறுபட்ட சேர்க்கையினால்தான் அமைக்கிறோம். ஆகையால், டிசைன்களுக்குத் தாவுவதற்கு முன் இவ்விரு தையல்களையும் நன்றாக உருவாக்கி, பின்னக் கற்றுக் கொள்வது மிக மிக அவசியம். முக்கியம் கூட.



**பின்னல் தையல்:** இதில் நூலை ஊசியில் உள்ள கண்ணிகளின் பின்புறம் செலுத்தி அமைக்க வேண்டும். தேவையான கண்ணிகளை ஓர் ஊசியில் அமைத்துக் கொண்டு அந்த ஊசியை இடது கையில் பிடித்துக் கொள்ளவும். இரண்டாவது ஊசியை இடது கை ஊசியில் உள்ள முதல் கண்ணிக்குள் நுழைக்கவும். நூலைக் கண்ணியின் பின்னால், ஊசிகளுக்கு நடுவில் கொண்டு வந்து வலது கையில் உள்ள இரண்டாவது ஊசியின் நுனியைச் சுற்றவும். இப்பொழுது அப்படியே நூலை இழுத்து இரண்டாவது ஊசியில் ஒரு வளையம் அமைத்துக் கொள்ளவும். இந்த வளையத்தை இடது கை ஊசியிலிருந்து வலது கை ஊசிக்கு மாற்றிக் கடைசி



வரை தொடர்ந்து செய்யவும். முடிந்ததும் இதை அப்படியே திருப்பி அடுத்த வரிசையிலும் முன்போலவே செய்யவும்.

**மறு பின்னல் தையல்: (Pulstithe):** இதில் நூலை ஊசியில் உள்ள கண்ணிகளின் முன்புறம் செலுத்தி தையல் அமைக்கவேண்டும். தேவையான கண்ணிகளை ஓர் ஊசியில் அமைத்துக் கொண்டு ஊசியை இடது கையில் பிடித்துக் கொள்ளவும். முன் பக்கம் வைத்துக் கொண்டு வலது கையிலுள்ள ஊசியின் நுனியை இடது கை ஊசியிலுள்ள முதல் தையலுக்குள் நுழைக்கவும். நூலை இடது கை ஊசியின் நுனியைச் சுற்றி பிரதட்சணமாக (வலமிருந்து இடமாக) சுற்றவும். அந்த நூலை அப்படியே இழுத்து ஒரு வளையம் அமைத்துக் கொள்ளவும். இடது கை ஊசியிலுள்ள வளையத்தை வெளியே கொண்டு வரவும். இதைப் போல அந்த வரிசை முழுவதிலும் மறு பின்னல் தையல் அமைக்கவும்.

**தையல் அளவுகளும் அமைப்பும்:** பின்னல் வேலையில் இது மிகவும் முக்கியமானது. இவைதான் உடையின் தரத்தையும் அளவையும், அமைப்பையும் நிர்ணயிக்கின்றன. ஒரு சதுர அங்குலத்தில் Squireinch இருக்கும் தையல்களும் வரிசைகளும்தான் கம்பளி உடையின் அளவுக்கு முக்கியமானது. பின்னல் வேலை செய்யும்போது நூலைத் தளர்த்திவிடுவது தையல்கள் ஒழுங்காக அமைய உதவும். எல்லாக் கம்பளி உடை அமைப்புக்களிலும் தையல் அளவுகள் கட்டாயமாகக் குறிக்கப்பட வேண்டும். உடை அமைப்பதற்கு ஊசியையும், நூலையும் பயன்படுத்தி ஒரு சிறு சதுரம் அமைத்துக்கொள்ள வேண்டும். சரியாக அமையும்வரை சதுரங்கள் செய்து பார்த்த பின்னரே உடை அமைக்க வேண்டும்.

**தையல் நீக்கம்:** முழுமையடைந்த தையல் பாகங்களைமுடிக்க உபயோகிக்கப்படும் முறை: இடது கையில் உள்ள ஊசியிலிருந்து பின்னல்களை வலது கையில் மாற்றுகையில் இரு முழு பின்னல்களை முடித்த பிறகு முதல் பின்னலை எடுத்து இரண்டாவது பின்னலின் மேலாக ஊசியிலிருந்து மெல்ல நீக்கிவிடவும்.

# மேஜை விரிப்பு

**தேவையான பொருட்கள்:**
கோட்ஸ் ஆங்கர் கொர்சர் குரோஷா நூல் பருத்தி எண். 20 (20gm) மதுரை கோட்ஸின் தயாரிப்பு விருப்பமான கலரில் 4 பந்துகள். இதற்கு வேண்டிய நூல்களை ஒரே சமயத்தில் வாங்குவது நல்லது. ஸ்டீல் குரோஷா ஊசி எண் 251. தையல் தளர்வாக இருந்தால் பருமனான ஊசி உபயோகிக்கவும். மேலே கொடுத்திருக்கும் நூல் அளவு 2 விரிப்பு தயாரிக்கப் போதுமானது.

**தையல் அளவு:**
5 கட்டம் 5 வரிசை 2.5 செ. மீ. 40.5–30.5 செ.மீ. (நீளம், அகலம்)

**சுருக்கம்:**
சுருக்கம்: சங் (ch) ந. தை. (Sl. St) இ.கு. (8C) மு. (முன்நூல்) (Treble) தி. செ. (திரும்பவும் செய்யவும்) க. கண்ணி (SP) — 2 சங் விட்டு அல்லது முன்நூல் 1 மூனு விடுத்த சங்கிலியில் மூனு. அபு அடைப்பு (Block)



4 முனு — 3 முனு ஒவ்வொரு அடைப்பிற்கும் 248 சங்கிலி பின்னவும்.

முதல் வரிசை :

ஆரம்பத்திலிருந்து 8வது சங் ஒரு முன்னூல் (2 சங் விட்டு விட்டு 2 சங், 1 முனு, அடுத்த சங்) 80 தடவை. 5 சங், திருப்பி 81 கண்ணி.

2வது வரிசை :

முதல் முனு விட்டு அடுத்த முனுவில் ஒரு முனு. (கண்ணி விட்டுக் கண்ணி ஆரம்பத்திலிருந்து) (2 சங், ஒரு முனு அடுத்த முனு) 79 தடவை (79 கண்ணி விட்டு 79 கண்ணி) (2 சங் விட்டு 2 சங், 1 முனு அடுத்த சங்) (கண்ணி விட்டுக் கண்ணி கடைசிவரை) 5 சங்கிலி திருப்பவும்.

3வது வரிசை :

81 கண்ணி 5 ch திருப்பி

4வது வரிசை :

கண்ணி (அடுத்த கண்ணியில் 2 முனு — அதிலேயே இன்னொரு முனு — 4 தடவை



பண்ணவும்.) (4 கண்ணியில் 4 அடைப்பு) (5 கண்ணி 4 அடி 64 கண்ணி 5 சங் திருப்பவும்.

5வது வரிசை :

63 கண்ணி — 1 அடி — 3 முனு — 1 முனு — (அடி மேல் அடி)
(2 சங் விட்டு 2 முனு. அடுத்த முனுவில் ஒரு முனு) 2 தடவை (2 அடியின் மேல் 2 கண்ணி 2 அடி 1 கண்ணி 1 அடி 1 கண்ணி 2 அடி 2 கண்ணி 2 அடி 3 கண்ணி 5 சங் திருப்பவும். செய்து வரும் விரிப்பை மேல் வரை பின்னி விரிப்பைத் திருப்பி, கடைசிவரை மேலே சொல்லியபடி பின்னவும்.

முடிக்கும் விதம் :

(முதல் வரிசை): கடைசி முனு 3 இரு செய்து ஒரு வரிசை இ.கு.
கடைசி கண்ணி வரை பின்னவும். அந்த மூலையிலிருந்து 5 இ.கு. பின்னவும்.
மறுபடியும் முடிக்கும்பொழுது 3 தடவை 3 இ.கு. விட்டு விட்டு ந. தை.
முதல் இ. கு.வில் பின்னவும்.

2வது வரிசை :

2வது வரிசை: 3 தை. பின்னிய இடத்தில் 3 இ.கு. பின்னி நடுப்பக்கம்ரை 1 இ.கு.வில் 1 இ. கு. பின்னி, நடுவில் 3 இ.கு. பின்னி, மறுபடியும் 1 இ.கு.வில் 1 இ.கு. பின்னி முதல் வரிசையில் சொல்லியபடி முடிக்கவும்.



என் அன்பைக் கொள்ளை கொள்வது பெண்களிடத்திலுள்ள கருணையேயன்றி அவர்களின் அழகிய பார்வையன்று.

- ஷேக்ஸ்பியர்

தகவல் - பிரேமா வீரப்பன்

# சமையல் பகுதி



## கொத்துக்கடலை வறுவல்

தேவையான பொருள்கள்:—

கொத்துக்கடலை அரை கிலோ,

தேங்காய் துருவல் 2 டேபிள் ஸ்பூன்,

வறுத்துப் பொடி செய்த சீரகப் பொடி 2 டேபிள் ஸ்பூன்,

மிளகாய்ப் பொடி ஒரு டேபிள் ஸ்பூன்,

வெங்காயம் 3, (நன்றாகப் பொடிப் பொடியாக நறுக்கவும்)

கொத்தமல்லி இலை ஒரு டேபிள் ஸ்பூன் (பொடிப் பொடியாக நறுக்கி வைக்கவும்)

பச்சை மிளகாய் (நறுக்கியது) ஒரு டீஸ்பூன்,

புளி ஒரு கப் நன்றாகக் கெட்டியாகக் கரைத்துக் கொள்ளவும்)

உப்பு – தேவைக்கு ஏற்ப.

செய்யும் முறை:—

முந்திய நாள் இரவே கடலையை ஊற வைக்கவும். மறுநாள் காலை 6 கப் தண்ணீரில் சோடா போட்டு, உப்பு, மஞ்சள் பொடி போட்டு வேக வைக்கவும். மற்ற சாமான்களையெல்லாம் வேகவைத்த கடலையுடன் போட்டுக் கலக்கவும். பச்சை மிளகாய், கொத்தமல்லி முதலியவற்றைப் போட்டு அலங்கரிக்கவும்!

சூடாக ரொட்டித் துண்டுகளுடன் பரிமாறவும்.

## நிரப்பிய தக்காளி

தேவையான பொருட்கள்:—

நன்றாகப் பழுக்காத தக்காளிப் பழங்கள் 8.

முக்கால் கப் மிருதுவாகப் பொடி செய்த ரொட்டித் துண்டுகள்,

முக்கால் கப் நறுக்கிய காய்கறிகள் — உருளைக் கிழங்கு,

பீன்ஸ், காரட் முதலியவைகளைப் பக்குவமாகத் தண்ணீரில் வேகவைத்துக் கொள்ளவும்.

3 பச்சை மிளகாய், ஒரு வெங்காயம், ஒரு துண்டு இஞ்சி முதலியவைகளைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக்கொள்ளவும்.

2 டேபிள் ஸ்பூன் நெய், அரை டீஸ்பூன் பொடிசெய்த சீரகம்,

கரம் மசாலாப் பொடி,

பொரிப்பதற்குத் தேவையான எண்ணெய்,

தேவைக்கேற்ப உப்பு,

அரைக்கால் டீஸ்பூன் மஞ்சள் பொடி.

செய்யும் விதம்:—

வாணலியை அடுப்பில் வைத்து நெய்யை விட்டு, அதில் நறுக்கிய வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, பொடி செய்த சீரகம் முதலியவற்றை ஐந்து நிமிடத்துக்கு வறுத்துக் கொள்ளவும். அதில் வேகவைத்த கறிகாய், பொடி செய்த ரொட்டித் துண்டுகள் முதலியவற்றைப் போட்டு, நன்றாகக் கலந்து வதக்கி, அடுப்பிலிருந்து எடுத்துவிடவும்.

தக்காளியின் மேல் பகுதியை ஒரு சிறு வட்ட வடிவமாக எடுத்துவிட்டு, தக்காளியின் உள்ளே இருக்கும் சதைப்பற்றுக்களை எடுத்து, அதை அந்த வேகவைத்த கறிகாய்களுடன் சேர்த்துக் கலக்கவும். கூடை மாதிரி இருக்கும் தக்காளிக் கூண்டினுள் அந்தக் கலவையைப் போட்டு நிரப்பவும். வட்ட வடிவமாக எடுத்து வைத்துள்ள அந்தத் தக்காளிக் காம்பினைக் கூட்டின் மேல் வைத்து, பல் குத்த உதவும் குச்சியால் குத்தி மூடவும். பிறகு கீழே சொல்லியபடி கரைத்து வைத்துள்ள மாவில் இந்தக் கூடைகளைத் தோய்த்து எடுத்து அடுப்பில் வைத்துள்ள காய்ந்த எண்ணெயில் பொரித்து எடுக்கவும்.

மாவு கரைக்கும் விதம்:—

2 கப் கடலை மாவு, அரை டீஸ்பூன் மிளகாய்ப் பொடி, ஒரு டீஸ்பூன் நசுக்கிய பூண்டு (வேண்டுமானால்) சிட்டிகை சோடா, சிட்டிகை பெருங்காயம்.

மேலே சொல்லிய பொருட்களை பஜ்ஜி மாவு பக்குவத்துக்குக் கரைத்துக்கொள்ளவும்.





## தக்காளி வறுவல்

மாமிசம் கால் கிலோ.
தக்காளிப் பழம் (துண்டு) 6.

அரைத்துக்கொள்க:—

சிறு வெங்காயம் 8,
பூண்டு 10 கிராம்,
இஞ்சி ஒரு சிறிய துண்டு,
கொத்தமல்லி அரைக் கட்டு

இவைகளை ஒன்ருகச் சேர்த்துக் கொஞ்சம் மொர மொரப்பாக அரைத்துக் கொள்ளவும்.

ஒரு டீஸ்பூன் மஞ்சள் பொடி,
ஆறு வற்றல்மிளகாய்,
ஒரு டீஸ்பூன் சீரகம்,
ஒரு டீஸ்பூன் சோம்பு,
அரை அங்குலம் லவங்கப் பட்டை,
ஒரு ஏலக்காய்,
ஒரு டீஸ்பூன் கசகசா

ஆகியவைகளை ஒன்ருகச் சேர்த்து விழுது போல் அரைத்துக்கொள்ளவும்.

வறுத்துக் கொள்வதற்குத் தேவையான சாமான்கள்:—

2 டேபிள் ஸ்பூன் தேங்காய் எண்ணெய்.
2 டேபிள் ஸ்பூன் கடலை எண்ணெய்,
அல்லது ஓ. கே. ஆயில்,
கொஞ்சம் கறிவேப்பிலை,
பிரிஞ்ஜி இலை.

செய்யும் முறை:—

மாமிசத்தை நன்ருகக் கழுவி, சிறிய துண்டுகளாக வெட்டிக் கொள்ளவும். தக்காளி பழத் துண்டுகளுடன் ஒன்றரைக் கப் தண்ணீர், மாமிசத் துண்டுகள், மொர மொரப்பாக அரைத்த மசாலா, ருசிக்கு ஏற்ப உப்பு முதலியவற்றைச் சேர்த்து நன்ருக வேக வைத்துக்கொள்ளவும்.

எண்ணெய் காயவைத்து, அதில் கறிவேப்பிலை, பிரிஞ்ஜி இலை முதலியவைகளைப் போட்டுப் பொரித்துக்கொள்ளவும். அதில் விழுதுபோல் அரைத்த மசாலாவையும் போடவும். வேகவைத்த மாமிசத்தையும் அதில் போட்டு நன்ருக வதக்கவும்.

## வட்ட பிஸ்கட்டுகள்

தேவையான சாமான்கள்:—

4 கப் மைதா மாவு,
1 கப் டால்டா,
2 கப் சர்க்கரை,
1 கப் பால்.
சிட்டிகை கேசரிப் பவுடர்,
பொரிப்பதற்கு எண்ணெய்.

செய்யும் விதம்:—

பாலை மிதமாகச் சுடவைத்து, சர்க்கரையை அதில் கலக்கவும். அதில் மைதா, டால்டா முதலியவற்றைப் போட்டுக் கலக்கவும். கலவையை இரண்டாகப் பிரித்து அதில் ஒன்றில் கேசரிப் பவுடரைப் போட்டுக் கலக்கவும். பாலைத் தெளித்து இரண்டு பாகங்களையும் தனித் தனியே சப்பாத்தி மாவு பக்குவத்துக்குப் பிசையவும். கலந்த மாவைச் சப்பாத்தி போல் மெலிதாக இட்டு, ஒன்றின் மேல் ஒன்றை வைத்து, சிறிய வட்டத் துண்டுகளாக வெட்டிவிடவும். வாணலியில் எண்ணெயை நன்ருக காயவைத்து அதில் இந்தத் துண்டுகளைப் போட்டுப் பொரித்து எடுக்கவும். காற்றுப் புகாத டப்பாக்களில் போட்டு வைத்தால் பல நாட்களுக்கு உபயோகிக்கலாம்.





## பொட்டுக்கடலை தட்டை

### முதல் பரிசு ரூ.25/-

திருமதி ஜெயலட்சுமி நரசிம்மன்,
20, திலகர் தெரு, ஆர். எஸ். புரம்,
கோவை - 641 002.

தேவையான சாமான்கள்:

| | | |
|---|---|---|
| அரிசி மாவு | — | 4 கப் |
| பொட்டுக் கடலைப் பவுடர் | — | 1 கப் |
| பூண்டு | — | 10 பருப்பு |
| விதை மிளகாய் | — | 6 |
| தேங்காய் | — | அரை மூடி |
| கடலைப் பருப்பு | — | 1 பிடி |
| வேர்க்கடலை | — | அரை கப் |
| வெண்ணெய் | — | அரை கப் |
| உப்பு | — | வேண்டிய அளவு |

செய் முறை:

முதலில் கடலைப் பருப்பை ஒரு மணி நேரம் ஊற வைக்கவும். வேர்க் கடலையை வறுத்து, தோல் எடுத்துப் பொடித்துக் கொள்ள வேண்டும். பூண்டு, மிளகாய், உப்பு நன்ருக நைசாக அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். அரிசி மாவு, பொட்டுக் கடலை மாவு அரைத்த விழுது, வேர்க் கடலைப் பொடி, ஊறவைத்த கடலைப் பருப்பு, வெண்ணெய் எல்லாம் சேர்த்து நன்ருகப் பிசைந்துகொள்ள வேண்டும். சிறு சிறு உருண்டையாக உருட்டி மணையில் துணி போட்டு, தட்டை மாதிரி தட்டி வாணலியில் எண்ணெயைக் காய வைத்து 5, 6 ஆகப் போட்டு எடுக்க வேண்டும். இது வாய்க்கு ருசியாகவும், கரகர வென்றும் இருக்கும்.

சிறு குறிப்பு: பூண்டு பிடிக்காதவர்கள் அதற்குப் பதில் சிறிது பெருங்காயம் சேர்த்துச் செய்யலாம்.

# பரிசு பெற்ற சமையல் குறிப்புக்கள்





## வெஜிடபிள் சிப்பி

### இரண்டாம் பரிசு ரூ.15/-

திருமதி. பாரதி தேவி
க. கார்குடி, இறையங்குடி அஞ்சல்,
தேவூர் - 611 109.

தேவையான பொருட்கள்:

| | | |
|---|---|---|
| உருளைக்கிழங்கு | — | 2 |
| காரட் | — | 2 |
| பீட்ரூட் பெரியது | — | 1 |
| பச்சரிசி மாவு | — | அரை லிட்டர் |
| வெங்காயம் பெரியது | — | 1 |
| பச்சை மிளகாய் | — | 6 |
| கடுகு | — | கால் டீஸ்பூன் |
| உளுத்தம் பருப்பு | — | கால் டீஸ்பூன் |
| பெருஞ்சீரகம் | — | அரை டீஸ்பூன் |
| தேங்காய்த் துருவல் | — | அரை கப் |

செய் முறை:

உருளைக் கிழங்கு, காரட், பீட்ரூட் ஆகிய வற்றை தோல் நீக்கி பொடியாக நறுக்கி ஒரு பாத்திரத்தில் போட்டு சிறிது தண்ணீர் விட்டு தேவையான அளவு உப்புப் போட்டு வேக விடவும். நன்ருக வெந்த பின் இறக்கி நீரை வடித்துவிடவும். பச்சை மிளகாய், தேங்காய் துருவல், பெருஞ்சீரகம் இவற்றை அம்மியில் வைத்து மைய அரைத்து எடுத்துக்கொள்ள வும். ஒரு பாத்திரத்தில் அரிசி மாவைச் சலித்து எடுத்துக் கொண்டு அத்துடன் தேவை யான அளவு உப்பு சேர்த்து வெந்நீர் விட்டு நன்ருகப் பிசைந்து வைக்கவும்.

ஒரு வாணலியை அடுப்பில் வைத்துச் சூடேறியதும் ஒரு கரண்டி எண்ணெய் ஊற்றி கடுகைப் போடவும். கடுகு வெடித்த பின் வெங்காயத்தைப் போட்டுச் சிறிது நேரம் வதக்கியபின் வேகவைத்த கிழங்குகள், அரைத்து வைத்த தேங்காய் இவற்றைப் போட்டுச் சிறிது நேரம் கிளறி இறக்கி வைக்கவும்.

முன்பு பிசைந்து வைத்த அரிசி மாவை எடுத்துச் சிறுசிறு உருண்டைகளாக உருட்டி ஒவ்வொரு உருண்டையையும் சிறிது குழி வான கிண்ணம் போல் செய்து அதன் நடுவில் காய் கறிக் கலவையைக் கொஞ்சம் வைத்து மற்ருெரு கிண்ணத்தால் மூடவும். இப்படி எல்லா மாவு உருண்டைகளையும் செய்த பின் இட்லி குக்கரில் வைத்து ஆவியில் வேக வைக்கவும்.



# உருளைக்கிழங்கு காராசேவு

## மூன்றாம் பரிசு ரூ.10/-


சாவித்திரி நடராஜன்,
ஈ-112, ராஜாஜி சாலை, வட்டம் 19,
நெய்வேலி - 3.


தேவையான சாமான்கள்:

| | | |
|---|---|---|
| கடலை மாவு | — | ஒரு கப் |
| உருளைக் கிழங்கு | — | இரண்டு |
| அரிசி மாவு | — | கால் கப் |
| நெய் | — | 2 மேஜைக்கரண்டி |
| வற்றல் மிளகாய் | — | 4 |
| பெருங்காயம் | — | சிறிதளவு, |
| க. எண்ணெய் | — | 200 கிராம், |
| உப்பு | — | தேவையான அளவு |

செய் முறை:

உருளைக் கிழங்கை மண் போகக் கழுவி வேக வைத்துத் தோலியை அகற்றி கையில் நன்றாகப் பிசைந்துகொள்ளவும். மிளகாய், உப்பு, பெருங்காயம் ஆகியவற்றை நீர் தெளித்து மசிய அரைத்து உருளைக் கிழங்குடன் பிசைந்து கொள்ளவும். அரிசி மாவில் நெய், க. மாவு, உருளைக் கிழங்கு எல்லாவற்றையும் சேர்த்துக் கெட்டியாகப் பிசையவும். வாணலியில் எண்ணெய் வைத்து காய்ந்தவுடன் காராசேவு கரண்டியில் கொஞ்சம் மாவு போட்டு உள்ளங் கையில் அழுத்தி தேய்த்தால் காராசேவு உண்டாகும். பொன் நிறமானதும் எடுக்கவும். சூடு ஆறியவுடன் மூடிஉள்ள பாத்திரத்தில் போட்டு வைக்கவும்.

---

## இல்லத்தரசிகளே, கொஞ்சம் கவனியுங்கள்!

நம்முடைய வாழ்வில் சமையல் ஒரு முக்கிய அம்சம். குடும்பம் ஆரோக்கியமாக வாழ்வது நம்முடைய கையில்தான் இருக்கிறது. இதைப் புரிந்து கொண்டு நீங்களும் பல, சத்துள்ள சுவையான உணவைச் சமைத்து மகிழ்ந்திருப்பீர்கள். அப்படிப்பட்டதை **'மங்கையர் மலர்'** வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளலாமே!

சிறந்த சமையல் குறிப்பிற்கு,

**முதல் பரிசு ரூ. 25/-** **இரண்டாம் பரிசு ரூ. 15/-** **மூன்றாம் பரிசு 10/-**



# ஸ்மிதா வரவுசெலவுப் பிரச்னையைத் தீர்த்தது எப்படி ?
















63 மாதங்களுக்கு ரூ 30,000 டெபாசிட் செய்தால், உங்களுக்கு மாதாமாதம் ரூ 247.92 அல்லது மூன்று மாதங்களுக்கொரு முறை ரூ 750/- வட்டி கிடைக்கும் (குறைந்த பட்ச டெபாசிட் ரூ 1000/-)

மாதாந்தர/காலாண்டு வட்டி டெபாசிட் திட்டம்

நீயும் சென்ட்ரல் பாங்கைப் பயன் படுத்தலாமே. அது வரவு செலவுத் தலை வலியைப் போக்க உதவுகிறது.



**சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா**

(ஒரு இந்திய சர்க்கார் நிறுவனம்)

மக்கள் இருக்குமிடம் மக்களை நாடிச் செல்லும் பாங்க்.

Interpub/CBI/3/80 TM

ஹிந்து பேப்பரில் இரண்டாவது பக்கத்தில் ஒரு மூலையில் அந்த அறிவிப்பு வந்திருந்தது.

''நான் ராமகிருஷ்ணன் இதன் மூலம் தெரிவிக்கிறேன். எனக்கும் என் பிள்ளை குருமூர்த்திக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. அவனுடைய எந்த விவகாரங்களுக்கும் அவன் உடன்பட்டிருக்கும் எந்த ஒப்பந்தங்களுக்கும் நான் பொறுப்பில்லை.''

மாயா ஒரு திகைப்புடன் அதைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். இப்படிப்பட்ட ஒரு கோபம் ஒரு மனிதருக்கு இருக்குமா என்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. பிள்ளை என்கிற பாசம் போய் கோபமேற்பட்டாலும் ஒரு மனிதாபிமான உணர்வு கூடவா இல்லாமல் போகும்? மான அவமான உணர்வுகூட அற்றுப் போகுமா? வீட்டுக்குள் கத்தி உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று சொன்னாலும் அது மறக்கக் கூடிய விஷயம். இந்த மாதிரியா வீட்டு அசிங்கத்தை யெல்லாம் பேப்பரில் போட்டுக் கொண்டு.... இந்த அறிவிப்பை இன்று எத்தனை பேர் படித்திருப்பார்கள்? என்னென்ன பேசிக் கொண்டிருப்பார்கள்? இது வரை அனுபவித்த அவமானங்கள் எல்லாவற்றையும் விட இது தாங்க முடியாத அவமானமாக இருந்தது. கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கண்களிலிருந்து நீர் வந்தது. மாமனாரின் மேல் கோபமும் ஏற்பட்டது. கடன்காரர்கள் எங்கே தன் கழுத்தை நெருக்கி விடுவார்களோ என்று பயந்துகொண்டு அவர் அறிவிப்பு விடுத்திருக்க வேண்டும். எனக்குப் பிள்ளை முக்கியமில்லை பணம்தான் முக்கியம் என்று சொல்லாமல் சொல்லும் அறிவிப்பு. இத்தகைய அறிவிப்பைக் கொடுக்க வேண்டுமானால் மனசில் எத்தனை கோபம் இருக்க வேண்டும். அத்தனை கோபத்துக்கும் பின்னால் எத்தனை அகந்தை இருக்க வேண்டும்?

குருமூர்த்தி வீட்டில் இல்லை. இதைப் படித்த பிறகு அவனுக்கு எப்படி இருக்கும்? அவமானம் ஏற்படாதா? கோபம் ஏற்படாதா? அவனுடைய தவறுகள் எல்லாம் யாரும் மன்னிக்கக் கூடியது இல்லை யென்று புரிந்து கொள்வானா? ஏதாவது சொரணை ஏற்படுமா?

டெலிபோன் அடித்துக் கொண்டிருந்தது. அவளுக்குப் போனை எடுத்துப் பதில் சொல்லி போதும், போதும் என்றாகிவிட்டது.

''குருமூர்த்தி இருக்காரா?''

# மௌனத்தின் குரல்



வாஸந்தி

''இல்லே.''

''எங்கே போயிருக்கார்?''

''தெரியாது.''

''எப்போ வருவார்?''

''தெரியாது.''

அவனுடைய பதில்கள் எல்லாம் நிஜமானவை என்று அவர்கள் நம்புவார்களா?

சற்று நேரத்தில் குருமூர்த்தி புயலைப் போல் உள்ளே நுழைந்தான். முகம் ஜிவுஜிவு என்று கோபத்தில் பளபளத்தது. அவனைப் பார்க்கவே அவளுக்குப் பயமாக இருந்தது. அவன் உள்ளே நுழைந்ததுமே ஃபோன் அடித்தது. அவன் ஒருவித ஆத்திரத்துடன் எடுத்தான்.

''ஆமாய்யா. பேப்பரில் போட்டிருக்கார். அதுக்கென்ன? நா செத்தா போயிட்டேன்? எல்லாரும் அப்பனே நம்பியா கம்பெனி நடத்தறாங்க? நீங்க ஏன் பதர்றீங்க? என் னாலே உங்களுக்கு ஒரு தொந்தரவும் வராது. கவலைப்படாதீங்க.''

மறுபடி மறுபடி போன் கால்கள். அதே ரீதியில் பதில்கள். அவனுடைய பேச்சிலிருந்து அவன் மிகவும் கலங்கியிருக்கிறான் என்று தோன்றிற்று. அவளுக்கு ஐயோ பாவம் என்றிருந்தது.

திடீரென்று அவன் கத்துவது கேட்டது.

''வந்தவனுக்கு ஒரு கப் காப்பி கூடக் கிடையாதா இந்த வீட்டிலே?''

அவள் சட்டென்று எழுந்தாள். அவசரமாகக் காப்பியைக் கலந்து கொண்டு வந்தாள். அவன் ஒன்றுமே பேசாமல் ஒரே மடக்கில் குடித்துவிட்டுப் படுக்கையறைக்குப் போனான். இந்த மாதிரி ஒரு தினத்தில் அவன் ஒன்றுமே அவளிடம் சொல்லாமல் போகையில் அவன் தன்னிடமிருந்து எவ்



வளவு விலகிப் போய்விட்டான் என்கிற உணர்வு மனசை அழுத்திற்று. இப்பொழுதெல்லாம் வித்யாவைப் பார்த்தாலும் ஒரு சிரிப்போ பேச்சோ அவன் வைத்துக்கொள்வதில்லை. அவன் கொடுத்த தாலியின் காரணத்துக்காகத்தான் அந்த வீட்டில் வளைய வருகிறதாக மாயாவுக்குத் தோன்றிற்று.

அவன் படுக்கை அறையில் போனில் பேசுவது கேட்டது. இன்னும் யார் தொல்லை கொடுக்கிறார்கள் என்று யோசித்தபடி அவள் நின்றாள். ''என்னை நீ நம்பணும். நிர்மலா. என்கிட்டே இப்ப ஒண்ணும் இல்லே. இன் னிக்கிப் பேப்பரைப் படிச்சப்புறம் எல்லோரும் நெருக்கி அடிக்கிறாங்க...''

''......''

''நிர்மலா, உன்னைத்தான் கடைசியில் நான் நம்ப வேண்டி வரும். நான் கடைசியிலே தெருவிலே நிக்க வேண்டி வந்தா உன்கிட்டேதான் வருவேன். நீ இருக்கிற வீடு உன் பேரிலே இருந்தாலும் அது நான் கொடுத்த வீடு என்கிற உரிமையிலேவந்து இருப்பேன்....''

மாயாவால் நிற்கமுடியவில்லை. மார்பு படபடத்துக் கண்கள் இருண்டு விடும்போல இருந்தது. வீட்டையும் அவன் பேருக்கு எப்பொழுது எழுதி வைத்தான்? அவன் சொல்கிற மாதிரி நாளைக்குத் தெருவில் நிற்க வேண்டி வருமோ? இப்பொழுது அவர்கள் இருந்தது வாடகை வீட்டில். சொந்தவீட்டை வாடகைக்கு விட்டிருந்தார்கள். வாடகைக்கு விட்டிருக்கிறேன் என்று அவன் சொன்னதெல்லாம் பொய்யாக இருக்க வேண்டும். அந்த நிர்மலாவை அதில் குடி வைத்திருக்க வேண்டும். வீட்டை அவள் பெயரில் எழுதி வைத்து, வரும் வாடகையையும் அவளுக்குக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். இப்படியும் ஒருத்தன், ஒருத்தியைக் கண்மூடித்தனமாக மோகிக்க முடியுமா?

'என் பிள்ளைகள். நிர்மலாவுக்கும் எனக்கும் பிறந்த குழந்தைகள்.'

அன்றைக்கு அவன் அப்படிச் சொன்னபோது அதை ஜீரணித்துக் கொள்வது ரொம்பக் கஷ்டமாக இருந்தது. அந்தக் குழந்தைக்கு அவனுடைய ஜாடையே துளியும் இல்லாத மாதிரி இருந்தது. இவனுக்குப்

---

ஒருவள்: "இது என்ன, புடவையில் புது டிசைன்...? ரொம்ப நல்லா, இருக்கே..."

மற்றவள்: ''புதுடிசைன் ஒன்னும் இல்லே...! இந்தப்புடவையில், நேத்து வடாம் போட்டு, உலர்த்தியிருந்தேன்...!''



பிறந்த குழந்தைகள் என்பது என்ன நிச்சயம்? நிர்மலா ஒரு வேசி என்பது நினைவில் உறுத்தும்போது அவனுக்குப் பிறந்த குழந்தைகள் என்று எப்படி நம்புவது?

குழந்தைகளைத் தன் குழந்தைகளாக அவள் பாவிக்க வேண்டும் என்று அவன்சொன்னான். 'சாப்பாடு போடு. அவர்கள் இங்கு வரும் போதெல்லாம் சரியாகக் கவனி' என்று அதிகாரமாகச் சொன்னான். அவள் வாயே திறக்கவில்லை. வித்யாவைப் பற்றி அவன் விசாரித்தே எவ்வளவோ நாட்களாகிவிட்டன. இவன் என்றாவது ஒரு நாள் புத்தி திருந்தி திரும்பி வராமல் போக மாட்டான் என்று அவள் காத்திருந்தாள்... இப்பொழுது அவன் ஃபோனில் பேசியதைக்கேட்டால்அதற்கெல்லாம் வழியே இல்லை என்று தோன்றுகிறது. நடுத் தெருவில் நிற்க வேண்டிய காலம் வெகு தூரத்தில் இல்லை என்று தெரிகிறது. அவள் சட்டென்று கவனம் கலைந்து திரும்பினாள்.

அவன் அவளருகே அவசரமாக வந்தான். ஒருவிதப் பரபரப்புடன் மாயாவின் எதிரில் வந்து உட்கார்ந்துகொண்டான்.

''மாயா எனக்கு அவசரமாகப் பணம் வேண்டும்.'' என்றான்.

அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. பணமா? சேமிப்பில் இருந்ததெல்லாம் அநேகமாகத் தீர்ந்து விட்டிருந்தது. அடுத்த மாதத்துக்கு என்ன செய்யப் போகிறோம் என்று உண்மையில் அவளுக்கு யோசனையாக இருந்தது.

''பணமெல்லாம் தீர்ந்து போச்சு என்கிட்டே'' என்றாள் அவள் மெல்லிய குரலில்.

''மாயா, நீ வேறே என்னைச் சோதிக்காதே. எனக்கு ரொம்ப அர்ஜண்டா ஐயாயிரம் ரூபாய் வேணும். எங்கிட்டே சல்லிக் காசுகூட இல்லே. நான் என்ன பண்ணுவேன்?''

இதுவரை அவனிடம் அவள் பார்த்திராத நாதியற்ற தனமும் கலவரமும் அவன் முகத்தில் தெரிந்தது. ஐயோ உன் கதி இப்படி, ஆயிற்று என்று அவள் மனசு கரைந்தது.

''நிச்சயமா என்கிட்டே பணம் இல்லே.''

''மாயா, சித்த உன் பாங்க் புஸ்தகத்தைப் பார். எதிலேயாவது போட்டு வைத்து மறந்திருப்பே, சித்தப் பாரேன்....''

அவள் யோசித்தாள். ஏதோ ஒரு ஃபிக்சட் டெபாஸிட்டில் ஆறாயிரம் இருப்பது ஞாபகத்துக்கு வந்தது.... அவள் யோசித்தாள். அதையும் இவனிடம் கொடுத்து விட்டுப் பிறகென்ன செய்வது?

''மாயா ப்ளீஸ்!''

முதல் முறையாக ஒரு விஷயத்துக்காக அவளிடம் அவன் இறைஞ்சுகிறான். இப்பொழுது முறைத்துக் கொண்டால் அவன் நம் வசம் வரும் சந்தர்ப்பம் வராமலே போய்விடும்... நமக்குப் பணத்தை விட இவன்தான் முக்கியம்....

''ஒரு ஃபிக்ஸட் டெபாசிட் இருக்கு ஆறாயிரத்துக்கு.''

# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

## ஐடெக்ஸ்
### டீலக்ஸ் குங்குமம்
Matt Finish

நாடெங்கணும் நாகரீக நங்கையர்
நாடி அணிவது ஐடெக்ஸ் குங்குமம்.
மங்கையரின் மலர்முகத்தின் இன்னழகை
எடுத்துக் காட்டுவதற்கெனவே
14 கண்கவர் வண்ணங்களில் கிடைக்கிறது.
சாஸ்திரீய முறைப்படி தயாரிக்கப்படும்
ஐடெக்ஸ் குங்குமம் சருமத்திற்கு எவ்வித
தீங்கும் விளைவிக்காதது.



ஐடெக்ஸ்
38 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த் லாபரட்டரீஸ் சென்னை 600033

Imageads-AL-1304 Tam

---

அவன் முகம் சட்டென்று பிரகாசமாயிற்று. அவள் கைகளைப் பிடித்துக் கொண்டான்.

''எனக்குத் தெரியும். நீதான் எனக்கு உதவுவேன்னு.''

முதன் முறையாக ஓர் ஆடவனின் கையை ஸ்பரிசித்த மாதிரி அவள் சிலிர்த்துப்போனாள்.

''அதை எடுக்க முடியுமோல்லியோ?''

''முடியும்.''

''ஓ! பின்னே என்னுடைய அக்கௌண்டுக்கு ட்ரான்ஸ்ஃபர் பண்ணிவிடலாம்.''

அவன் மளமளவென்று அவளை பாங்குக்கு ஒரு கடிதம் எழுதி கையெழுத்திடச் சொன்னான். டிரைவரைக் கூப்பிட்டுப் பாங்குக்குப் போக வேண்டியதைப் பற்றிச் சொன்னான்.

''நீங்க வர்றீங்களா?'' என்றான் பழனிசாமி.

''இல்லே. எனக்கு என்னமோ வயிற்றைக் கொஞ்சம் வலிக்கிறது. ரெஸ்ட் எடுத்துக்கப் போறேன்....''

பழனிசாமி கிளம்பிப் போனதும் சோபாவில் வந்து உட்கார்ந்தவன் திடீரென்று வயிற்றைப் பிடித்துக் கொண்டு வேதனையில் முனகினான். அவன் முகத்தைப் பார்த்து மாயா பயந்து போனாள். சட்டென்று அவனை வந்து பிடித்துக் கொண்டாள்.

''என்ன ஆயிற்று உங்களுக்கு? என்ன பண்றது உங்களுக்கு?''

''ரொம்ப வயிற்று வலி. பொறுக்க முடியல்லே.''

அவனால் பொறுக்க முடியவில்லை என்று நன்றாகத் தெரிந்தது. அவள் ஏதோ தனக்குத் தெரிந்த மருந்தைக் கொடுத்தாள். அதில் ஏதும் குணம் தெரியவில்லை. அவள் டாக்டருக்கு ஃபோன் பண்ணினாள். அவர் வந்து பரிசோதனை செய்து விட்டு உடனடியாக நர்ஸிங் ஹோமுக்கு அழைத்துக்கொண்டு போக வேண்டும் என்றார். மாயா பதறிப் போனாள். குருமூர்த்தியை நர்ஸிங் ஹோமுக்கு அழைத்துச் செல்வதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்வதற்கு உள்ளே சென்றாள்.

அவள் தயாராகி வெளியே வரும்போது பழனிச்சாமி பாங்கிலிருந்து திரும்பி வந்திருந்தான். குருமூர்த்தி ஒரு கையால் வயிற்றைப் பிடித்தபடி யாருடனோ டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தான்.

''நாளைக்கே நீ அந்த செக்கைக் கொடுத்துப் பணம் வாங்கிக்கலாம் நிர்மலா, என் அக்கௌண்டில் உனக்கு வேண்டிய பணம் இருக்கும்.''

மாயா அதிர்ந்து போனாள் இந்த வார்த்தைகளைக் கேட்டு. கடைசியில் அவனுக்கா, அந்த நாசமாய்ப் போகிறவனுக்குப் போய்ச் சேருவதற்கா அவள் மிஞ்சியிருந்த பணத்தையும் சுரண்டி எடுத்துக் கொடுத்தாள்?

*The following particulars regarding the ownership of 'MANGAYAR MALAR' the Tamil monthly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of Publication*: Monthly
3. *Name of Printer*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
4. *Name of Publisher*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
5. *Name of Editor*: K. Kasturi Rangan
   *Nationality*: Indian
   *Address*: 149, Bells Road
   Triplicane
   Madras-600 005
6. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*: Bharathan Publications Private Limited (Lessees) 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032

V. Murali
*Publisher*

1-3-1981


இப்பொழுது நர்ஸிங் ஹோம் செலவு வேறு இருக்கப் போகிறது. என்ன செய்யப் போகி றோம்? குருமூர்த்தி இத்தனை கேவலமாக இத்தனை குரூரமாக நடந்து கொள்வாரு. என்று நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. நம்பவே முடியவில்லை.

மாயா சட்டென்று சுய நினைவுக்குவந் தாள். யார் எப்படி மனிதாபி மானம் இல்லாமல் நடந்து கொண்டாலும் நான் மாற மாட்டேன். என் அடிப்படைக் குணம் மாறாது. அன்பு செலுத்துவது என்னுடைய இயல்பு. மன்னிப்பது என் இயல்பு...

அவள் குருமூர்த்தியைத் தாங்கிப் பிடித் துக்கொண்டாள். பழனிச்சாமியின் உதவி யுடன் காரில் உட்கார வைத்தாள்.

பெரிய பெரிய டாக்டர்கள் எல்லாம் உட னடியாகக் குருமூர்த்தியைக் கவனித்தார்கள். வயிற்றைக் கழுவிப் பார்த்தார்கள். ரத்தப் பரிசோதனைகள் செய்தார்கள். என்னென் னவோ சிகிச்சைகள் தந்தார்கள். எதற்கும் பலன் இருக்கவில்லை. அவன் உபாதையைத் தானே அனுபவிப்பவள் போல் மாயா அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். இரண்டு நாட்கள் அவன் அவளிடம் எதுவுமே அந்த ரங்கமாகப் பேசாமல் அவளுக்குத் தீங் கிழைத்து விட்டோம் என்கிற நினைப்புக்கூட இல்லாதவன் போல் இறந்து போனான்.

ஊரே திரண்டு வந்திருந்தது துக்கம் விசா ரிக்க, அவளைச் சமாதானப்படுத்த.

ராமகிருஷ்ணன் அவளைத் தனியாகக் கூப்பிட்டுக் கண்ணில் நீர் மல்கச் சொன்னார் ''அன்னிக்கு நா சொன்னதை நினைச்சு வருத் தப்படாதே அம்மா. குருமூர்த்தியோட கடனை எல்லாம் நா தீர்க்கறேன். உன்னையும் வித்யாவையும் பார்த்துக் கொள்றது என் பொறுப்பு....''

மாயா எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு மௌனமாக இருந்தாள். எந்தவித பேச்சும் அனுமானமும் இனிமேல் என்னை பாதிக்காது. எல்லாவித சாகரங்களிலும் மூழ்கி எழுந்தாயிற்று. இப்பொழுது இருப் பது புடம் போட்ட மனசு. நான், என்னுடை யது, என்னுடைய இழப்பு, என்னுடைய துக்கம் என்னும் சாதாரண பாமர அஞ் ஞானங்களுக்கெல்லாம் மேல் எழும்பிவிட்ட மனசு — மோன நிலையை எட்டிவிட்ட மனசு.

சத்தியத்தின் மௌனம். அந்த மௌனத் தின் குரலை துல்லியமாகக் கேட்க முடிந்தது...

''சாந்தப்படுத்திக்கொள். இதுதான் உன் விதி என்று... சக்கரம் போல் சுழன்று வரும் வினைப்பயன் என்று...

இப்பொழுது கண்ணில் நீர் வரவில்லை. அபரிமிதமான எந்த உணர்வும்ஏற்படவில்லை. எல்லாவற்றையும் ஒரு மௌனத்துடன் ஏற் றுக்கொண்டது மனசு.

எவ்வளவோ பொறுப்புக்கள் இன்னும் இருந்தன. வித்யாவை ஒழுங்காக வளர்க்க வேண்டும். அம்மா அப்பாவின் சோகத்தை சமாதானப்படுத்த வேண்டும். 'நான் கல் யாணமே செய்துகொள்ளப் போறதில்லே அக்கா' என்று அவள் துக்கத்தைப் பார்த்து விட்டு அழும் நளினியைச் சாந்தப்படுத்த வேண்டும். ராஜுவின் மேல் படிப்பைக் கவனிக்க வேண்டும்....

பழைய மாயாவாக, சதா சிரிக்கும் மாயா வாக, புதிய பொறுப்புக்களுக்கு அவள் சித்தமானாள்.

---

இந்த மாயாவை எனக்குத் தெரியும். அவள் உன்னத நிலையில் இருந்து பிறகு சோகப்பட்டதும் இப் பொழுது புடம் போட்ட தங்கமாய், விவேகியாய் இருப்பதும் தெரியும். ஆனால் 'என் வாழ்க்கை நாசமாயிற்று. இதை நீங்கள் அவசியம் எழுதவேண்டும்' என்று அவள் கேட்டுக் கொண்டதன் பேரில் இந்தக் கதையை எழுதினேன்.

-வாஸந்தி

வாசகிகளே, உங்களுக்கு ஏற்படும் சட்டப்பிரச்னைகளை நீங்கள் இந்தப் பகுதிக்கு எழுதி அனுப்பலாம். அவற்றைப் பரிசீலித்து வழக்கறிஞர் டி. ஆர். ரமேஷ் பதிலளிப்பார்.

# இதற்கு என்ன செய்வது?

## சட்டப் பகுதி



**இரா. ரெங்கசாமி** — **உசிலம்பட்டி**

என் உறவினர் பெண் மஞ்சுளாவிற்குத் திருமணமாகி மூன்று வயதில் ஒருபையன் இருக்கிறான். அவள் கணவன் மணமான மறுவருடமே இறந்துவிட்டான். அவன் இறந்த உடனேயே அவனுடைய அம்மா, குழந்தையைத் தானே எடுத்துச் சென்று பிறபெண்கள் மூலம் பால் கொடுத்துவளர்க்கின்றாள். குழந்தையைத் தர மறுப்பதுடன் அவளை 'அக்கா' என்றும் அழைக்கவும் கற்றுத்தருகிறார்கள். குழந்தையைப் பிரிந்திருக்கும் அந்தத் தாய்க்குத் தாங்கள் கூறும் வழியென்ன?

இந்திய மைனாரிட்டி, கார்டியன்ஷிப் சட்டத்தின் ஆறுவது பிரிவின்படி, பொதுவாக ஒரு குழந்தைக்குப் பாதுகாவலர் அதனுடைய தந்தைதான். தந்தை இறந்து போனால் அந்த மைனாரிட்டிக் குழந்தையை வளர்க்கும் உரிமையைத் தாய் அடைகிறாள். இவளுக்கும் பிறகே மற்றவர்கள் அந்தக் குழந்தையிடம் உரிமை பெற முடியும். தந்தை உயிருடன் இருந்தாலும் கூட குழந்தைக்கு ஐந்து வயது வரை வளர்க்கும் உரிமை தாய்க்குத்தான் உண்டு என்ற ஒரு சிறப்புத் தகுதியையும் சட்டம் வகுத்துள்ளது. எனவே நீங்கள் குறிப்பிடும் பெண் தன் மகனைத் திரும்பப் பெற்று வளர்ப்பதற்கு எந்த விதத் தடையுமில்லை.

நீதிமன்றத்துக்கு மனுப் போட்டு, தன் குழந்தையைத் திருப்பி வாங்கித் தரும்படி கோரலாம்.

**சந்திரா ராமஸ்வாமி** — **சென்னை-20**

சென்ற இதழில் நீங்கள் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கும்போது, முதல் மனைவி உயிருடன் இருக்கும் போது இரண்டாம் திருமணம் செய்து கொள்ள கணவனுக்கு எந்த உரிமையும் கிடையாது என்று எழுதியிருந்தீர்கள்.

எனக்குத் தெரிந்த ஒரு பெண்ணின் கணவன் அவளை விட்டு விட்டு இரண்டாவது திருமணம் செய்து கொண்டிருக்கிறார். அவளும், அவளுடைய பெற்றோரும் மிகவும் சாதுக்கள். பொருளாதார வசதியும் இல்லாததால் கோர்ட், கேஸ் என்று அலைய முடியாதவர்கள் இந்தப் பெண்ணிற்கு ஒரு வழிபிறக்க உதவி செய்யுங்களேன்.

உடல்நிலை சரியில்லையென்றால் சாதாரணமாக ஒரு டாக்டரைப் போய்ப் பார்க்கிறோம். அல்லது நமக்கு நாமே ஒரு மாத்திரையைப் போட்டு வைத்தியம் செய்து கொள்கிறோம். ஆனால் ஏதேனும் சட்டப் பிரச்னைகள் என்று வரும்போது ஒரு வக்கிலைப் போய்ப் பார்க்க அவ்வளவு பயப்படுகிறோம். சட்டம் என்றாலே பயப்படத்தக்கதாக மக்கள் நினைப்பது தவறு. சட்டம் மக்களுக்காக, மக்களின் உரிமைகளைக் காப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒன்றே.

சரி, இனி நீங்கள் சொன்ன வழக்கிற்கு வருவோம். இவர்களைப் போன்ற ஏழைகளுக்கும், ஆதரவற்றவர்களுக்கும் உதவ இலவசச் சட்ட உதவிக்குழு இயங்கி வருகிறது. அரசாங்கத்தால் நடத்தப்படும் இக்குழுக்களை அணுகினால் அவர்கள் இலவசமாகவேவாதாடி

உங்களுக்கு நிவாரணம் செய்வார்கள். அவர்களின் முகவரி:

சென்னை மாவட்ட சட்ட உதவிக் குழு
சிட்டி சிவில் கோர்ட் பில்டிங்
ஹைகோர்ட் காம்பஸ் — சென்னை-1

நீலா கோபாலன் — வேளச்சேரி

எனக்காக என்னுடைய தந்தையும், கணவரும் ஓரளவு சொத்துக்களை விட்டு விட்டே போய் இருக்கிறார்கள். இப்போது என்னுடைய வயது 63. எனக்குக் குழந்தைகளும் கிடையாது. என் விருப்பம் போல உயிலை எழுத விரும்புகிறேன். என் சொத்தின் மேலேயே கண்ணாக இருக்கும் என் உறவினர்களின் உதவியில்லாமலேயே உயிலை எழுதிவிட வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். ஆனால் உயில் எழுதுவது எப்படி என்பது தெரியாமல் நான் எழுதவில்லை. அதற்கான வழிவகைகளைத் தயவு செய்து சொல்ல வேண்டும்.

உயில் எழுதுவதற்கு எந்தவித நிபந்தனைகளும் கிடையாது. இந்த மாதிரியான வாக்கியங்களுடன் இப்படிப்பட்ட முறையுடன் தான் எழுத வேண்டும் என்பதில்லை. அதே போல அதைப் பதிவு செய்ய வேண்டும் என்பதும் இல்லை. இதைப்புரிந்து கொள்ளாமல் மிகவும் படித்தவர்கள் கூட ஆயிரக் கணக்கில் இதற்காகச் செலவு செய்கிறார்கள். இவை அத்தனையும் வேஸ்ட்தான்.

ஒரு குழந்தையின் நாற்பது பக்க நோட்டுத் தாளில் ஒன்றை கிழித்து எழுதினால்கூட அதையும் உயில் என்று சட்டம் ஒப்புக்கொள்கிறது. ஆனால் அதை நீங்கள் எழுதும்போது முழு நினைவுடன், தான் இன்னதுதான் செய்கிறோம் என்று சிந்திக்கும் அறிவுடன் இருக்க வேண்டும். இரண்டு சாட்சிக் கையெழுத்துக்கள் அவசியம் இருக்க வேண்டும். மற்றபடி உயிலை எப்படியும் எழுதலாம்.

அருணா — சேலம்

என் கணவர் இறந்து மூன்று வருடங்கள் ஆகின்றன. நான் என் குழந்தைகளுடன் அமைதியாகவே காலம் தள்ளிவந்தேன். தற்போது திடீரென்று ஒருவர் என் கணவர் விட்டுச் சென்ற சொத்தில் பங்குகேட்டு வழக்குத் தொடர்ந்துள்ளார். இவர் என் கணவர் தொடர்பு கொண்டிருந்த மற்றொரு பெண்ணின் மூலம் பிறந்தவராம். இவர் இவ்வாறு சொத்தில் உரிமை கொண்டாடலாமா?

அது உங்கள் கணவர் விட்டுச் சென்ற சொத்தின் தன்மையைப் பொறுத்தது. தற்போது இருக்கும் சொத்து உங்கள் கணவரின் மூதாதைய பரம்பரையிலிருந்து வந்த சொத்தாக இருக்குமானால், வழக்குத் தொடருபவருக்கு அதில் எந்தவித உரிமையும் கிடையாது.

ஆனால் அந்தச் சொத்துக்கள் உங்கள் கணவரின் சுய சம்பாத்தியத்தால் சேர்த்ததாக இருக்குமானால், அதில் பங்கு கோர அவருக்கு உரிமை உண்டு. ஏனென்றால் சட்டத்தால் இரண்டாவது திருமணம் என்பது ஏற்றுக் கொள்ளப்படா விட்டாலும் அதன் மூலம் பிறக்கும் குழந்தைகள் 'பழி ஓரிடம், பாவம் ஓரிடம்'என்று பாதிக்கக் கூடாது என்ற உணர்வில் சட்டம் இந்த வகையில் இயங்குகிறது.



## இவர்கள்

மதுரை மாவட்டத்தைச்
சேர்ந்த சபிதா அகில இந்திய
துப்பாக்கி சுடும்
போட்டியில் ஜூனியர்களுக்கான
பிரிவில் முதல் மாணவியாக
வெற்றி பெற்றிருக்கிறார்.
எஸ். எஸ். எல். சி.
படித்துக் கொண்டிருக்கும் இவர்
தமிழ், தெலுங்கு, ஆங்கிலம்
ஆகிய மூன்று மொழிகளையும்
சரளமாகக் கையாளுகிறார்.
சமீபத்தில் டில்லியில்
இந்தியக் குடியரசு தின
விழாவின் ஊர்வலத்தில்
கலந்து கொண்டு
பிரதமர் இல்லத்தில்
விருந்துண்டதைத்
தன் வாழ்க்கையின் மறக்க
முடியாத நிகழ்ச்சி
என்கிறார்.

# ராசி பலன் (மார்ச். 81)



## மேஷம்

இந்த மாதத்தின் இரண்டாவது வாரத்தின் கடைசியில் நீங்கள் எதிர்பார்த்த காரியம் சுமுகமாக முடியும். தாமதங்களும், அதனல் ஏற்படும் வருத்தங்களும் பத்து நாட்களுக்குள்ளாகவே முடிந்து விடும். அதற்குப் பிறகு உங்களுக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது.

குடும்ப வாழ்க்கை சுமுகம்.



## ரிஷபம்

மார்ச் மாதம் 10ந் தேதி உங்கள் வாழ்க்கையின் திருப்பு முனையாக அமையும். சின்னச் சின்னத் தகராறுகள், வீண் சர்ச்சைகள், மனக் கிலேசங்கள் மாறித் திட மனமும், ஆரோக்கியமான உடலையும் பெறுவீர்கள். கலைஞர்களுக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது. இரும்பு சம்பந்தமான தொழில் செய்பவர்களின் நிலைமை சிறிது மந்தமாக இருக்கும்.

குடும்ப வாழ்க்கை திருப்திகரமாக இருக்கும். உடல் நலம் குன்றியிருந்த கணவரின் நிலைமை முன்னேற்றமாக இருக்கும். குழந்தைகள் பாராட்டுக்களையும், பரிசுகளையும் பெறுவார்கள். உங்களுடைய விருப்பங்களை மிக அதிகமாக மற்றவர்களிடம் திணிக்க முயற்சி செய்யாதீர்கள். அதன் எதிர் பலனே விளைந்துவிடும்.



## மிதுனம்

நீங்களாகவே உங்களுடையசொந்த முயற்சியால் எடுக்கப்போகும் முடிவுகளை ஏப்ரல் மாதம் வரை ஒத்தி வையுங்கள். இந்த மாதத்தில் பக்திச் சூழ்நிலையில், சஞ்சலமில்லாத மனத்துடன் கழிக்க நிறைய வாய்ப்புக்கள் உண்டு. உலோகம் சம்பந்தப்பட்டவர்கள் உங்களை நாடி வந்து, மகிழ்ச்சியான சேதிகளைச் சொல்வார்கள். நடக்கப்போகும் நிகழ்ச்சிகளை அமைதியுடன் ஏற்றுக்கொள்ளுங்கள். இனிமேல் வாழ்வில் நாளுக்கு நாள் முன்னேற்றமாகவே காணப்படும்.

கணவரால் பொருளாதார நிலைமை சீரடையும். உங்கள் குழந்தையினுல் மற்றவர்களால் நீங்கள் பாராட்டப்படுவீர்கள்.



## கடகம்

இந்த மாதத்தில் இருபது நாட்களுக்கு, தாமதங்களையோ, ஏமாற்றங்களையோ, தவிர்க்க முடியாது. கூடியவரை எல்லாவற்றிலிருந்தும் ஒதுங்கி யிருப்பது நல்லது. மாதத்தின் நடுவில் நடக்க இருக்கும் சுப காரியம் ஒன்றின் மூலம் மிகச் சிறந்த நட்பு ஒன்று கிடைக்கும். அது உங்கள் வாழ்வை அனைவரும் ஆச்சரியப்படும் அளவுக்கு முன்னேறச் செய்யும். வளமான எதிர்காலம் வெகு தூரத்தில் இல்லை.

கணவர் தன்னுடைய தொழிலில் ஏற்பட்ட ஏமாற்றங்களில் வருந்தும்போது ஆறுதல் சொல்ல நேரிடும்.



## சிம்மம்

விரக்தியும், வேதனையுமான சூழ்நிலைகள் மாறிக் கலகலப்பும், குதூகலமும் கொண்ட நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நடைபெறும். வெகு நாளாகத் தீராமல் இருந்த பிரச்னைகளுக்கு முதல் வாரத்தின் இறுதியில் முடிவு கிடைத்து விடும். உறவினர்களால் சந்தோஷமான சூழ்நிலைகள் நிலவும். உயர் மட்டத்து அதிகாரிகளினுல் வரவு உண்டாகும். அரசு அலுவலக வேலைகள் சுமுகமாக முடியும்.

கணவரின் எதிர்பார்ப்புக்கள் சுலபமான வெற்றியுடன் கிடைக்கும். குழந்தைகளிடமிருந்து அதிகம் எதிர்பார்த்தால், வெற்றி கிடைக்கும் வாய்ப்புக்கள் உண்டு.



### கன்னி

இந்த மாதத்தின் மூன்றுவது வாரத்தை ஓய்வெடுக்கும்வாரமாக ஆக்கிக்கொள்ளலாம். அடுத்து நிகழவிருக்கும் புதிய முயற்சிகளுக்கு நல்ல அடித்தளமாக அது அமையும். சிக்கலான தொழில் சம்பந்தமான முடிவுகளைக் கூடியவரை இந்த மாதத்திலிருந்து தள்ளி வைப்பது நல்லது. உடனடியான முடிவுகளை ஆற அமரச் சிந்தித்து எடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறீர்கள்.

கணவர் மனம் கோணாமல் நடந்துகொள்ளுங்கள். குழந்தைகளின் சிறு வெற்றிகளுக்கும் பாராட்டித் தட்டிக் கொடுங்கள்.



### துலாம்

உங்களைத் தேடி வரப் போகும் புதிய பொறுப்புக்களுக்கு உங்களைத் தயாராக்கிக் கொள்ளுங்கள். இந்த மாதம் வெளியூர்களுக்குச் செல்வதற்கும், யாத்திரைக்கும் உகந்த மாதம். முதல் வாரம் உடல் நிலையை கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். செலவுகள் இந்த மாதம் அதிகமாக இருந்தாலும் வரவுக்கு மிஞ்சிய செலவாக அமையாது.

கணவரின் சொற்கள் மனத்துக்கு சந்தோஷமாக இருக்கும். குழந்தைகள் நல்ல செய்தியொன்றைப் பெறுவார்கள்.



### விருச்சிகம்

இந்த மாதத்தின் இரண்டாவது வாரத்தில் நீங்கள் கலந்துகொள்ளப் போகும் முக்கிய நிகழ்ச்சியொன்றின் மூலமாகப் பொதுமக்களைக் கவரும் சக்தி வெகு விரைவில் வந்து

சேரும். எழுத்தாளர்களும், தொழில் நுட்ப வல்லுநர்களும் இந்த மாதம் நல்ல முன்னேற்றத்தை அடைவார்கள். நான்காவது வாரம் இதுவரை செய்து வந்த தொழிலின் பலனை அனுபவிக்கும் காலமாக அமையும்.

கணவருக்கு உங்களுடைய துணை மிகவும் தேவையாக இருக்கும். அவருடைய புகழ் ஏறுவதைக் கண்டு மகிழ்ச்சி அடைவீர்கள். குழந்தைகளால் மனம் சந்தோஷமடைந்தாலும், செலவினங்கள் கூடும்.



## தனுசு

விளையாட்டு, பொதுச் சேவை, உறவினர் வீட்டு நிகழ்ச்சிகள் என முதல் இரண்டு வாரங்கள் உங்களை முழுமையாகப் பிடித்துக் கொள்ளும். கையில் வைத்திருக்கும் வேலைகளை முடித்துவிடுங்கள். மூன்றாவது வாரத்தில் வரப்போகும் செய்தி யொன்றினால் தீவிரமான காரியங்களில் இறங்க நேரிடும். நினைத்த காரியம் ஒன்று முடிவடையும் தருணத்தில் வெற்றியாக முடிந்தாலும், இடையில் சிரமங்கள் அதிகமாக இருக்கும்.

கணவரின் வெளியூர்ப் பயணங்களினால் உடல்நிலை பாதிக்கப்படும். குழந்தைகளின் மனநிலையில் திருப்திகரமான முன்னேற்றம் கிடைக்கும்.



## கும்பம்

சென்ற மாதக் கடைசியில் நீங்கள் எடுத்த முடிவு ஒன்று அடுத்து வரும் மாதங்களில் தொழில் சம்பந்தமான வியக்கத்தக்க மாற்றங்களுக்குக் காரணமாக அமையும். பொருளாதார நிலைமை இந்த மாதம் முன்னேற்றமான நிலையில் இருக்கும். மனம் நெகிழ்ந்து எடுக்க வேண்டிய முடிவுகளை இரண்டாவது வாரத்தின் கடைசியில் வைத்துக் கொள்ளுங்கள். அதிர்ஷ்டகரமான வரவுகளுக்கு இந்த மாதம் சிறந்ததாக இருக்கும்.

கணவரின் நடவடிக்கைகளில் மகிழ்ச்சியான மாற்றங்கள் இருக்கும். அதனால் உங்களுடைய வரவு அதிகரிக்கும். குழந்தைகளின் சூழ்நிலை குதூகலமாக இருக்கும்.



## மீனம்

உங்கள் குணத்துக்கும், சூழ்நிலைக்கும் ஏற்றவாறு நீங்கள் தொடரப்போகும் வாழ்வுக்கு முக்கிய வழிகாட்டியாக முதல் இரண்டு வாரங்கள் அமைந்திருக்கும். உங்களுடைய சபதங்களும், தீர்மானங்களும் நிறைவேறும் காலம் வெகு தூரத்தில் இல்லை என்பதை இந்த மாதமே உங்களுக்குக் கோடி காட்டி விடும். மூன்றாவது வார ஆரம்பம் வெளியூர்ப் பயணங்களுக்கு நல்லது.

கணவரின் சுதந்திரமான மனப் போக்கு உங்களுக்குச் சாதகமாக அமையும். அவர் தம் முயற்சியால் செய்யும் காரியத்தின் பெருமை உங்களை வந்தடையும். குழந்தைகளின் உடல்நிலையில் கவனம் தேவை.



## மகரம்

இலட்சியத் தன்மையுடன் நீங்கள் செல்லும் பாதையில் தடைக் கல்லாக இருந்த ஒன்று இந்த மாதத்தின் இறுதியில் அகன்று விடும். நண்பர்களின் கூட்டுறவால் வெற்றிகரமான காரியம் ஒன்றைச் சந்திப்பீர்கள். பொருளாதார நிலைமை திருப்திகரமாக அமைந்துள்ளது. நீண்ட நாட்களாகக் காத்துக்கொண்டிருந்த வெளி நாட்டுப் பயணம் இந்த மாதத்தில் சாத்தியப்படும். சமீப காலத் தொடர்புகளைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்.

கணவரின் உறவினர்களால் குடும்பத்தில் மகிழ்ச்சி விளையும். கலகலப்பான சூழலால் மனம் திருப்திகரமாக அமையும். குழந்தைகள் உடல்நிலை முதல் வாரத்தில் பாதிக்கப்பட்டாலும் விரைவில் குணமடைவார்கள்.

உலகிலேயே மிகவும் கொடுமையானது வறுமை. அதைவிடக் கொடுமையானது இளமையில் வறுமை என்று ஔவையார் சொல்லியிருக்கிறாராம். நான் சொல்கிறேன், அழகாய்ப் பிறப்பது கொடுமையானது. அதைவிடக் கொடுமை ஒரே வீட்டில் இருக்கும் இரண்டு பெண்களில் ஒருத்தி அழகுக்கு அதாரிட்டியாகவும், இன்னொருத்தி அதற்கு திருஷ்டிப் பரிகாரமாகவும் இருப்பது.

யாமினி என் சொந்த அக்காதான். ஆனால் தானும் ஒரு பெண் என்பதை அடிக்கடி வெளிக்காட்டிக் கொள்வதில் எனக்கு அவளிடமிருக்கும் பாசத்தையும் நேசத்தையும் இப்படிக் குறைத்துக் கொள்கிறாளே?

அழகாய்ப் பிறந்தது என் குற்றமா? இல்லை அழகே இல்லாத அவளுக்குத் தங்கையாய்ப் பிறந்தது குற்றமா?

அப்படியே என்றாலும் இருத்த முடியாத குற்றம். இதற்காக என்மேல் கோபப்படுவது மணியார்டர் வரவில்லை என்பதற்காக தபால்காரர்மேல் எரிச்சல் படுவது போல் இல்லையா?

இயற்கை தன்னை .மட்டும் வேண்டுமென்றே வஞ்சித்து விட்டது போல் சதா ஒரு கடுகடுப்பு முகத்தில். அந்த வெறுப்பு அவள் முகத்தை இன்னும் கோரப்படுத்துகிறது என்று நான் எப்படிச் சொல்வேன்? அப்பாவும் அம்மாவும் என்னை ஆசையோடு பெற்றுக் கொண்ட மாதிரியும் தன்னை வெறுப்போடு பெற்றுக் கொண்ட மாதிரியும் அவள்

# பார்க்குமிடத்திலெல்லாம் ...

வி. உஷா



பேசும்போது எனக்கு வெறுப்பாய் வரும். வீட்டுக்கு வருபவர்கள் எல்லாம் ஒரு புழுவுக்கு அளிக்கும் மரியாதையை அவளுக்குக் கொடுப்பதாயும், பட்டாபிஷேக இளவரசி



யாய் என்னை மதிப்பதாகவும் கற்பனை செய்துகொண்டு அவள் வீசும் சொல்லம்பு களை மௌனமாய் ஏற்றுக் கொள்வேன்.

பாவம்... அவளும் ஓர் இளம் பெண் தானே?

என் மௌனம் அவள் சொற்களை நியாயம் என்று சொல்லிவிட்டது போல் ஓவராகவே பேசத் தொடங்கி யிருக்கிறாள்.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன்.

என் பொறுமையின் இறுதிக் கோட்டை சந்தித்தே தீருவதென்று சத்தியப் பிர மாணம் எடுத்தவள் போல அவள் பேச ஆரம்பித்தாள்.

யாமினி என் வயதொத்தவள் என்றாலும் ஒரு உண்மையான தோழியாய், வாழ்க்கை யின் மிக அந்தரங்கமான பகுதியைக் கூடப் பகிர்ந்து கொள்ளக் கூடிய இனிமையான சிநேகிதியாய் என்றைக்குமே இருந்தது கிடையாது.

அன்றைக்கு நானும் என் தோழி ஸ்வப்னா வும் மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண் டிருந்தோம். அன்றைக்கென்று பார்த்து எங்கள் உரையாடலில் வந்து மாட்டிக் கொண்டவர் கீட்ஸ். திங்க்ஸ் ஆஃப் ப்யூட்டி பற்றி மெய்மறந்து விவாதித்தோம். அவ ளுக்கும் எனக்கும் கிட்டத்தட்ட ஒரே டேஸ்ட். நேரம் போவது தெரியவில்லை.

ஸ்வப்னா திடீ ரென்று பாரதி யாரின் கண் ணம்மா பற்றிப் பேச ஆரம்பித் தாள். அவள் அழகை அவர் வர்ணிக்கும் விதத்தைக் காளிதாசனின் மேகசந்தேசத்தோடு ஒப்பிட்டு நான் ஆர்வத்தோடு ஆரம்பித்தேன். கண் ணம்மா — என் காதலி என்ற காட்சியில் அவருடைய சொல்லாட்சியை உணர்ச்சி யுடன் மெலிதாய்ப் பாடினேன்.

சுட்டும் விழிச் சுடர்தான் — கண்ணம்மா
சூரியச் சந்திரரோ?
வட்டக் கரியவிழி — கண்ணம்மா
வானக் கருமை கொல்லோ?
பட்டுக் கருநீலப் புடவை பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில் தெரியும் நட்சத்திரங்களடி
சோலை மலரொளியோ — உனது
சுந்தரப் புன்னகைதான்?
நீலக்கடலலையே—உன் நெஞ்சிலலைகளடி!.
கோலக் குயிலோசை — உனது
குரலினிமையடி!

என்னை மறந்து, இருக்கும் இடத்தை மறந்து, எதிரிலிருப்பவளை மறந்து கண் களை மூடி எங்கோ நான் பறந்து கொண் டிருக்கும் போது—

யானைப் பிளிறலாய் அந்தக்குரல் ஒலித் தது-

''சரிதான் நிறுத்துடி! பெரிய பாட்டு...

பாரதியாம் பாரதி... வெளியில் தெரியற அழகை வார்த்தை ஜாலங்களோட என் னிக்கோ எழுதிஞராம்... இவ உருகிப்போய்ப் பாடுகிருளாம்... என் இப்படி அழகு அழ குன்னு அலையறீங்க?'' — யாமினிதான்.

வெடித்துப் போனேன் நான். உயிருக்குயி ராய் மதிக்கும் ஒரு கவிஞனை இப்படிச் சொற்களாலேயே காலில் போட்டு மிதிக்கும் யாமினி ஒரு தாடகை போல் தெரிந்தாள்.

''அழகாயிருக்கோம்னு கர்வம் உங்களுக்கு. அதான் விடிஞ்செழுந்தா கீட்ஸ் பத்தியும் ப்யூட்டி பத்தியும் பாரதி பத்தியும் பேசி உங்களை நீங்களே புகழ்ந்துக்கிறீங்க... உங்க மேல மட்டும் தப்பில்லே. அந்தக் கவிஞர்கள் மேலேயுந்தான். அவங்க கண்ணுக்கு ஏன் அழகான பொருள்கள் மட்டும் கிடைக்க ணும்? அழகான காட்சிகளுக்கு மட்டும்தான் கவிதையாகிற உரிமை இருக்கா? சாசுவத மில்லாத வெளி அழகை வைட்டல் பாய்ண்ட் வெச்சு காவியங்கள் உருவாக்கி எத்தனை நெஞ் சங்களை இவங்க வேதனைப் படுத்தியிருக்காங்க?'' குமுறி ஞள்.

என் ஆத்திரம் குப்பென்று அடங்கிப் போனது. அவள் பேச்சின் ஓரத்தில் வழிய வந்த நியாயம் என்னை இழுத் தது.

ஸ்வப்னு தலை குனிந்து எழுந்து போனான்.

யாமினியை மெல்ல அணைத்தபடி ''ஸாரியாமினி! இனிமே அழகு பத்தி விவரிக் கிற எந்தக் கவிதையையும் இனிமே பேச மாட்டேன்.... வெரி ஸாரி'' என்றேன்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவள் என்னுடன் அதிகம் பேசவில்லை. ரொம்ப அத்தியாவசியமான நேரங் களில் பேசும் பேச்சுக்கூட போன வாரம் நடந்த அந்த நிகழ்ச்சியில் வழித்து விட்டது போல் நின்று போயிற்று.

யாமினியைப் பெண் பார்க்க வந்த அந்த இளைஞன் நாசுக்காய் என் அப்பாவிடம் சொல்லி விட்டானும். இளைய பெண்ணான என்னை மணந்து கொள்ளத் தான் தயாராய் இருப்பதாய் அவன் சொன்னதை . அப்பா பாதி மகிழ்ச்சியும் பாதி வேதனையுமாய்ச் சொன்னபோது பொங்கிப் போய்விட்டாள். அடிவயிற்றிலிருந்து வெளிப்பட்ட ஒரு விம்மலுக்கு உயிர் கொடுத்துவிட்டு முகத்தை மூடியபடி உள்ளே ஓடிவிட்டாள்.

திகைத்துப் போய் நின்றேன்.

''ராகினி... இந்த இடம் ரொம்ப நல்ல இடம்... உன் அழகு, அறிவு ரெண்டுக்கும் ரொம்பப் பொருத்தமானவன் சுரேஷ்... இதை விட்டுடறது மடத்தனம்... உனக்குச் சம்மதமா சொல்லு... யாமினியை நாங்க சமாதானப்படுத்திக்கிறோம்.... உன் இஷ்டம் தான் முக்கியம்'' — அப்பாவும் அம்மாவும் விதவிதமாய்ப் போதிக்க ஒன்றும் தோன்று மல் நின்றேன்.

''**யா**ர் அது?'' என்றாள் யாமினி.

''நான்தான் அக்கா...''

மறுபடி படுத்துக் கொண்டாள்.

''உள்ளே வான்னு சொல்லக் கூடாதா? நான் என்ன தப்புப் பண்ணிட்டேன்னு இவ் வளவு வெறுப்பைக் கொட்றே அக்கா?'' — தழுதழுத்தேன்.

சட்டென்று எழுந்தாள். ரத்தக் களறி யாய், கண்கள் சிவக்க இதழ்கள் துடிக்கக் கோபப் பெண்ணாய் முறைத்தாள்.

''உன் மேல் தப்பில்லடி... உங்க எல் லார்க்கும் கண்ணைக் கொடுத்திருக்கானே அந்த உருவமில்லாதவனைச் சொல்லணும்... அந்தக் கண்ணால அழகானவைகளை மட்டும் தான் பார்க்கணும்னு அர்த்தமில்லாத ஒரு அறிவைக் கொடுத்திருக் கானே அவன் மேலதான் தப்பு'' — குமுறி வெடித் தாள்.

அவள் பார்வையைச் சந்திக்கப் பயந்தேன்.

பொறாமை, வயிற்றெரிச் சல், ஆத்திரம் எல்லாப் பண்புகளும் பல்போட்டது போல் பளிச்சிட, உலகத்து வெறுப்பை யெல்லாம் மொத்தமாய் வழித்துக் கலந்து பார்வையாய் மாற்றி என்மீது வீசினாள். 'எனக்கு வரவேண்டியவாழ்க்கையைப் பறித்துவிட்டாயே பாவி' என்று சொல்லாமல் சொன்ன அந்தக் கண்கள், அதன் கோபம்.... ஓ!

மெள்ள ''அக்கா'' என் றேன்.

''அப்படிச் சொன்னா உனக்குத்தான் கேவ லம். ஏன் பொய் சொல்றேன்னு உன் ஃப்ரண்ட்ஸ் கேலி பண்ணுவாங்க'' என்றாள் திமிரோடு.

''என் வேதனையைக் கொஞ்சம் புரிஞ்சுக் கோயேன்... ப்ளீஸ்'' என்றேன் தவிப்போடு.

முதன் முதலாய் அவள் பார்வையில் மெலிதான ஓர் ஆச்சரியம் தெரிந்தது. புருவங்களை உயர்த்தி, ''என்ன?'' என்றாள்.

முகத்தை மூடிக் கொண்டு அழ ஆரம் பித்தேன்.

''என்னடி ராகினி?... நீ எதுக்கு அழறே இப்போ?'' வழக்கமான வெறுப்பு குரலில் குடிகொண்டது.

''இந்தக் கல்யாணத்துல எனக்கு இஷ் டமே இல்லேக்கா... எப்படியாவது இதை நிறுத்தியாகணும்.''

யாமினிநிமிர்ந்து உட்கார்ந்தாள். முகத்தில்



''எங்க மானேஜர் ரொம்ப முன் ஜாக்ரதையானவர்!''

''அப்படியா?''

ஆம். கார்பன் வைச்க டைப் பண்ணின 'மாட்டரை'க்கூட தனித்தனியே படித்துப் பார்த் துட்டுத்தான் கையெழுத்துப் போடுவார்.

- ஸ்ரீதேரா

ஆர்வம் தெரிந்து விழிகளில் வெளிப்பட்டது.

''ஏன்? அந்த சுரேஷுக்கு என்ன?''

''எனக்குப் பிடிக்கலே.''

''ஏன் பிடிக்கலே?''

''எல்லார்க்கும் எல்லாரையும் பிடிக்கணும்னு ரூல் ஒண்ணும் இல்லையே அக்கா?''

''பிடிக்கறதுக்குக் காரணம் இல்லேன்னாலும் பிடிக்கலேன்னு சொல்றதுக்கு ஒரு காரணம் இருக்கும் சொல்லு.''

மௌனம்.

''சொல்லேண்டி... பழமா வெச்சிருக்கே வாயிலே?''

நிதானமாய் நிமிர்ந்து. ''நான் ஒருத்தரை காதலிக்கிறேன். அவரைத் தவிர இன்னொருத்தரை என்னால ஏத்துக்க முடியாது'' என்று சொல்லிவிட்டு அவள் முகத்தை ஆராய்ந்தேன்.

சுவாரஸ்யமான கதை கேட்பவள் போல் அவள் கண்கள் மின்னின.

''அப்படியா?''

''ஆமாக்கா... நீயே சொல்லு. உயிருக்குயிராக் காதலிக்கிறவரை மறந்துட்டு வேற ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா எப்படி சந்தோஷமா இருக்க முடியும்?...'' குலுங்கினேன். ''நீதான் அப்பா கிட்டே பேசி இதை நிறுத்தணும்... ப்ளீஸ்.''

தோளை அசைத்து அலட்சியமாய் எழுந்தாள்.

''அக்கா... எனக்கு ரொம்பப் பயமா இருக்கு... நானும் சிவாவும் எவ்வளவோ கனவுகளை வளர்த்துக்கிட்டு இருக்கோம். ஆசைகள் கற்பனைகள் நெறைஞ்ச , ஒரு எதிர்காலத்தை அனுபவபூர்வமாக உணர்

---

சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் மிஸ் எலன் சர்ச் என்ற அமெரிக்கப் பெண்மணி ஒருவர் சான்பிரான்ஸிஸ்கோவில் உள்ள மருத்துவமனையொன்றில் மருத்துவப் பயிற்சி அளிக்கும் நர்ஸாகப் பணி புரிந்து கொண்டிருந்தார். விமானம் ஒன்றில் ஒரு முறை பயணம் செய்து கொண்டிருந்தபோது 'விமானப் பயணம் அலுப்பில்லாமல் நடைபெறப் பணிப் பெண்களை நியமித்தால் என்ன?' என்று நினைத்துத் தன் திட்டத்தை போயிங் விமான போக்குவரத்துக் கம்பெனிக்குத் தெரிவித்தார். அவர்களுக்கும் அது சரியாப் படவே இந்தத் திட்டத்துக்கு ஒப்புக்கொண்டு யோசனை தெரிவித்த எலன் சர்ச் மற்றும் ஏழு பெண்களை விமானப் பணிப் பெண்களாக நியமித்தனர். 1930ம் ஆண்டு மே 15ந் தேதி உலகின் முதல் விமானப் பணிப் பெண்களைச் சுமந்து கொண்டு அந்த விமானம் அமெரிக்காவின் ஒக்லாண்டு, கலிபோர்னியா சேயின், யாமிங் நகரங்களுக்கு பறந்து சென்றது. ஆக விமானப் பணிப் பெண்களின் முன்னோடி மிஸ் எலன் சர்ச் எனலாம்.

❋ கேப்டன் துர்பா பானர்ஜி என்ற பெண்மணி இந்தியாவின் முதல் பெண் பைலட் ஆவார். இவர் போயிங் 737 விமான பைலட்டாகப் பணிபுரிகிறார்.

❋ இந்திய விமானங்களில் பயிற்சி முடிந்த பணிப் பெண்கள் வேலையில் சேர்ந்ததும் அவர்களுக்குக் கிடைக்கும் சம்பளம் ரூ. 1000.

❋ 'ஏர்-இந்தியா' விமானக் கம்பெனியில் 1000 பெண்களும், இந்தியன் ஏர்-லைன்ஸில் 450 பெண்களும் ஏர்-ஹோஸ்டஸாகப் பணி புரிகிறார்கள். அமெரிக்காவின் யுனைடெட் ஏர்-லைன்ஸில்தான் அதிகம் பேர், 7300 பேர் பணி புரிகிறார்கள். அத்தோடு அமெரிக்கன் ஏர்-லைன்ஸில் 5000 பேர் பணி புரிகிறார்கள். உலகம் முழுவதிலும் 1978ம் ஆண்டுக் கணக்கின்படி 93,000 பெண்கள் ஏர்-ஹோஸ்டஸாக பணிபுரிகிறார்கள். 15 பயணிகளுக்கு ஒரு பணிப் பெண் விமானத்தில் 'சர்வ்' செய்கிறார்.

## 'ஏர்-ஹோஸ்டஸ்'



நாளுக்காகக் காத்துக்கிட்டிருக்கோம். ஒருத்தர் மேல் ஒருத்தர் உயிரையே வைச்சிருக்கோம்... எங்களைப் பிரிச்சுடாதே.. நீதான் அப்பா கிட்டே சொல்லி...'' அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு கதறினேன்.

யாருக்கு வந்த விருந்தோ என்ற பாவனையில் ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடி நின்றாள் யாமினி! நல்லா அனுபவி.... செய்யாத தப்புக்காக நான் தண்டனை அனுபவிச்சேன். இயற்கையின் கேள்விக்குப் பதில் சொல்லாம நான் தவிச்சபோது நீங்க சுத்தி நின்னு வேடிக்கை பார்த்தீங்களே? இப்போ நீ அழு... வேடிக்கை பார்க்கறது என்னுடைய டர்ன் இப்போ' என்று தீர்மானமாய்ப் பேசியது அவள் முகம். திருப்தியான பார்வை பிறந்தது.

•

சுரேஷின் கையிலிருந்து தாலி பொன் மாலையாய் என் கழுத்தை அலங்கரித்த அந்த விநாடியில் பூவும் அரிசியும் மஞ்சளும் கொத்துக் கொத்தாய்ப் பவித்திரத் தன்மைகளுடன் எங்கள் மேல் விழுந்து மௌனமாய் ஆசீர்வதிக்க வெட்கத்துடன் அவர் பார்வையைச் சந்திக்க முடியாமல் தலை குனிந்து...

மெல்ல நிமிர்ந்து பெண்கள் பக்கம் பார்த்தேன்.

யாமினி குரூரமான திருப்தியுடன் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாள். முழு மனத்துடன் சிரித்தாள். 'பெண்ணே...வெளியில் சந்தோஷமாய் இருப்பதாய் நீ நடிக்கும் நடிப்பை எல்லோரும் உண்மை என்று நம்பிக்கொண்டிருக்கிறார்கள். எனக்குத்தானே உண்மை தெரியும்? பாவம் நீயும் அந்த சிவாவும்! போலித்தனமான அவள் இரக்கம் நெல்லிக் கனியாய்த் தெரிந்தது. 'நல்லா கஷ்டப்படு... வாழ்க்கை முழுகம் காதல் தோல்வியை நெனச்சு நெனச்சு வேதனைப்படு. அந்த சுரேஷையும் வேதனைப்படுத்து.... என்னை வேண்டாம்னு ஒதுக்கினவன் இல்லையா அவன்?... அவஸ்தைப்படட்டும்'... என்ற அவள் எண்ணம் துல்லியமாய்த் தெரிந்தது.

எனக்குள் சிரித்துக் கொண்டேன்.

யாமினி... நன்றாய் ஏமாந்து விட்டாய்...

'உனக்கு வரவேண்டியவரை நான் மணந்து பூவும் பூரிப்புமாய் வாழ்க்கை நடத்தினால் வயிற்றெரிச்சலில் வெந்து விடுவாய் நீ... என் சந்தோஷமான இல்லறத்தைப் பார்க்கும் ஒவ்வொரு கணமும் வேதனையில் துடிப்பாய்...நான் இருக்க வேண்டிய இடம், நான் இருக்க வேண்டிய இடம் என்று நினைத்து நினைத்துப் பொறாமையில் மறுகுவாய். கன்று பின்றுவென்று சாபமிடுவாய். அது பலித்துவிடுமோ என்ற ஆதாரமில்லாத பயம் எனக்கு. நானும் பெண் தானே? இப்போது அந்தப் பயம் எனக்கில்லை. கற்பனை செய்து நான் சொன்ன கதையை ஒரு பர்ஸெண்ட் குறையாமல் நம்பிவிட்டாய். நான் வேதனையில் நீந்துவதாய்ச் சந்தோஷப்படுகிறாய். என் நாடகத்துக்குப் பெரிய வெற்றி யாமினி. என்னைப் பார்க்குமிடத்தி லெல்லாம் என் காதல் தோல்விதானே உன் முன் நிற்கும்!'

அவளுடைய சிரிப்பு என்னுடைய வெற்றியின் பிரதிபலிப்பு என்று அவளுக்குத் தெரியாது!

---

# அழியாத கோலங்கள்!



தஞ்சை, மதுரை, திருச்சி பக்கம் பிரபல திருமணம் என்றால் ரங்கோலி கோலம் போட திருமதி சாந்தா நாராயணனை அழைப்பார்கள். திருமணம் செய்துகொள்ளும் மணமக்களை மணக்கோலத்துடன் ரங்கோலியால் பெரிதாக வரையச் செய்வது அங்கே ஒரு பாஷனாகி வருகிறது. சாதாரண வர்ணப் பொடிகளையும், காப்பி வடிகட்டிய பொடியையும் கெட்டுப்போன தேங்காய்த் துருவல்களையும் வர்ணமிட்டு வியக்கத் தக்க விதமாக மாற்றி அவைகளைக் கொண்டு வர்ண ஓவியங்களைப் படைக்கும் சாந்தா நாராயணனின் திறமை எல்லோரும் அறிந்ததே! இவ்வாறு வர்ணப் பொடிகளைத் தூவி இவர் படைக்கும் கோலங்களும் அழகோவியங்களும் எத்தனை நாட்கள் அழியாமல் இருக்கும்? இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டபோது அவர் தந்த பதில் என்னை மிகவும் வியப்பில் ஆழ்த்தியது! திருச்சியில் ஒரு கல்யாணத்துக்கு. திருமணத் தம்பதிகளை வரைந்துவிட்டு வந்தாராம் இவர். அந்தப் படம் மிக அழகாக அமைந்து இருக்கவே அதை வரைந்திருந்த அறையை அப்படியே பூட்டிப் பாதுகாத்து வருகிறார்கள் வீட்டின் சொந்தக்காரர்கள்! இரண்டு வருடம் கழித்து அந்தப்பக்கம் போனபோது பாதுகாக்கப்பட்டு வரும் அந்த ரங்கோலி ஓவியத்தைப் பார்த்த அவருக்கு மிகவும் வியப்பாகி விட்டதாம்! அப்படியே புத்தம் புதிய ஓவியம்போல் இருக்கிறது என்றார் அவர்!

திருமதி சாந்தா நாராயணன் கூறக் கேட்டவர்: ரமணி ரங்கநாதன்

# குழந்தைக்கு ஒரு கதை!



















புகைப்படங்கள்: P.E.ரமணன்

நடிப்பு:

# மலிவான விலையில் எழிலான சேலைகள்

அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்ட
கண்ட்ரோல்டு விலையில்
ஜனதா சேலைகள், வேட்டிகள், லுங்கிகள்.

| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| | ரூ. பை. | ரூ. பை. |
| லுங்கிகள் | 15.60 | 10.40 |
| | 22.00 | 14.15 |
| சேலைகள் | 35.50 | 17.20 |
| | 36.60 | 21.20 |
| வேட்டிகள் | 8.80 | 4.50 |



மங்களவேத்யா என்று ஒரு மராட்டிய ஊர். அநேக மகான்கள் பிறந்து மக்களை உன்மத்த மாக்கிய ஊர். அங்கே அவள் ஒரு தாசி மகள். பெயர் கனோபத்ரா. சிறுமிப் பருவம் தாண்டிக் குமரியாக வடிந்திருந்தாள். நீல விழிகள்; நிலாப் போல மேனி. பருவத்தின் பக்குவங்கள் அத்தனையும் அவள் மேனி மீது. ஊரில் மட்டும் அழகியல்ல அவள். அந்தப் பிரதேசத்திலேயே அவள்தான் அழகுராணி என்று பெயர் எடுத்தாள்.

அவளைப் பார்ப்பதற்காகவே பலர் வந்தார்கள். தெருவில் காணமாட்டோமா என்று ஏங்கினார்கள். அவளைத் தூர நின்று பார்த்துத் தங்கள் வேட்கைகளைத் தணித்துக் கொண்டவர்கள் பலர்.

அந்த இளங்குமரி தன் அபார அழகை நன்கு உணர்ந்திருந்தாள். அந்த நினைவே அவளை மேலும் நளினம் ஆக்கியது. நடந்தால் நாட்டியமாக நடந்தாள். விழித்தால் கடைக் கண்களால் விழித்தாள். பேசினால் சங்கீதமாகப் பேசினாள்.

இந்த இளம் பெண்ணை எந்த ஆடவன் அடையப் போகிறான் என்று எல்லோருக்கும் பொறுமல் இருந்தது.

அந்தப் பாக்கியம் யாருக்குக் கிட்டும்?

ஊரிலும் சுற்று வட்டாரத்திலும் உள்ள செல்வந்தர்கள் போட்டி போட்டு முந்திக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் கனோபத்ராவின் மனம் உலக சுகங்களில் விழவில்லை. பொய்யும் பொருளும் புகழ் மாலைகளும் அவளைச் சுற்றிக் குவிந்திருக்கும்போது, அவற்றின் மீது அவளுக்கு நாட்டம் விழவில்லை. ஒரு வெறுப்பே ஏற்பட்டது.

''இவையெல்லாம் நிலையில்லை. கடவுளுக்குத்தானே நான் அடிமைப் பெண்! அவரையல்லவா நான் நினைக்க வேண்டும். அவர் அல்லவா என் சுகம்!'' என்று எண்ணினாள்.

இந்த நிலையில் அவள் அழகின் பிரசித்தம் விதர்ப்ப தேசத்து அரச சபை வரை பரவி விட்டது.

வெறும் செவிக் கேள்வியிலேயே அரசருக்கு அவள்மீது அபார மோகம் ஏற்பட்டது.

அவளை எப்படியும் பிடித்து, தமது அந்தப்புரத்தில் அடைத்து விட வேண்டும் என்று நினைத்தார். தமது ஆசை நாயகிகளுக்குத் தலைமையான ஸ்தானத்தை அந்தப் பெண்ணுக்கு அளிக்க வேண்டும் என்று நினைத்தார்.

ஒரு பல்லக்கில் பொன், மணி, திரவியங்கள், வஸ்திரங்கள் எல்லாவற்றையும் வைத்துத் தகுந்த பரிவாரங்களுடன் மங்களவேத்யாவுக்கு அனுப்பினார்.

ஊர் கொள்ளாத ராஜ பரிவாரம் கனோபத்ராவின் வாசலில் வந்து நின்றது. உள்ளே ராஜ அதிகாரி தமது மன்னனின் விருப்பத்தைப் போய்த் தெரிவித்தார்.

''ஐயா; இந்தப் பொருளும் ஆடம்பரமும் எனக்கு வேண்டாம். என்னை விட்டுவிடுங்கள்'' என்றாள் கனோபத்ரா.

ராஜ அதிகாரி பல வேண்டுகோள் விடுத்தார். நைச்சியமாக மிரட்டினார். ஆனால் பத்ரா இசையவில்லை.

ராஜ பரிவாரம் எல்லாம் வெறுங் கையுடன் திரும்பியது.

அப்போது பண்டரிப்பூரில் ஏகாதசி நாள் வந்தது. அது அந்தப் பிரதேசத்துக்கே பெரும் விழா.

கூட்டம் கூட்டமாக யாத்ரிகர்கள் பண்டரிபுரம் நோக்கிச் சென்றார்கள்.

போகும் வழியெல்லாம் விட்டலரின் நாமாவளிகளை இறைத்துச் சென்றார்கள்.

கிராமங்களும் நகரங்களும் பக்தி ஓசையில் உன்மத்தமாயின.

ஒவ்வொருவரும் கடவுளின் நினைவில் போதையானார்கள்.

யாத்ரிகர்கள் கூட்டம் ஒன்று மங்கள வேத்யா தெருக்கள் வழியாக பஜனை பாடிக் கொண்டு சென்றது.

பத்ரா வெளியே ஓடிவந்து அவர்களைப் பார்த்தாள்.

''யாத்ரிகர்களே! எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டாள்

''தெரியாதா உனக்கு? பண்டரிபுரம்'' என்றார்கள்.



# கனே மித்ர

ஸ்ரீவேணுகோபாலன்



## பக்தவிஜயக் கதைகள்

''அங்கே எதற்கு?'' என்றாள் பத்ரா.

''நல்ல கேள்வி கேட்டாய் பெண்ணே; விட்டலரின் பொற் பாதங்களைப் பார்க்கவே போகிறோம்'' என்றார்கள் யாத்ரீகர்கள்.

''நானும் வரலாமா?'' என்றாள் அவள்.

''ஆகா! இதற்கு என்ன தடை? அவசியம் வா! அவன் நாமாவைப் பாடு.''

''உங்கள் பாண்டுரங்கன் என்னை ஏற்றுக் கொள்வாரா?''

''நிச்சயம் செய்வார். ஏனெனில் எங்கள் பாண்டுரங்கன் தூய பக்திக்கு எப்போதும் தாகமாயிருப்பவர். அவர் தாகம் என்றும் தணிவதில்லை. ஆகவே நீயும் உன் பக்திப் பிரவாகத்தை அவரது தாகத்துக்கு ஈடாக அளிப்பாய்!''

''இருங்கள்! நான் ஏதாவது எடுத்து வருகிறேன்.''

''ஒன்றே ஒன்றை மட்டும் எடுத்து வா, பெண்ணே! வழிக்கு அது போதும்.''

''என்னது?''

''பாண்டுரங்க நாமம்.''

பத்ராவின் மெய் சிலிர்த்தது. அவசரமாக உள்ளே போனாள். கண்ணீர் பெருகத் தாயாரிடம் வற்புறுத்தினாள்.

அவளையும் அழைத்துக் கொண்டு அந்த யாத்திரைக் கோஷ்டியில் கலந்து கொண்டாள்.

பண்டரிபுரம் போனதும் பத்ரா நீராக உருகினாள். பாண்டுரங்கனைப்பார்த்ததும் இனிமையான அதிர்ச்சி மேனியில் ஓடியது.

மயிர்க்கூச்செறிய அந்தக் கணமே அவள் பாட ஆரம்பித்தாள்.

இனிமையான பாடல்கள் அவை.

எனிதில் மனத்தின் பாறைகளை இளக வைக்கக் கூடியவை.

விட்டலரின் அருமையான பக்தையாக மாறினாள் பத்ரா.



மானேஜர்: ''உன் சம்பளத்தை, 300 ரூபாயிலிருந்து, 400 ரூபாயாக, உயர்த்த முடிவு செய்துள்ளேன்.....''

குமாஸ்தா: ''ரொம்ப நன்றிசார்....!''

மானேஜர்: ''ஆனால், ஒரு கண்டிஷன்....! இரண்டு மாதத்திற்கு, ஒரு தடவைதான் சம்பளம் தருவேன்!''

ஆர். ஈஸ்வரி

சதா சர்வ காலமும் கோவில்தான் அவள் வாசம். விட்டலர்தான் அவள் நேயம்! உலகத்தை மறந்து பக்தி ரசத்தில் ஆனந்தமாக நீந்தினாள். பத்ராவின் பக்திப் பாடல்களும் அவள் அழகும் எங்கும் பரவிட, விதர்ப்ப அரசருக்கும் செய்தி போயிற்று.

பத்ரா பண்டரிபுரத்தில் இருக்கிறாள் என்ற செய்தி! ஏற்கனவே ஒரு முறை ஏமாந்தவர் அவர். இப்போது மீண்டும் பழைய ஆசை கிளம்பியது. அவளை எப்படியும் அடைந்துவிடவேண்டும் என்று எண்ணினார்.

பரிவாரங்களைப் பண்டரிபுரம் அனுப்பினார்.

ஒருநாள் அலைமோதிக் கொண்டு அவை பண்டரிபுரம் நகரில் நுழைந்தன.

பத்ரா அதைக்கேள்விப்பட்டாள். பண்டரிநாதர் கோயிலுக்கு ஓடினாள்.

சேவகர்கள் அங்கே விரைந்து சென்று அவளை நிறுத்தினார்கள்.

''நீ உடனே எங்களுடன் வரவேண்டும். இது ராஜ கட்டளை!'' என்றார் அதிகாரி.

பத்ரா திகைத்தாள்.

''வராவிட்டால்?'' என்றாள்.

''உன்னைத் தூக்கி வரும்படி உத்தரவு. அதனால் மரியாதையுடன் எங்களுடன் வந்துவிடவும்.''

தயங்கினாள் பத்ரா.

''இதோ இருங்கள்! பண்டரி நாதனிடம் விடை பெற்று வருகிறேன்'' என்றாள்.

அதிகாரி சம்மதித்தார்.

பத்ரா கோவிலுக்குள் போய் சன்னதியில் நுழைந்தாள். விட்டலரின் பாதங்களைப் பற்றிக்கொண்டு மனம் உருகிப் பாட ஆரம்பித்தாள்.

''விட்டலரே! உன் பக்தைக்கு இந்த சோதனையா? உன் நாமம்தான் என் உயிர். இவர்கள் என்னைக் கொண்டு போக வந்திருக்கிறார்கள். ஒரு சிங்கத்துக்கு அர்ப்பணிக்கப்பட்ட உணவை ஒரு ஓநாய் அடையலாமா? கூடாது.''

கண்ணீராக மல்கி, அகம் புறம் இரண்டையும் விட்டலரோடு ஐக்கியப்படுத்தி பக்திப் பெருவெளியில் பாய்ந்தாள் அவள்.

அவள் ஜீவன் அவளது உடலை விட்டு விட்டலருடன் ஒன்றாகக் கலந்தது.

வெளியே வெகுநேரம் காத்திருந்த அதிகாரி உள்ளே வந்து பார்த்தார்.

அவர் பார்த்தது பத்ராவின் ஜீவனற்ற உடலைத்தான்.

ஜீவன் போய்விட்டது.

ஆனால் அவள் முகத்தில் ஜீவகளை இருந்தது. ஓர் அமானுஷ்யப் புன்னகை அதில் மிக அழகாகப் பரவியிருந்தது.

அவளது உடலைக் கோவிலின் தெற்கு வாயில் பக்கம் புதைத்தார்கள்.

வெகு சீக்கிரம் அவளைப் புதைத்த இடத்தில் ஒரு விசித்திரமான மரம் வளர்ந்தது.

யாரும் அதுவரை பார்த்திராத விநோத மரம் என்று எல்லோரும் கூறினார்கள்.

அந்தப் புண்ணிய மரம் இன்னும் விட்டலரின் கோவில் வாயிலில் இருந்து வருகிறது.

இன்றும் பத்ரா பாடிச் சென்ற பாடல்கள் பக்தர்களின் நாவுகளில் உலாவி வருகிறது.

# டி.வி.யின் மேல் ஒரு தென்னை!

குட்டி குட்டியாக நிறையத் தென்னை மரங்கள்! ஷோ கேஸில் வைப்பதற்கு; கல்யாணங்களில் அன்பளிப்பாகத் தருவதற்கு; டி. வி. மேல் அழகாக வைப்பதற்கு என்று பல வகைகளில் உபயோகப்படுத்திக்கொள்ளலாம். இவைகளெல்லாம் பிளாஸ்டிக்கில் செய்யப்பட்டவை போல இருந்தாலும், பினைவுட்டில் கையால் மிகவும் நேர்த்தியாகச் செய்யப்படுபவை.

இவைகளைச் செய்து வரும் திருமதி ராஜம்மாளும், அவருடைய மகள் திருமதி லலிதா நரசிம்மனும் இந்தக் கலையைக் கேரளாவிலிருந்து கற்றுக் கொண்டோம் என்கிறார்கள்.

"நாங்கள் ஒருமுறை வி. டி. ஐ.க்குப் போனபோது இது போன்ற தென்னை-மரங்கள் நிறைய விற்பதைப் பார்த்தோம். அப்போதே அதை எப்படிச் செய்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசை. ஒரு தென்னை மரத்தை வாங்கிக் கொண்டு வந்து வீட்டில் பிரித்துப் பார்த்தோம். அப்படித் தெரிந்து கொண்டுதான் இந்தத் தொழிலை ஆரம்பித்தோம்.

இன்றைக்கு எங்களுக்குச் சாப்பாடு போடுவதே இந்தக் கலைதான். நாங்கள் தமிழ் நாட்டிலும், ஆந்திராவிலும் நிறைய சப்ளை பண்ணுகிறோம். பாங்க் ஆஃப் பரோடாவிடம் கடன் வாங்கித்தான் இந்தத் தொழிலை விருத்தி செய்தோம். எங்களுடைய கைவினையின் தரம் உயர உயர, நிறைய ஆர்டர்கள் வருகின்றன.

இந்தத் தொழிலில் சிறிது கஷ்டங்கள் இருக்கத்தான் செய்கின்றன. தென்னங் குருத்துக்களை ரவையில் செய்தோம். அதை எலி தின்று விடுகிறது என்று புகார் வர ஆரம்பித்தவுடன் மண்ணில் செய்ய ஆரம்பித்தோம். இப்பொழுது எங்களுடைய ஒரே பிரச்னை தேவையான மரம் உடனுக்குடன் கிடைக்காமல் போவதுதான். அந்தப் பிரச்னையும் தீர்ந்துவிடுமானால் எங்களால் மேலும் நிறையத் தென்னை மரங்களை உற்பத்தி செய்ய முடியும்....."

என்கிறார்கள் இவர்கள்.

வளைந்து நிற்கும் ஒரு தென்னை மரம்; அதன் பக்கத்தில் இரண்டு பொம்மை குடிசை வீடுகள்; தேவையானால் ஒரு சின்ன மின்சார விளக்கையும் அதற்குள் பொருத்தி விடுகிறார்கள்.

பெண்களாகவே முழுமையாக முன்னின்று செய்துவரும் இந்தத் தொழில், அவர்களுடைய வாழ்வுக்கு வழிகாட்டியாக விளங்குகிறது.

—வி. மஞ்சுளா ரமேஷ்



குமாரி மர்யா—

**விஜயா மருத்துவமனையில் 'டயட்டீஷனாக' இருந்து, தற்போது தனியார் மருத்துவரிடம் பணி புரிந்து வருகிறார். நோய் வந்த பிறகு அதற்கு மருந்தை தேடுவதைவிட, முறையான உணவுப் பழக்கத்தின் மூலமாகவே ஆரோக்கியமான உடலைப் பெறலாம் என்பது இவரது கருத்து.**

பெண்கள் பத்திரிகையில் உணவு பற்றிய பகுதி..... 'போச்சுடா! முந்திரியும் நெய்யும் கொட்டிக் கிளறி, புதுப் பெயராக வாயில் நுழையாத ஒன்றையும் நாமகரணம் செய்து....' — இந்தத் தினுசில்தானே உங்கள் கற்பனை செல்கிறது? கொஞ்சம் நில்லுங்கள்.

நான் உங்களுக்குக் கூற நினைப்பதெல்லாம் 'டயட்' என்னும் சிறுணவு அல்லது சம சரிவிகித உணவைப் பற்றியே. 'டயட்' என்றதுமே உடல் பருமனைக் குறைக்கப் படாத பாடுபடும் நாகரிகப் பெண்கள்தானே உங்கள் நினைவுக்கு சட்டென வருகிறார்கள்? ஆனால் கொடி உடலுக்காக மட்டுமின்றி, தன் குழந்தைப் பருவம், குமரிப் பருவம், தாய்மை நிலை, பாலூட்டும் பருவம் போன்ற தன் ஒவ்வொரு நிலையிலும் பெண்கள் தம் உணவைப் பற்றிய கவனத்துடன் இருக்க வேண்டும்.

ஒரு கர்ப்பிணி, பால் கொடுக்கும் தாய், குழந்தை இவர்களின் உணவு முறை சீர் படுத்தப்பட்டு விட்டால் சமூகத்தின் ஒரு பெரும் பகுதி ஆரோக்கிய உலகை நோக்கி வெற்றி நடை போடுவது திண்ணம். ஒரு நாட்டின் செல்வம் அதன் குழந்தைச் செல்வங்களின் ஆரோக்கியம்தான். வெளி நாடுகளை ஒப்பிடும்போது இவ் விஷயத்திலும் நாம் ஏழைகளே. ஆதாரப் படிப்பைக் கட்டாயமாக்கியது போல் குழந்தைகளுக்கு 'சத்துணவூட்டலையும்' கட்டாயமாக்குவது அவசியம்.

இந்த முதல் உணவுச் சிறப்புப் பகுதியில், கர்ப்பிணிப் பெண்களுக்கான சத்துணவு பற்றிச் சற்றுக் கவனம் செலுத்தலாமா?



சென்ற முப்பது ஆண்டுகளில், 'பின்ளைப் பிறப்பு' பற்றிய வீண் பயங்களும், ஆபத்துக்களும் மிகச் சிறந்த விதத்தில் குறைந்துபோய்ப் பெண்கள் ஆரோக்கியமான எண்ணங்களை வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள் எனலாம். கர்ப்ப காலத்தில் கவனம் செலுத்தி வளர்க்கப்படும் குழந்தையே பிறந்த பின்னும் ஆரோக்கியமாக வளருகிறது. அநாவசியமாக மருந்துகளை உட்கொள்வது, சத்தில்லாத உணவு வகை, சோம்பேறித்தனம், வீண் கற்பனைகள், பயம் ஆகியவை பிள்ளைப் பேற்றைக் கடினமாக்கும்.

எதனால் ஒரு கர்ப்பிணிக்கு உணவில் கூடுதலான கவனம் தேவைப்படுகிறது? அவள் தன் வளர்ச்சியை மட்டுமல்லாமல் மற்றொரு உயிரை உருவாக்கவும், அதன் ஆரோக்கியமான வளர்ச்சிக்கும் கூடப் பொறுப்பேற்கிறாள். இதனால் அவள் உணவில் சாதாரண உணவைக் காட்டிலும் கால்ஷியம், சில உயிர் சத்துக்கள், இரும்புச் சத்து, புரதம், மற்றும் அதிக கலோரிகள் அதிகமாகத் தேவைப்படும்.

ஒவ்வொரு பெண்ணும் கர்ப்ப காலத்தில் மாதம் ஒரு முறை ஒரே மருத்துவரிடம் பரிசோதனை செய்து கொள்ள வேண்டியது அவசியம். மருத்துவப் பரிசோதனையில் சில சமயம் மருத்துவர்கள் 'உணவுச் சத்துக் குறை (Dificiency) ஏற்பட்டுள்ளதாகக் கூறியிருப்பார். பொதுவாக இரும்புச் சத்து, கால்சியம், ப்ரோட்டீன் குறை நம் இந்திய தாய்மார்களிடையே அதிகமாகக் காணப் படுகிறது.

**கால்சியம்:** கருவில் உள்ள குழந்தையின் எலும்புகள் பற்கள், சரியானபடி உருவாக மிகத் தேவையான சத்து.

பால், பாலடைக் கட்டி, கடைந்த மோர், பால் சம்பந்தப்பட்ட எல்லா உணவுப் பொருட்கள் (வெண்ணெய், நெய் நீங்கலாக) மற்றும் பச்சைக் காய்கறிகள், கீரை வகைகளில் இச்சத்து காணப்படுகிறது. குறிப்பாக மூளைக் கீரை, முருங்கைக் கீரை, வெந்தயக் கீரை, தானிய வகையில் கேழ்வரகு, கிழங்கு வகைகளில் மரவள்ளி இவற்றில் கால்சியம் சத்து அதிகமாக உள்ளது.

வெறும் அரிசி உணவு மட்டுமே மூன்று வேளையும் உண்ணும் கர்ப்பிணி நிச்சயம் இந்த கால்சியம் குறைபாட்டினால் தாக்கப் படுகிறாள். சரியான சில உணவு தயாரிப்பு மாற்றங்கள் இந்தப் பற்றாக்குறையை ஈடு கட்ட உதவும். தினசரி சாப்பாட்டுக்குப் பிறகு சுத்தமான வெற்றிலைகளுடன் பாக்கு, சுண்ணாம்பு போடுதல் இக்காலத்தில் அதிக பட்ச கால்சியம் உட்கிரகிப்பை உடலுக்குத் தருகிறது. அதிகம் செலவில்லாத இப் பழக்கத்தைக் கர்ப்ப காலத்தில் ...லா

# உணவும் ஆரோக்கியமும்

இந்தியப் பெண்மணிகளும் பின்பற்றுகின் றனர்.

**இரும்புச்சத்து:** சாதாரணமாகவே பெண் களுக்கு இரும்புச் சத்து குறைவினால் ஏற்படக் கூடிய ரத்த சோகை அதிகம் காணப்படுகிறது. சாதாரண காலத்தை விட அதிக ரத்தம் தேவைப்படுகிற கர்ப்பிணிப் பெண்களுக்கோ கேட்கவே வேண்டாம். மகப் பேறின்போது சேதமாகக் கூடிய ரத்தம் முன்னதாகவே சேமிக்கப்படவேண்டியது அவசியம். மாதாந் திர ரத்தப் போக்கை நிறுத்தி விடுவதன் மூலம் இயற்கையே இதற்குத் துணை புரி கிறது. ஆனால் இக்குறை கர்ப்பிணிக ளிடையே சர்வ சாதாரணமாகக் காணப்படு கிறது. இரும்புச் சத்து, பலவித உணவுப் பொருட்களில் காணப்பட்டாலும் கூட அது பல்வேறு காரணங்களினால் முழுவதுமாக நமது உடலில் ஏற்கப்படுவது இல்லை. ஆயி னும், கம்பு, கேழ்வரகு, வெல்லம், பச்சைக் காய்கறி, கீரைகள் இவற்றை உட்கொள் வதுடன், இரும்புச் சத்து மாத்திரைகளுடன் இந்தக் குறையை நிவர்த்திக்கலாம்.

மேலும் அதிகமாகத் தேவைப்படும் வைட் டமின்கள் ஏ, பி காம்ப்ளெக்ஸ் முதலியவை களை சம சரி விகித சீருணவின் மூலமே பெறலாம்.

'ஏ' உயிர்ச் சத்து பால், தயிர், வெண் ணெய், பாலடைக் கட்டி, முட்டையின் மஞ் சள் கரு, ஈரல், மீன் வகைகள், மற்றும் பிற அசைவ உணவு வகைகளிலேயே அதிகம் உள்ளது. சைவ உணவுக்காரர்கள் நல்ல பச் சைக் காய்கறிகள், பசலைக் கீரை, முளைக்கீரை, புதினா, கொத்துமல்லி, கருவேப்பிலை, முருங் கைக் கீரை, முள்ளங்கி இலை, பச்சையான முட்டை கோஸ் இலைகள் மற்றும் ஆழ்ந்த மஞ்சள், ஆரஞ்சு நிறமுள்ள பரங்கி, கேரட், தக்காளி முதலியவற்றில் உள்ள கரோட்டின் (Carotene) என்னும் சத்து மூலம் வைட்ட மின் 'ஏ'வைப் பெறலாம்.

**புரதம்:** கருவின் வளர்ச்சிக்கு இன்றி யமையாத இச்சத்து கர்ப்ப காலத்தில் 20 முதல் 40 சதவீதம் வரை அதிகம் தேவைப்படுகிறது. பால், முட்டை, பருப்பு வகைகள், இறைச்சி, மீன் இவைகளைக் குறிப்பிட்ட அளவு உணவில் சேர்த்தல் அவ சியம். ஐம்பதே காசுக்கு முட்டையில் உள்ள முழுமையான புரதச் சத்து கர்ப்பிணி களுக்கு மிகத் தேவையான ஒன்றாகும். பருப்பு வகைகளைச் சமைக்கும்போது அதை முளைக்கட்டி உபயோகித்தால் அதிலுள்ள உயிர்ச் சத்து அதிகமாகக் கிடைக்கிறது.

மேற்கண்டவை தவிர கலோரி எனக் கூறப் படும் சக்தியும் இக்காலத்தில் 150 முதல் 300 கலோரி வரை ஒவ்வொரு நாளும் அதிகமாகத் தேவைப்படுவதால், தானிய வகைகளையும், மற்ற உணவுப் பொருட்களை யும் இக்காலத்தில் தினசரி சிறிது அதிக மாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

மேலே குறிப்பிட்ட சத்துணவுப் பொருட் களை வசதியுள்ளவர்கள் எந்த விதச் சிரமமு மின்றிப் பெற்றுவிட முடியும். ஆனால் பெரும் பாலானவர்களுக்கு இது ஒரு பிரச்னையே.



குமாரி மாயா

ஆண்குழந்தைகள் பிறந்த ஒரு வருடம் கழித்தும், பெண் குழந்தைகள் பிறந்த எட்டாவது மாதத்திலும் பேச ஆரம்பிக்கின்றன.

-நடேஷ்கன்ன



கர்ப்ப காலத்தில் ஒரு நாளைக்கு அவசியம் தேவையான உணவுப் பொருட்களின் அளவும், ஓரளவு அதிக செலவு வைக்காமலேயே மேற்கூறிய சத்துக்கள் அடங்கிய ஒரு மாதிரி உணவுப் பட்டியலும் கீழே தரப்பட்டுள்ளது. போதுமான அளவு வேலை செய்யும் ஒரு கர்ப்பிணிப் பெண் கீழ்க்கண்ட அளவு உணவு வகைகளைத் தினமும் சாப்பாட்டில் சேர்த்துக் கொள்கிறாளா என்பதைக் கவனிக்க வேண்டும்.

காலை — ½ டம்ளர் பாலில் காப்பி கேழ்வரகு கஞ்சி. சுமார் ½ ஆழாக்கு மாவுடன் அல்லது இட்லி, தோசை 5க்குக் குறையாமல். கருவேப்பிலை சட்னி அல்லது பருப்பு சாம்பார்.

10 மணிக்கு — 1 டம்ளர் மோர் அல்லது எலுமிச்சம் பழச்சாறு.

மதியம் சாப்பாடு — ½ ஆழாக்கு அல்லது அதற்கு சிறிது குறைவான அளவு கோதுமை அல்லது அரிசி உணவு. 4 டேபிள் ஸ்பூன் அளவு பருப்பு (சாம்பாரிலோ, கூட்டிலேயோ) அல்லது 1 டேபிள்ஸ்பூன் பருப்புடன் 1 முட்டை அல்லது 3-4 துண்டுகள் மீன் அல்லது இறைச்சி. ஏதாவது ஒரு கீரை மசியல் ரசம், மோர்.

4 மணிக்கு — சுண்டல் அல்லது வேர்க்கடலை அல்லது அடை, வடை போன்ற பதார்த்தங்கள். ½ டம்ளர் பாலில் காப்பி அல்லது டீ.

சைவ உணவுக்காரர்கள் முட்டை சாப்பிடும் பழக்கம் இல்லாதவர்களாக இருப்பின் தினமும் ஒரு கைப்பிடி அளவு வேர்க்கடலை சாப்பிடலாம்.

• கர்ப்ப காலத்தில் ஒரு பெண்ணின் எடை 18 முதல் 22 பவுண்டு வரை அதிகரிக்கும். இள வயது தாய்மார்களிடையேயும், முதல் பிரசவத்தின்போதும் இது சிறிது அதிகமாக இருக்குமாம். எடை குறைவான பெண்கள் ஊட்டச் சத்தால் தேவையான எடை அதிகரிக்கவும், எடை அதிகமான பெண்கள் குறிப்பிட்ட எடைக்கு மேல் இன்னும் அதிகமாகாமலும் முயற்சி எடுக்க வேண்டியது அவசியம். பிரசவ சமயத்தில் உடல் பருமன் ஒரு பிரச்னை

| | சைவம் (கிராம்) | அசைவம் (கிராம்) |
|---|---|---|
| தானிய வகைகள் (அரிசி, கோதுமை, கேழ்வரகு, கம்பு தினை, சாமை முதலியன) | 400 | 400 |
| பருப்பு வகைகள் | 70 | 55 |
| கீரை வகைகள் | 150 | 150 |
| மற்ற காய்கறிகள் | 75 | 75 |
| பால் | 300 மிலி | 200 மிலி |
| பழவகைகள் | 30 கிராம் | 30 கிராம் |
| எண்ணெய் | 35 கிராம் | 35 கிராம் |
| வெல்லம் அல்லது சர்க்கரை | 40 | 40 |
| முட்டை | — | 1 |
| மாமிச வகைகள், மீன் | — | 30 கிராம் |

தான் என்றாலும் கட்டாய உணவுக் கட்டுப்பாடு இந்நிலையில் அவசியம் இல்லை.

◆ இக்காலத்தில் ஏற்படும் சில உணவுக் குழப்பங்களில் முதலாவது 'மசக்கை'. எந்த உணவிலும் பிடித்தமின்மை, வாந்தி, ஓக்காளம், புளிப்பு, காரத்தில் மட்டுமே பிடிப்பு தோன்றக் கூடும். இந்தச் சமயத்தில் பிடித்தமான உணவு வகைகளைச் சிறிய அளவில் அடிக்கடி உட்கொள்ளுதல் நலம்.

கர்ப்ப காலத்தில் அளவுக்கு மீறிய மசாலா சாமான்களையும், எளிதில் செரிக்க முடியாத பதார்த்தங்களையும், சுகாதாரக் குறைவான உணவுகளையும் அறவே தவிர்க்க வேண்டும். காய்ச்சிய நீரையே குடிக்க வேண்டும். இதன் மூலம் கருவுக்கு ஆபத்து விளைவிக்கக் கூடிய பல தொத்து நோய்களைத் தவிர்க்கலாம்.

◆ மலச் சிக்கல் நேரக் கூடிய அதிக வாய்ப்புள்ள இக்காலத்தில் அதிகமாகக் குடிநீர் கீரை வகைகள், மற்றும் நார்ப் பொருள் அதிகம் காணப்படும் வாழைப்பூ, வாழைத் தண்டு, மற்றும் பழ வகைகளை அன்றாட உணவில் சேர்ப்பதன் மூலம் மலச்சிக்கல் உண்டாவதைத் தவிர்க்கலாம்.

உங்கள் மருத்துவரின் ஆலோசனையின் பேரில் கடைசி இரண்டு மாதங்கள் உப்பைச் சிறிது குறைத்தலும் நலம்.

◆ உணவைப் பற்றிய சில தவறான அபிப்பிராயங்கள் வழி வழியே நம்மிடம் வளர்ந்து வருகிறது. டானிக்குகளையும், சத்தான உணவையும் உட்கொள்வதன் மூலம் குழந்தை பருத்து, அதனால் பிரசவம் கடினமாகும் என்பதைப் போல் சில நம்பிக்கைகள் தவறானவை.

◆ உணவுப் பதார்த்தங்களிலும் சூடு, குளிர்ச்சி என்பதெல்லாம் ஏதுமில்லை. ஆனால் பப்பாளிப் பழத்தில் கருச் சிதைவை உண்டாக்கும் பொருள் இருப்பதாக நம்பப்பட்டாலும் உறுதியாக நிரூபிக்கப்படாத கருத்து இது.

◆ நீரிழிவு (Diabetis) நோயுள்ள கர்ப்பிணிகள் கூடுமானவரை சாதாரணமாக ஒரு சரிவிகித உணவையே உட்கொள்ளலாம். ஆனால் மாவுச் சத்தும், அதிகமான கலோரிகளும் உள்ள உணவுப் பதார்த்தங்களான சர்க்கரை, மற்றும் இனிப்பு வகைகள், கிழங்கு வகைகள், பொரித்த பலகாரங்கள், வாழைப் பழம், பாதாம் முந்திரி போன்றவைகளைத் தவிர்க்க வேண்டும். ஒரு வேளை அளவான அரிசி உணவையும் மற்ற இரண்டு வேளைகளில் கேழ்வரகு, கோதுமை, இவற்றால் செய்யப்பட்ட உணவு வகைகளையும் அளவாக உட்கொள்ளுதல் அவசியம்.

◆ இந்த இதழில் குறிப்பிட்ட உணவுக் குறிப்புகள் பொதுவான குறை நிறைகளை மனத்தில் கொண்டு தயாரிக்கப்பட்டவை. தனிப்பட்ட சில பிரச்னைகள், சந்தேகங்கள் சிலருக்கு இருக்கலாம். உணவு சம்பந்தப்பட்டவைகளாக அவை இருப்பின் இப்பகுதியில் கேட்டுத் தெளிவுறலாம்.

''தீமை செய்யாத தென்னை'' என்ற தலைப்பில் தென்னை மட்டையோ, தேங்காயோ யார் மீதும் விழுந்ததில்லை என்று சென்ற இதழில் கூறினீர்கள். ஆனால் எங்களது தோட்டத்தில் வேலை பார்த்த பெண்ணின் தலையில் செங்குத்தாக விழுந்து காயம்பட்டது.

ஐ. இராஜேந்திரன்.

## தென்னையைப் பற்றி

தென்னை தீங்கு செய்யாது என்பது சரியல்ல. சுமார் மூன்று மாதங்களுக்கு முன் ஒரு பத்திரிகையின் செய்தி, கேரளாவில் ஒரு சிறுமியின் தலையில் தேங்காய் விழுந்து, கோமா நிலையில் பெற்றோருக்கும் பாரமாக வாழுவதுதான்!

என். குருநாதன்.

## ஒரு சர்ச்சை......

தென்னை மட்டை மனிதர்கள்மேல் விழுவது பற்றி வாசகர் ஒருவரின் குறிப்பை 'மங்கையர் மலர்' பிப்ரவரி இதழில் கண்டேன் தென்னைமட்டைகள் பெரும்பாலும் மனிதர்கள் மீது விழுவதில்லை. ஆனால், விழுந்தால் தீமைகளே ஏற்படும் என்று கிராமப் புறங்களில் இன்றும் நம்பப்படுகிறது.

சென்ற மாதத்தில் (டிசம்பர்) ஒருநாள், கள்ளக்குறிச்சியில் கண்டக்டராகப் பணியாற்றும் எனது நண்பரான திரு. நாகராஜன், வேறொரு நண்பர் இறந்து விட்டதாகத் தந்தி கிடைத்து ஆத்தூருக்கு வந்திருந்தார். அவ்வீட்டிற்குச் சென்று விசாரித்தபோது குறிப்பிட்ட நண்பர் இறக்கவில்லை என்றும், அவர் மீது தென்னை மட்டை ஒன்று விழுந்து விட்டதாகவும், அப்படி விழுந்தால் சீக்கிரத்தில் அவர் இறந்துவிடுவார் அல்லது தீமைகள் விளையும் என்பதால், அந்த தோஷத்தைப் போக்க அம்மாதிரி தந்திகொடுத்து ஒரு சில நெருங்கிய உறவினர்களை வரவழைப்பது வழக்கமென்றும் தெரியவந்தது!

தகவல்: கி. முருகவேள், செங்கவல்லி



# DO YOU MAKE THESE MISTAKES WHILE MAKING COFFEE?

Do you over-roast or under-roast Coffee beans?
Do you grind the roasted beans very fine?
One of the secrets of making good Coffee is to ensure that the Coffee beans are roasted evenly to a golden brown colour. Under-roasted beans give a brew with raw taste while over-roasted beans give a brew that is bitter.

Coffee Beans when ground very fine clog the filter holes, so, they should not be ground either too fine or too coarse.

To make good do not use too much coffee powder. Just use one heaped tablespoonful of powder per cup.

★ Don't ever put coffee powder direct into water set to boil

★ Don't heat milk, coffee and sugar all together.

★ Don't use over-boiled milk – this spoils the flavour of coffee.

★ Don't ever re-heat coffee – this spoils the flavour and aroma.

★ Don't ever use spent coffee, i.e., once used coffee powder for a second time.




**COFFEE BOARD**

1, Vidhana Veedhi
Bangalore 560 001

பூஜை அறையிலிருந்து பெருகி வந்த மட்டிப்பால் வத்தியின் நறுமணம் வீடெங்கும் பரவியது.

காலை நேரத்தின் சுறுசுறுப்புக்களுடன் இயங்கிவந்த எல்லோரையும் அந்த வாசனை அவ்வறையை நோக்கி இழுத்தது. ஒருசில நிமிடங்களில் நடக்கவிருந்த கற்பூர ஹாரத்தியைத் தரிசித்துவிட்டு அவரவர்கள் தத்தம் வேலைக்குக் கிளம்ப வேண்டும். இது அந்த வீட்டில் அமுல்படுத்தப்பட்டு வந்த நிபந்தனை.




முழு நாவல்

''ராஜாதி ராஜாய ப்ரஸஹ்யஸாயினே...''

மந்திரத்தைச் சொல்லி முடித்து புஷ்பத்தைக் கற்பூர ஜ்வாலையைச் சுற்றி அம்பிகையின் பாதங்களில் சமர்ப்பித்தார் அவர்.

''உம்...''

அந்த உறுமலுக்காகவே காத்திருந்தவர்கள் அவசரம் அவசரமாக ஜ்வாலையைக்கண்களில் ஒற்றிக் கொண்டு வெளியேறினார்கள்.

போகும்போதே இடது மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்துக் கொண்டான் குமார். ''மணி எட்டாயிடுத்தே'' என்று அவன் முணுமுணுத்துக் கொண்டது அவர் காதிலும்விழுந்திருக்க வேண்டும்.

''என்ன சொல்லிண்டுபோறே?'' உறுமலுடன் வந்தது கேள்வி.

''ஒண்ணுமில்லே.''

பதிலைத் தொடர்ந்து அவன் வேகமாகப் போய் ஸ்கூட்டரை உதைத்தான். அவனுக்கு எட்டரை மணிக்கு ஃபாக்டரியில் இருந்தாகவேண்டும்.

ஸ்கூட்டரின் உறுமலைக் கேட்டதும் அவசரமாக உள்ளேயிருந்து கையில் டிபன் கேரியருடன் வந்தாள் மகாலக்ஷ்மி.

''இந்தாடா.''

''வேண்டாம்மா.''

அவன் ஸ்கூட்டரில் ஏறிக் கொண்டுவிட்டான்.

''நீ இதை வாங்கிக்காமப் போனா என் மனசு ரொம்பக் கஷ்டப்படும். உனக்கு இது இஷ்டமானாச் செய்.''

''சரி சரி கொடு.''

வேண்டாவெறுப்பாகஅதை வாங்கி வைத்துக் கொண்டான்.

''போயிட்டு வரேன்.''

அடுத்த நிமிஷம் ஸ்கூட்டர் பறந்தது. ஒரு நிமிஷம் அவனையே பார்த்துக்கொண்டு நின்றிருந்துவிட்டு உள்ளே போகத் திரும்பியவளை ''மகாலக்ஷ்மி'' என்று அழைத்த குரல் பூஜை அறைக்கு விரட்டியது. அதற்கு முன்னதாகவே ''வந்துட்டேன்'' என்ற சொல் அவரை அடைந்து விட்டது.

''அதுக்குள்ளே எங்கே போயிட்டே?''

''குமாருக்குச் சாப்பாடு கொண்டு போய்க் கொடுத்துட்டு வந்தேன்.''

''அந்தத் தொரைக்கு அதை நின்னு வாங்கிண்டு போக முடியலேயோ?''

''மணி எட்டுக்கு மேலே ஆயிடுத்துன்னு..''

''அவன் பண்ற காரியத்துக்கு நீ சப்பைக் கட்டுக் கட்டிச் சமாதானம் சொல்றயா? ரெண்டு நிமிஷம் நின்னு சாப்பாட்டை வாங்கிண்டு போறதுக்குள்ளே குடியா முழுகிப் போயிடும்? அப்படி அவசரப்பட்டுப் போனால்தான் போகட்டுமே. பூஜையைப் பூர்த்தி பண்ணக் காத்துண்டு இருக்கேன். அதுக்கு இங்கே இல்லாமே அவனுக்கு சிசுரூஷை பண்ண ஓடினியாக்கும்.''

மகாலக்ஷ்மி பதில் பேசவில்லே. அப்போது தான் சொல்லும் எந்த ஒரு சமாதானமும் அவருடைய கோபத்தைக் குறைக்காது என்பதால் மௌனமானாள்.

''சரி சரி மங்கள கீதம் பாடி ஆரத்தி எடு'' என்று உத்தரவு போட்டுவிட்டுச் சற்று நகர்ந்து கொண்டார் அவர்.

''ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா...'' என்ற சௌந்தர்ய லஹரி சுலோகத்தைப் பாடி ஹாரத்தி எடுத்துவிட்டு நமஸ்கரித்து எழுந்தாள் மகாலக்ஷ்மி.

சாம்பசிவத்தையும் நமஸ்கரித்தாள்.

''தீர்க்க சுமங்கலி பவ'' என்று ஆசீர்வதித்துவிட்டு பூஜை அறையை விட்டு வெளியேறினார் அவர். காலையிலிருந்தே கேட்ட சொற்களில் அந்த ஒரு சொல் ஏற்படுத்திய உணர்வால் உள்ளம் நெகிழ்ந்து கண்களில் மின்ன அவள் கை கூப்பி நின்றாள்

''மகாலக்ஷ்மி''

இடிகுரல் மீண்டும் முழங்கியது. அவசரமாகக் கண்களைத் துடைத்துக் கொண்டு வெளியேறினாள் அவள்.

''இந்தா.''

முகத்தில் எறியாத குறையாக மேல் துண்டை வீசிப் போட்டார் அவர். ''சீக்கிரம் டிபன் எடுத்து வை.''

பூஜை அறையில் சற்று முன்பு இருந்த தோற்றத்துக்கு நேர் மாறாக அவர் இப்போது காட்சி அளித்தார்.

முழுக் கால் சட்டையும் கோட்டும் அணிந்து கொண்டிருந்தார். கோட்டின் வலது பக்கப் பையில் வெள்ளி சிகரெட் பெட்டி மின்னியது. அவர் சாப்பிடும் மேஜையை அடைவதற்குள் காலை டிபனைக் கொண்டு வந்து வைத்தாள் மகாலக்ஷ்மி.

''சாமான்களைக் காரில் கொண்டு போய் வைக்கச் சொல்லு.''

அவருடைய சொற்களின் குறிப்பை உணர்ந்து கொண்டு அங்கிருந்து நகர்ந்தாள் மகாலக்ஷ்மி. அவர் சாப்பிடும் சமயம் அவள் அங்கு இருப்பதை விரும்பமாட்டார் அவர்.

''முனியா, ஐயாவோட பாக்ஸை கொண்டு போய்க் காரிலே வை'' என்று வேலைக்காரனுக்குச் சொல்லிவிட்டு ஷூ பாலிஷ் போடப்பட்டிருக்கிறதா என்று பார்த்தாள் மகாலக்ஷ்மி.

கொஞ்சம் பளபளப்புக் குறைந்து சற்று மங்கித் தோற்றமளித்த அதைக் கண்டதும் பாலிஷ் செய்யத் தொடங்கினாள்.



**எளிய ப்ரிட்ஜ்!**

வெற்றிலை, மற்றும் புதினா கீரை, கறிவேப்பிலை இவைகளை, உபயோகத்தில் இல்லாத பால் குக்கரில், (துவாரத்தில் எப்போதும் போல் தண்ணீர் ஊற்றி) மூடி வைத்து விட்டோமானால் நாலு, ஐந்து நாட்கள் வரை வாடாமல் இருக்கும். புதுமையும் கெடாமலிருக்கும்.

- ருக்மணி விஜயராகவன்

''அம்மா....''

பின்புறமிருந்து கூப்பிட்ட குரல் அவளைத் திரும்பிப் பார்க்கச் செய்தது.

''என்ன வேணும் சரண்யா?''

''காலேஜுக்கு நேரமாச்சு.''

உட்புறமாகச் சிறிது எட்டிப் பார்த்தாள் மகாலக்ஷ்மி.

''கொஞ்சம் இரு. இன்னும் அவர் சாப்பிட்டு எழுந்திருக்கல்லே.''

''இது வீடு இல்லே. ஜெயில்.''

''அப்படிச் சொல்லக் கூடாது சரண்யா.''

''எனக்கு நேரமாச்சு. அவர் சாப்பிடறப்போ உள்ளே போகக் கூட முடியறதில்லே. இனிமே நான் எப்போ சாப்பிட்டு எப்போ கிளம்பறது?''

''என்ன சொல்றே சரண்யா?''

கேட்டுக் கொண்டே வந்துவிட்டார் அவர். 'மனிதனுக்குப் பாம்புச் செவி' என்று நினைத்துக்கொண்டாள் சரண்யா.

அவள் ஏதேனும் சொல்லி விடப் போகிறாளே என்று முந்திக் கொண்டாள் மகாலக்ஷ்மி. ''சீக்கிரமா வந்து டிபன் கொடுன்னு சொன்னா.''

மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்துக் கொண்டார் சாம்பசிவம்.

''மணி எட்டே முக்கால் தானே ஆறது. நேரக் காலேஜுக்குப் போறதானா டயம் நெறைய இருக்கு.''

சுடச் சுடப் பதில் கொடுக்க சரண்யாவின் நாக்குத் துடித்தது. மகாலக்ஷ்மியின் கண்களில் தோன்றிய உத்தரவுக்குக் கட்டுப்பட்டாள் அவள். அதனால் வார்த்தைகளில் வேகமில்லை.

''ஒரு ஃப்ரண்ட் வீட்டுக்குப் போயிட்டுப் போகணும்.''

''ஃப்ரண்டு ஆணா பெண்ணா?'' கிண்டலாக வந்தது கேள்வி. சூட்டுக் கோலாய் நெஞ்சில் விழுந்தன வார்த்தைகள். அதைச் சிரித்து ஆற்றிக் கொள்ள முயன்றாள் சரண்யா. குத்தலாகவும் சொன்னாள்.

''இன்னும் பாய் ஃப்ரண்ட் கிடைக்கல்லே''

''அப்போ...'' கிண்டல் மறைந்து சினத்தில் அவரது முகம் தக்காளியாய்ச் சிவக்க அவர் இரைந்தார்.

''நீ தறிகெட்டு அலைய ஆரம்பிச்சிருக்கே''

சரண்யா பதில் சொல்லு முன்பு குறுக்கிட்டாள் மகாலக்ஷ்மி. ''நீ உள்ளே போ சரண்யா, வந்து டிபன் தரேன்.''

இப்பொழுது அவர் கோபம் மகாலக்ஷ்மியின் மீது பாய்ந்தது.

''நீ அவளை ரொம்ப மட்டமா வளர்த்திருக்கே. என்னை எதிர்த்து அவள் பேசினதுக்கு என் கால்லே விழுந்து மன்னிப்புக் கேக்கணும். சொல்லி வை. சாயங்காலம் பார்க்கிறேன்.''

உறுமிவிட்டு வெளியேறினார் அவர்.

கார் போனதும் உள்ளே வந்த மகாலக்ஷ்மி சரண்யாவைச் சுட்டுவிடுவது போல் பார்த்தாள்.

''மரியாதையாய்ப் பேச முதல்லே தெரிஞ்சுக்கோ சரண்யா.''

''இந்த வீட்டிலே இப்படியே போயிண்டிருந்தா பேச்சே மறந்து போயிடும்.''

''பெரியவாளுக்கு அடங்கி ஒடுங்கி இருக்கிறதாலே யாரும் கெட்டுப் போயிட மாட்டா'' என்று சொன்ன மகாலக்ஷ்மி, மேலும் அந்தப் பேச்சை வளர்த்த விரும்பாதவளாய்ச் சொன்னாள்.

''இதோ பார் சரண்யா, நீ இப்போ பேசினதுலே அவர் ரொம்பக் கோபமாப் போயிருக்கார். சாயங்காலம் அவர் வரபோது நீ அவர் கிட்ட 'நான் எதிர்த்துப் பேசினது தப்புத்தான்'னு சொல்லி நமஸ்காரம் பண்ணிடு. அதனாலே ஒண்ணும் குறைஞ்சுட மாட்டே.''

''நெவர். எனக்கும் கௌரவம் இருக்கு. செய்யாத தப்புக்கெல்லாம் நான் மன்னிப்புக் கேட்க மாட்டேன்.''

''சரி. உன் இஷ்டம் போலச் செய். என் மனசுதானே கஷ்டப்படும்? பட்டுட்டுப் போகட்டும். உன் கௌரவம் அப்படியே இருக்குமோல்லியோ?''

மகாலக்ஷ்மி சாதாரணமாகச் சொன்னாள். அவள் அழவில்லை. குரலில் கூட சோகம் தலை காட்டவில்லை. ஆனாலும் அவளுடைய அந்த வார்த்தைகளையே சரண்யாவால் தாங்கிக் கொள்வதற்கு முடியவில்லை. தன்னுடைய பிடிவாதத்தை விட்டுக் கொடுக்கவும் அவள் இளம் மனம் சம்மதிக்கவில்லை.

''நீ இப்படியே எங்களைக் கட்டுப்படுத்திக் கட்டுப்படுத்தியே அவரோட முரட்டுக் குணத்துக்கும் மூர்க்கத்தனத்துக்கும் அடிமையாக்கிக் கோழையாக்கவும் பார்க்கறே. நான் போயிட்டு வரேன்.''

தன் பக்கமே விரலை நீட்டிக் குற்றம் சாட்டி விட்டு விடுவிடு என்று வெளியேறிச் சென்ற மகளைப் பார்த்துப் பெரு மூச்சுவிடத்தான் மகாலக்ஷ்மியால் முடிந்தது.

ஊர் சுற்றியாய்த் திரிந்த தன் பிள்ளை ராகவனுக்கு எவருமே பெண் கொடுக்க மறுத்துவிட்டபோது மகாலக்ஷ்மியின் ஏழ்மையை விலை பேசினார் ஊரில் பெரிய வர்த்தகப் புள்ளிகளில் ஒருவரான சாம்பசிவம்.



**யோசனை**

புதிதாக ஒரு இடத்திற்குச் செல்கிறீர்கள். உங்களைப் பார்த்து நாய் குரைக்கிறது.

நீங்கள் தொண்டையைச் செருமிக் கொள்ளுங்கள். நாய் உங்களைப் பார்த்துக் குரைப்பதை நிறுத்திக் கொள்ளும்.

- எஸ். எஸ். மணியம்

'தன் கண்ணை மூடுவதற்குள் எப்படியாவது தன் மகளின் திருமணத்தை முடித்துவிட வேண்டும்' என்ற அவள் தந்தையின் அவசரமும் சேர்ந்து அவளை ராகவனின் மனைவியாக்கி விட்டது.

ராகவனுக்கே மதிப்பில்லாத சாம்பசிவத்திடம் அவள் தனியாக எந்த ஒரு மதிப்பையும் சம்பாதித்துக் கொள்ள முடியவில்லை. சுபாவமாகவே அவருடைய ரத்தத்தில் ஊறியிருந்த பணப் பெருமையும் அகம்பாவமும் கௌரவம் என்கிற போர்வைக்குள் புகுந்து கொண்டு-அவளை ஆட்டி வைத்தன. வறுமையில் உழன்றவளைத் தன்னுடைய பண அந்தஸ்து மிகுந்த வீட்டுக்குள் புக அனுமதித்ததையே பெரியதொரு தர்மமாக நினைத்துக் கொண்டிருந்த சாம்பசிவம் அவளை ஒரு வேலைக்



காரியாகவே நடத்தினர். தன்னுடைய மருமகள் என்ற பட்டத்தை அவளுக்கு அளித்திருந்ததற்காகத் தனக்குள் இறுமாந்திருந்தார்.

தன்னால் முடிந்த வரையில் ஒரு மனைவிக்குரிய பொறுப்பை உணர்ந்து பூரணமாகத் தன் கடமையை அவள் நிறைவேற்றி வந்தாலும் அவை ராகவனுக்கு முழு மனத்திருப்தியைத் தரவில்லை. அவனுடைய ரசனைகளும் ஈடுபாடுகளும் பல இடங்களில் பதிந்திருந்தன. எப்போதோ சில சமயங்களில் அவன் தன் வீட்டை நாடி வந்தபோது ஏற்பட்ட தேவைகள் அவளை இரு



குழந்தைகளுக்குத் தாயாக ஆக்கியிருந்தன. விரும்பியோ விரும்பாமலோ அந்தக் குழந்தைகளை பேரக் குழந்தைகளாக ஏற்றுக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் சாம்பசிவத்துக்கு ஏற்பட்டு விட்டது. வெளி உலகத்தின் முன் பெருந்தன்மை மிருந்த கனவானாகத் தன்னை உருவாக்கிக் காட்டிக் கொண்டிருந்த சாம்பசிவத்தால் அவர்களைப் புறக்கணிக்க முடியவில்லை. ஆனால் அந்தக் குழந்தைகளுக்கு அவர் எந்த ஒரு சலுகையும் வழங்கியதில்லை.

அவன் வீட்டுக்கு வருவதையே நிறுத்தி விட்ட பிறகு மகாலக்ஷ்மி சாம்பசிவத்தின் கண்களுக்கு மிகவும் வேண்டாதவளாகிப் போனாள். அப்போது ஒரு நாள் அவள் தயங்கித் தயங்கி அவரிடம் தன் குழந்தைகளை அழைத்துக்கொண்டு போய்விடுவதாகக் கேட்டும் விட்டாள். ஆனால் அன்று அவர் போட்ட கூச்சல்.... அப்பப்பா! இன்றுகூட அவளுக்கு நடுக்கத்தை ஏற்படுத்துகிறது.

"என்ன துணிச்சல் இருந்தா 'வீட்டை விட்டுப் போறேன்னு நீ கேட்பே? வெளியிலே போனா எப்படிச் சாப்பிடுவே? பெத்து வச்சிருக்கியே அதுகளை எப்படிக் காப்பாத்துவே? மனம் போனபடி கெட்டலைஞ்சு எனக்கு அவமானத்தைத் தேடித்தரலாம்னு நினைக்கிறியா? ஊரிலே ஒரு மதிப்போட இருக்கிற எனக்கு என் மாட்டுப் பொண்ணும் பேரக் குழந்தைகளும் ரோடு ஓரத்துக் குடிசையிலே இருக்கான்னு பேர் வாங்கிக்கொடுத்து என் கௌரவத்தைக் குலைக்க நினைச்சுண்டிருக்கியா?"

இதற்குப் பிறகு மகாலக்ஷ்மி எதுவும் பேசவில்லை எங்கே போகவும் நினைக்கவும் இல்லை. தனக்கு இனிமேல் குழந்தைகள் தான் துணை என்று ஒரே முடிவுடன் அங்கேயே அவருக்கும் அவருடைய ஏவல்களுக்கும் கட்டுப்பட்டு வாழ்ந்து வந்தாள்.

குமார், சரண்யா இருவரையும் கூட அவர் தனது மூர்க்கத்தனத்தால் நடுங்க வைத்திருந்தார். தப்பித் தவறிக் கூட அவர்களிடம் பரிவோட பேச மாட்டார். குழந்தைகளும் பெரும்பாலும் அவரை நெருங்குவதேயில்லை. அதைப் பற்றி அவர் கவலைப்படுவதும் இல்லை.

மகாலக்ஷ்மி மட்டும் எப்போதும் அவர் ஏவும் கட்டளைகளைச் செய்து கொண்டும், அவருடைய தேவைகளைக் கவனித்துக் கொண்டும் இருக்க வேண்டும். அவைகளில் ஒரு சிறிது குறைவு ஏற்பட்டாலும் அவரால் பொறுத்துக் கொள்ள முடியாது. அப்போது அவர் பேசும் பேச்சுக்கள் அவளைச் சித்திரவதை செய்வதாகவே இருக்கும்.

சரண்யாவுக்குப் பதினெட்டு வயதாகி விட்டது. அவளைவிட இரண்டு வயது மூத்தவனை குமார் தன் சொந்த முயற்சியால் ஒரு ஃபாக்டரியில் வேலை தேடிக் கொண்ட போது அவர் அதை வரவேற்கவோ மறுக்கவோ இல்லை. ஆனால் அதனால் மகாலக்ஷ்மி அவனுக்கு அதிகப்படியான சௌகர்யங்களைச் செய்யவோ, அவனுடன் அதிக நேரம் பேசவோகூட முடியாதவாறு கண்காணித்து வந்தார்.

சரண்யா பள்ளி இறுதி வகுப்பை முடித்து கல்லூரியில் சேர்வதற்கு விரும்பியபோது அவருடைய கௌரவப் போர்வையையே உபயோகித்துக் கொண்டாள். ஒரு நாள் அவரை மதிக்கும் அவருடைய வர்த்தக நண்பர் ஒருவர் வந்திருந்தபோது கல்லூரியில் சேர விரும்புவதைப் பற்றிச் சொன்னாள். உலகத்தார் முன்பு பாசம் மிகுந்த பாட்டனாராக உருவாக்கிக் கொண்டிருந்த அவரால் மறுக்க முடியவில்லை.

குமாரும் சரண்யாவும் வளர்ந்துவிட்டார்கள். அவர்களின் உள்ளங்கள் புரட்சி செய்யத் தொடங்கி விட்டன. முன்போல அவருக்கு அடங்கி நடக்க மறுக்கிறார்கள் என்பது மகாலக்ஷ்மிக்குத் தெரிந்தது. அவர்களுடைய உள்ளங்களில் ஒரு சாத்விகப் புரட்சிக்கான மௌன முஸ்தீபுகள் உருவாகிக் கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள். அவைகளிலிருந்து அவர்களைத் தடுத்து அவ்வப்போது சம நிலைக்குக் கொண்டுவருவது ஒவ்வொரு முறையும் மகாலக்ஷ்மிக்குக் கஷ்டமாகவே இருக்கிறது.



"ஓட்டல் முதலாளி: ''இன்று முதல் இட்லி விலையைப் பத்து பைசா குறைச்சிருக்கோம், பார்த்தீங்களா...?''
சாப்பிட்டவர்: ஆமாம்...பார்த்தேன்! இட்லி கூட பத்து பைசா மாதிரியே, இருக்கு...!''
- எம். சாவித்திரி

**ம**றுநாள் பொழுது விடிந்தது.

சாம்பசிவத்தின்பூஜைக்குத் தயார் செய்துகொண்டிருந்த மகாலக்ஷ்மியின் அருகில் வந்து நின்றான் குமார்.

''நான் போயிட்டு வரேன்'' என்றான்.

மகாலக்ஷ்மி திகைத்துப் போனாள். அவ்வளவு இளங் காலையில் அவன்எங்கே புறப்படுகிறான்?

''இத்தனை சீக்கிரமாகவா ஃபாக்டரிக்குப் புறப்பட்டுட்டே?''

''ஆமாம்.''

''மத்தியானச் சாப்பாட்டுக்கு ஆள் அனுப்பறயா?''

''இல்லே. நானே வரேன். நீயும் தயாரா யிரு. சரண்யாவையும் மத்தியானம் காலேஜிலே யிருந்து வந்துடச் சொல்லு. நாம போயிடலாம்.''

''எங்கே போயிடலாம்?''

''அதெல்லாம் அப்புறமாச் சொல்றேன். அவர் முழிச்சுண்டுதான் இருப்பார். நான் மத்தியானம் வரேன்.''

குமார் போய்விட்டான். ஸ்கூட்டர் புறப்படும் சத்தம் தெளிவாகவே கேட்டது.

மகாலக்ஷ்மி சாம்பசிவத்தின் அறைக்குச் சென்றபோது அவர் படுக்கையில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

''எல்லாம் தயாரா யிருக்கு'' என்று தலை நிமிராமல் சொல்லிவிட்டுத் திரும்ப முயன்றாள் அவள்.

''ஸ்கூட்டர் சத்தம் கேட்டுதே. குமார் எங்கே போறான்?'' உறுமினார்.

''ஃபாக்டரிக்கு.''

''பூஜைக்குக் கூட இல்லாம இன்னிக்கு என்ன இவ்வளவு அவசரம்?'' குரலில் கடுமை கூடியிருந்தது.

''யாரையோ பார்க்கணுமாம்.''

''பூஜை முடிஞ்சதுக்கப்புறம்தான் புறப்பட்டுப் போகணும்னு நீ சொல்லியிருக்கணும். உன்னாலே சொல்ல முடியல்லேன்னு எங்கிட்டே அவனை அனுப்பியிருக்கணும். இங்கே நான் பண்ற பூஜையை விட அந்த 'யாரோ' ரொம்பவும் அவசியமோ?''

மகாலக்ஷ்மியிடம் அனலை வாரிக் கொட்டினார் அவர். அது ஒன்றும் அதிகமாக அவளைச் சுட்டுவிடவில்லை.

குமார் செய்திருக்கும் தீர்மானம்தான் என்ன? அதை எப்படி அவன் அவருக்குத் தெரிவிக்கப் போகிறான்?

திருடனைப் போல் எதற்காக அப்படிப் போக வேண்டும்? எதற்குக் கட்டுப்பட்டு அவள் இத்தனை வருடங்களை இங்கு கழித்திருக்கிறாள்? இன்று அவருக்குத்தெரியாமல் போக வேண்டிய அவசியம் என்ன வந்து விட்டது?

மகாலக்ஷ்மி மௌனமாக உள்ளே சென்று விட்டாள்.

பூஜையை வழக்கம் போல் பெரிய படாடோபத்துடன் செய்து முடித்தார் சாம்பசிவம். பூஜையில் ஆத்மார்த்தம் இருக்கிறதோ இல்லையோ ஆடம்பரம் அதிகம் இருக்கும். அப்பொழுது கூட அதில் மனம் ஒன்றாமல் 'யார் யார் என்ன தவறு செய்கிறார்கள், யாரை எதற்காகக் கோபித்துக் கொள்ளலாம்' என்று மனம் அலையும். அவர் செய்யும் பூஜையைக் கூட அவருடைய ஆணைக்குக் கட்டுப்பட்டு வீட்டிலுள்ளவர்கள் இருந்து தரிசித்தாக வேண்டும். இன்று அவருடைய மனம் முழுவதும் அந்த பூஜை நேரத்தில் குமார்தான் நிறைந்திருந்தான். பூஜைக்கு இல்லாமல் அவன் போய்விட்டதால் தன்னை அவன் அவமதித்து விட்டதாக மனத்துக்குள் குமுறிக்கொண்டே பூஜையை முடித்தார் அவர்.

வழக்கம்போல் கற்பூர ஹாரத்தி, மங்கள ஹாரத்தி எல்லாம் முடிந்தன.

''மகாலக்ஷ்மி''

'ஏன்' என்னும் பாவனையாக அவர் எதிரில் வந்து நின்றாள் அவள்.

''இன்னிக்குப் பகல் சாப்பாடு விருந்துச் சமையலா இருக்கணும். கூட இரண்டு பேருக்குக் கேரியர் அனுப்பு.''

"தலைமுறை தலைமுறையாக
மக்கள் பயன்படுத்திவரும்
இந்திய மருந்துகளின்
சக்தியே தனி...

அவற்றுள்
தனிச்சிறப்பு
வாய்ந்தது
அமிர்தாஞ்சன்."




தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தர்ஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லாவற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.

# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**



AM-2148

''சரி.''

''ஒரு ஸ்வீட், அப்பளம், வாழைப் பழம் எல்லாம் இருக்கணும். அப்புறம் சமையல் என்ன செய்யணும் தெரியுமா?''

''நீங்க சொல்றதைச் செஞ்சுடறேன்.''

சாம்பசிவம் மெனுவைச் சொன்னார். கிட்டத்தட்ட பதினைந்து வகை.

''ஆமாம். எல்லாம் ரெடி பண்ணி பன்னிரண்டு மணிக்குச் சாப்பாடு வந்துடணும். காரை அனுப்புவேன்.''

உத்தரவிட்டுவிட்டுச் சாப்பாட்டு மேஜைக்குச் சென்றார் அவர்.

டிபனைக் கொண்டு வந்து மேஜையில் வைத்துவிட்டு, குடிதண்ணீர், காப்பி பிளாஸ்க் முதலியவற்றையும் கொண்டுவந்து வைத்துவிட்டு சென்றான் அவன்.

''முனியா ஐயாவோட பாக்ஸை....'' என்று அவள் ஆரம்பிக்கும்போதே ''வச்சிட்டேம்மா'' என்று பதில் சொல்லிவிட்டுச் சென்றான் முனியன். ஷூ, பாக்ஸ் முதலியவற்றைத் தயாராக எடுத்து வைத்து விட்டு அவர் சாப்பிட்டு விட்டு வருவதற்காகக் காத்திருந்தாள் மகாலக்ஷ்மி.

''அம்மா, குமார் சொன்னதை மறந்துட்டியா?''

எதிரே வந்து நின்று கேள்விகேட்டமகனை நிமிர்ந்து பார்த்தாள்.

''இல்லே.''

''பின்னே அவர் விருந்துக்கு உத்தரவு போட்டுண்டிருக்கார். நீ சரி, சரின்னு சொல்லிண்டிருக்கியே?''

''செய்ய வேண்டியதுக்குச் சரின்னு சொல்லாமே வேறே என்ன சொல்றது?''

''குமார் சொன்னதுக்கு என்ன பண்ணப் போறே?''

''யோசிக்கிறேன்.''

சரண்யா போய்விட்டாள்.

மகாலக்ஷ்மியின் கைகள் பம்பரமாக வேலை செய்து கொண்டிருந்தாலும் மனமும் வேலை செய்து கொண்டிருந்தது.

'குமார் சொல்வது சரியா?'

தனக்குள்ளே கேள்வியும் பதிலும் மாறி மாறிப் புறப்பட எந்த வித முடிவுக்கும் வர முடியாமல் திண்டாடினாள் அவள்.

மணி பதினொன்றரை. முனியனிடம் இரண்டு கேரியர்களில் சாப்பாட்டை எடுத்து வைத்துக் கொடுத்தாள் மகாலக்ஷ்மி. சாம்பசிவம் கார் அனுப்பியிருந்தார்.

முனியன் போன பின்புதான் அவளால் சரியாக மூச்சு விட முடிந்தது. நிச்சயமாக இது ஒரு வேலைக்காரப் பிழைப்புத்தான்.

இதுநாள் வரையில் வேறு வழியின்றி அவள் இதற்குக் கட்டுப்பட்டிருந்தாள். இப்போது அவள் குழந்தைகள் பெரியவர்களாகிவிட்டனர். சாம்பசிவத்தின் சர்வாதிகாரத்துக்கு அவர்கள் பணிய மறுக்கிறார்கள். இளம் வயது. துடிக்கும் ரத்தம். அவர்கள் பேச்சும் போக்கும் அவர்கள் மனத்துக்குச் சரியாக இருக்கலாம். ஆனால் மகாலக்ஷ்மியினால் சரியாக நினைக்க முடியவில்லை.

ராகவனை மணந்து இத்தனை வருடங்களில் அவள் அந்த வீட்டை விட்டு வெளியில் சென்றதில்லை. ராகவன் ஒழுங்காகத் தன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தபோதும் சரி, வராமல் நின்றுவிட்ட போதும் சரி, தன் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள அவள் யாரையும் தேடிச் சென்றதில்லை.

ராகவன் போக்கு அப்படி ஒன்றும் ஒளித்து மறைத்து விடக் கூடியதல்லவென்று அவளுக்குத் தெரியும். அவன் குடும்பத்துக்கோ, தந்தைக்கோ உதவாமல், ஒரு உதவாக்கரையாகப் போய் விட்டான் என்பது ஊரிலும் பலருக்குத் தெரிந்திருந்தது. அப்படிப் போய்விட்டவனின் மனைவியையும் குழந்தைகளையும் எங்கும் துரத்தி விடாமல் இவ்வளவு வருஷங்களாகத் தன்னுடனேயே வைத்துக் கொண்டு காப்பாற்றி வரும் சாம்பசிவத்தைப் பற்றிய மற்ற குணாதிசயங்கள் உலகத்துக்கு எப்படித் தெரியும்? இன்றுகுமாரின்சொல் கேட்டு அவனுடன் தான் புறப்பட்டு வெளியே சென்றுவிட்டால் எத்தனை பேர் தன்னுடைய செய்கையைச் சரியாகப் புரிந்து கொள்வார்கள்? வயதான காலத்தில் அவரைத் தனியே தவிக்க விட்டுத் தன் பிள்ளை தலையெடுத்ததும் பிரிந்து போய்விட்டான் என்றுதானே பேசுவார்கள். குமார் பிரிந்து போனாலும் அவனுக்கும் அவப் பெயர்தான் கிடைக்கும்.

'அப்பனைப் போலத்தானே பிள்ளையும். அவன் அப்பாவை மதிக்கவில்லை. இவனும் இன்று வளர்த்த தாத்தாவையே புறக்கணித்துவிட்டான்' என்றுதான் சொல்லப் போகிறார்கள்.

இதுநாள் வரையிலும் சொல்லாலும் செயலாலும் சுத்தமாக வாழ்ந்து, விரும்பியோ விரும்பாமலோ அவனுடைய கட்டளைகளுக்குப் பணிந்து நடந்து கொண்டு வந்த குமாருக்கும் அப்படிப்பட்ட ஒரு அவப் பெயர் வருவதை அவள் விரும்பவில்லை.



''என்ன டைரக்டர் சார், நீங்க டைரக்ட் பண்ற 'இராமாயணம்' படத்தில் கடைசி காட்சியில் இராம, இராவணன் 'கராத்தே' போடறாங்களாமே? என்ன சார் இது....?

''என்னப்பா, பண்றது? ஹீரோ சுரேஷ் குமாரின் சொந்தப்படம் இது. இப்பத்தான் கராத்தே கத்துக்கிட்டாராம் அவர் சொல்றபடி செய்யாட்டா, வேறே டைரக்டரை மாத்துறுவார். அப்புறம் என் கதி? அதுதான்... -ஸ்ரீநிதா

முதலில் 'குமார் வேண்டுமானால் போகட்டும். தான் போகக் கூடாது' என்று தோன்றிய எண்ணத்தையும் க்ஷணத்தில் மாற்றிக் கொண்டு விட்டாள் மகாலக்ஷ்மி. பகலில் வீட்டுக்கு வருவதாகச் சொல்லியிருந்த குமாருக்காகக் காத்திருந்தாள் அவள்.

ஸ்கூட்டர் சத்தம் குமாரின் வருகையை அறிவித்தது. அந்த நேரத்தில் வீட்டில் யாரும் இல்லாதது மகாலக்ஷ்மிக்கும் சௌகர்யமாக இருந்தது. நெற்றியில் துளிர்த்திருந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டு அவனுடைய வரவை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த மகாலக்ஷ்மிக்கு அவன் உள்ளே வந்ததும், ''வா, குமார், சாப்பிட வா'' என்று பரிவோடு அழைத்தாள்.

குமார் அவளை வெறித்துப் பார்த்தான்.

சுற்றிலும் ஒரு முறை பார்வையையும் ஓட்டினான்.

''என்ன அம்மா, நீ ஒண்ணும் தயாராக இல்லையா?'' என்று கேட்டான்.

மகாலக்ஷ்மி திடமாகச் சொன்னாள்: ''இல்லே. நான் புறப்படறது இருக்கட்டும். நீகூடப் போகப் போறதில்லே.''

குமாருடைய கண்கள் சிவந்தன.

தாய் என்ற பாசத்துடன் தன்னை அவன் அன்பாகப் பார்ப்பதை மட்டுமே அறிந்திருந்த மகாலக்ஷ்மிக்கு அன்று அவனுடைய கோபப் பார்வை புதிதாக இருந்தது.

''நீ வர விரும்பறதும் விரும்பாததும் உன் இஷ்டம். ஆனால் என்னைத் தடுத்து நிறுத்த உன்னாலே முடியாது. அம்மாவோட வார்த்தையை மீறக் கூடாதுங்கிற ஒரே காரணத்துக்காகஅவரோட அதிகாரத்தையும் அட்டகாசத்தையும் இவ்வளவு நாள் பொறுதுண்டு இருந்தேன். ஆனா அவரோட அதிகாரம் நாளுக்கு நாள் ஜாஸ்தியாயிண்டேயிருக்கு. நானும் சின்னக் குழந்தை யில்லையே எனக்குச் சுதந்திரம் வேணும். ஒரு கைதியா வாழ இனிமே என்னாலே முடியாது. நான் போகத்தான் போறேன்'' என்று ஆவேசமாகப் பேசிய குமாரை இரக்கத்தோடு பார்த்தாள் மகாலக்ஷ்மி.

''போகப் போறேன்னு சொல்றயே? எங்கே போகப் போறே?'' என்று கேட்டாள் மகாலக்ஷ்மி ஆத்திரத்தோடு.

''பம்பாய்க்கு.''

''அங்கே போய்...''

''என் ஃபாக்டரியோட ஹெட் ஆபீஸ் அங்கே இருக்கும்மா. ரொம்ப முயற்சி பண்ணி அங்கே மாற்றல் வாங்கிண்டிருக்கேன். என் ஃபரண்டோட மாமா பம்பாயிலே இருக்கார். ஒரு இடம் பார்த்துக்கற வரையிலும் அங்கேதான் தங்க முடிவு செய்திருக்கேன்.''

அந்த நிலைமையிலும் மகாலக்ஷ்மிக்குச் சிரிப்பு வந்தது.

''இந்த நிலைமையிலே எங்களையும் அழைச்சிண்டு போறேன்னு சொல்றே. அங்கே இட வசதிகள் எப்படியோ? எதைப் பத்தியும் தெரிஞ்சுக்காமே எதையும் யோசனையும் செய்யாமே நீ முடிவு பண்ணி இருக்கே. இதுலேயே உன்னுடைய சிறுபிள்ளைத்தனம் தெரியறது. பார்த்தியா?'' என்றவள், தொடர்ந்து, ''அப்போ நீ புறப்பட்டுப் போய்த்தான் ஆகணுமா?'' என்று கேட்டாள்.

''ஆமாம். டிக்கெட்டெல்லாம் கூட ரிசர்வ் பண்ணிட்டேன்.''

''நீ மாற்றிப் போற விஷயத்தை அவர் கிட்டச் சொல்லி ஏன் நீ அவரோட அனுமதி யோடயே போகக் கூடாது?'' என்று கேட்டாள் மகாலக்ஷ்மி.

''ஆஹா!'' என்று சிரித்தான் குமார். ''நான் பம்பாய்க்குப்போகப்போறேன்னு சொன்னால் உடனே ஆசீர்வாதம் பண்ணி 'போயிட்டு வா'ன்னு சொல்லிடப் போறாரா? ஏதாவது ஒரு பொய்யைச் சொல்லித் தன் செல்வாக்கை உபயோகிச்சு என்னை நிறுத்திடுவார். நான் இனிமேலும் இந்த வீட்டிலே அவரோட ஒண்ணா இருக்க விரும்பல்லே.''

''நீ அவ்வளவு பிடிவாதமா நினைச்சா நான் என்ன பண்ண முடியும்? போயிட்டு வா! ஆனா அதனாலே உனக்குக் கெட்ட பெயர்தான் கிடைக்கும். ஆனாலும் நான் இங்கேதான் இருந்தாகணும். என்னோட இளமைக் காலத்துலே அவர் என்னை அனாதையா நடுத்தெருவுலே நிறுத்தல்லே. அதுக்குப் பிரதியா அவரோட வயசு காலத்திலே அவரைத் தனியா விட்டுப் போகாமே அவருக்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்ய நினைக்கிறேன். சில கடன்களைக் கஷ்டப்பட்டுத்தான் அடைச்சாகணும். என்னோட கடனைத் தீர்க்க நான் இங்கே இருக்கேன். உங்க அப்பாவுக்குக் கிடைச்ச கெட்ட பெயர் உனக்குக் கிடைக்கக் கூடாதுன்னு நான் ஆசைப்பட்டேன். அது நடக்காது போல இருக்கு.''

''நிச்சயமா என் அப்பாவுக்குக் கிடைத்த கெட்ட பெயர் எனக்குக் கிடைக்காதுஅம்மா. ஏன்னா நீ என்னை அப்படி வளர்க்கல்லே.



**இதோ ஒரு ஊதுவத்தி ஸ்டாண்ட்!**

வீட்டில் பயன் படுத்தப்பட்டுக் காலியாகக் கிடக்கும் விக்ஸ், அமிர்தாஞ்சன் பாட்டில்களின் மூடிகளில் ஆணியால் சிறு சிறு துளைகளைப் போடுங்கள். பாட்டில்களை வண்ணக் காகிதங்களாலோ, வேறு உங்கள் கற்பனைக்குத் தகுந்தாற் போல அழகு படுத்தி, பூஜை அறையில் ஊதுவத்தி சொருக உபயோகிக்கலாம். - ஜி. சாந்தா

சுதந்திரமா வாழத்தான் நான் போறேன். போயிட்டு வரேன். தப்பு... தப்பு... போயிட்டு மறுபடியும் இந்த வீட்டுக்கு வர மாட்டேன்.''

சொல்லிவிட்டு சாப்பிடாமல் புறப்பட முயன்ற மகனைத் தடுத்து நிறுத்தினாள் மகாலக்ஷ்மி. ''இந்தா குமார். இங்கே வா. இன்னிக்கு நானே என் கையாலே சாப்பாடு போடறேன். சாப்பிட்டுட்டுப் போ. மறுபடியும் அந்த பாக்கியம் நம்ம ரெண்டு பேருக்கும் கிடைக்காமலே போனாலும் போயிடும்.''

பேசாமல் வந்து சாப்பிட அமர்ந்த குமாருக்கு அவள் பரிமாறினாள். அப்போது சரண்யாவும் வந்து விட்டாள். அவளும் சாப்பிட உட்கார்ந்தாள்.

''என்ன அண்ணா? எங்கே போகப் போறேம்?'' என்று ஆவலோடு கேட்டாள் சரண்யா.

குமார் அவள் பக்கம் திரும்பிப் பார்த்தான். ''எங்கே போகப் போறேன்னு கேளு'' என்றான்.

''அப்போ....''

''அம்மா வரமாட்டாளாம்.''

''ஏன்?'' என்று கேட்டவாறே தட்டிலிருந்த சாதத்தை விரல்களால் அளைந்தாள் சரண்யா.

''அவளை வயசு காலத்திலே தனியாத் தவிக்க விட்டுட்டு வந்தாப் பாவம் வந்து சூழ்ந்துக்குமாம்'' என்ற குமாரின் பதில் அவளுக்கு அம்மாவின் மேல் கோபத்தைத் தோற்றுவித்தது.

''சரி, அண்ணா. அம்மா வராட்டாப் போறா. நான் உன்னோட வந்துடறேன்.''

''சரண்யா'' என்று கடுமையாக அழைத்தாள் மகாலக்ஷ்மி.

''குமார் ஆண்பிள்ளை. ஆனால் நீ பெண். மனம் போனபடி நடக்கக் கூடாது. ஒரு பெண் கல்யாணம் பண்ணிண்டு புருஷன் வீட்டுக்குப் போற வரையிலும் பெத்தவளோடதான் இருக்கணும். குமார் எங்கே போவானோ? எங்கே தங்குவானோ? அங்கெல்லாம் நீ போக முடியாது. அதிக பிரசங்கித்தனமாகப் பேசாதே.''

கையை அலம்பி வாயைத் துடைத்துக் கொண்டு வந்த குமார், ''நான் புறப்பட்டுப் போறேன்'' என்றான்.

''போயிட்டு வரேன்னு சொல்லுடா'' என்ற மகாலக்ஷ்மி, ''சாயங்காலம் அவர் வந்து 'நீ எங்கேன்னு கேட்பார். அப்போ நான் அவரிடம் என்ன சொல்லட்டும்? அவன் என்னை மதிக்காமே, எனக்கு அடங்காமே வீட்டை விட்டே போயிட்டான்னு சொல்லட்டுமா?'' என்று கேட்டாள்.

ஒரு நிமிஷம் அதிர்ந்து போய் நின்ற குமார் மறு கணமே சுதாரித்துக் கொண்டான். ''உன்னாலே அப்படிச் சொல்ல முடியாதுன்னு எனக்குத் தெரியும். உனக்குத் தைரியம் இருந்தா, 'அவன் சுதந்திரமா இருக்க ஆசைப்பட்டு, அதுக்காக என்னையும் பிரிஞ்சு போயிட்டா'னு சொல்லு'' என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியேசென்றான்.

ஸ்கூட்டரில் ஏறிக் கொண்டவன் மறுபடியும் திரும்பிப் பார்த்தான். ''அம்மா'' என்று அழைக்கவும், கண்ணில் துளிர்த்த நீர் இழே வந்து விடாமல் சமாளித்துக் கொண்ட மகாலக்ஷ்மி ''என்னப்பா வேணும்' என்று கனிவோடு கேட்டாள்.

''நான் ஃபாக்டரியிலேயே ஸ்கூட்டரை விட்டுட்டுப் போறேன். பியூன் கொண்டுவந்து விட்டுடுவான்.'' என்று சொல்லிவிட்டு வேகமாகச் சென்று விட்டான்.



**அதிக வரதட்சணை**

உலகிலேயே, பெண்ணுக்கு அதிக வரதட்சணை கொடுத்தவர் டான் சைமன் என்பவர்.

இவர் தன் மகள் எல்லுவுக்காக 1926 ஆம் வருடத்தில் 14 கோடி ரூபாய் வரதட்சணை கொடுத்திருக்கிறார்!

அப்போது அவருக்கு இருந்த சொத்தின் மதிப்பு சுமார் 219 கோடி ரூபாய்.

- தேன். வள்ளியம்மை

ஸ்கூட்டரின்வேகம் மிகுந்த சத்தம் தொலைவில் மங்கி மறைவதைக் கேட்ட மகாலக்ஷ்மி அதற்கு மேலும் அடக்கிக் கொள்ள முடியாமல் கண்ணீர் மடையைத் திறந்து விட்டாள்.

மாலையில் சாம்பசிவம் வந்ததும் வழக்கத்துக்கு மாறாகச் சரண்யா ஹாலில் உட்கார்ந்திருந்தது அவருக்கு வியப்பை அளித்தது. அவர் உள்ளே நுழைந்ததும் அவருக்கு ஆஜர் கொடுத்து விட்டது போல் எழுந்து போய் விட்டாள் சரண்யா.

காப்பியை எடுத்துக் கொண்டு வந்த மகாலக்ஷ்மி அதை டீபாயின் மேல் வைத்து விட்டு அவருடைய உத்தரவுக்காகக் காத்து நின்றாள்.

ஆடைகளைத் தளர்த்திக் கொண்டு சோபாவில் சாய்ந்ததுமே அவர், ''குமாரை வரச் சொல்லு'' என்று உத்தரவிட்டதும் மகாலக்ஷ்மியின் இதயம் ஒரு கணம் நின்று பிறகு அடித்துக் கொள்ளத் துவங்கியது.

அவளுடைய தயக்கத்தைக் கண்டு ''ஏன இன்னிக்கு அவன் இன்னும் வரல்லியா?'' என்று கடிந்தார் அவர்.

'என்ன பதில் சொல்வது' என்று குழம்பிய மகாலக்ஷ்மி எரிமலையை எதிர்க்கொள்ளத் தயாரானாள்.

''அவன் மத்தியானமே வந்துட்டுப் போயிட்டான்.''

குடித்துக் கொண்டிருந்த காப்பியை அப்படியே பாதியில் நிறுத்திவிட்டு ''போயிட்டானா?'' என்று வினவிய அவர் ''எங்கே?'' என்று அடுத்த கேள்வியைச் சொடுக்கினார்.

''பம்பாய்க்கு'' என்று அவள் முணங்கிய வார்த்தையை மீறிக் கொண்டு ஸ்கூட்டரின் சத்தம் வந்தது.

ஒருவேளை அவன் திரும்பி வந்திருப்பானோ என்ற நப்பாசை துளிர் விட எட்டிப் பார்த்தாள் மகாலக்ஷ்மி.

யாரோ புது ஆள் கேட்டில் நுழைந்து வந்து கொண்டிருந்தான்.

''யாரப்பா நீ?'' சாம்பசிவம் அதட்டினார்.

''குமார் ஸார் ஸ்கூட்டரை வீட்டிலே விட்டுடச் சொன்னாரு''

''எங்கே அவன்?''

''மத்தியான வண்டிக்கே அவர் புறப்பட்டுப் போயிட்டாரு. சொல்லிடச் சொன்னாரு. நான் வரேங்க.''

அவன் போகும்வரை காத்திருந்து விட்டு மகாலக்ஷ்மியின் பக்கம் திரும்பிய அவர் கண்களில் கோபம் பழுத்திருந்தது.

''இதெல்லாம் என்ன?''

இனி வேறு வழியில்லை என்கிற நிலையில் அந்த இடி முழக்கத்தை எதிர் கொண்டாள்.

''பம்பாய்க்கு மாற்றலாகியிருக்கிறதாச் சொன்னான். இன்னும் இரண்டே நாள்லே அங்கே போய் வேலையிலே சேரணும்கிறதாலே இன்னிக்கே அவசரமாப் புறப்பட்டுப் போறதாச் சொன்னான். உங்ககிட்டச் சொல்லிடும்படி சொன்னான்.''

''வாழ்த்தி வழி அனுப்பினியாக்கும்?'' என்று ஏளனமாகக் கேட்டவர் அவள் எதிர் பாராதவாறு சீறினார்.

''எனக்குத் தெரியாமெ, என்கிட்ட ஒரு வார்த்தை கூடச் சொல்லாம அவன் இந்த வீட்டை விட்டுப் போயிருக்கான். அதுக்கு நீ உடைந்தையா யிருந்திருக்கே.''

''உங்ககிட்டச் சொல்லும்படி என்கிட்டச் சொல்லிட்டுத்தான் போனான்.''

''ஏன்? அவனுக்கு நேரே எங்கிட்டச் சொல்ல முடியலையாமோ? அவனுக்கு இவ்வளவு கர்வம். நீயும் அதை அவன் கிட்ட வளர்த்து விட்டிருக்கே. நீயும் அவனும் சேர்ந்து செஞ்ச இந்தச் சதிக்கு எத்தனை நாளாத் திட்டம் போட்டேள்? வேலைக்காரிக்கும் தகுதி யில்லாத உன்னை இத்தனை வருஷமா நான் காப்பாத்தினதுக்கு உன் பிள்ளையோட சேர்ந்து என்னை அவமானப் படுத்த நீ திட்டம் போட்டிருக்கே. உன்னை நான் இனிமே எப்படி எதுக்கு நம்ப முடியும்?''

சீறிப் பாய்ந்த வார்த்தைப் புயலுக்கு இடையே மகாலக்ஷ்மி திக்குமுக்காடிப் போனாள்.



**யோசனை...யோசனை**

மண்ணெண்ணெய்த் தட்டுப்பாடான நேரத்தில் துளசிச் செடியின் இலையை எடுத்து ஒரு மெல்லிய துணியில் சிறு மூட்டையாகக் கட்டி ஸ்டவ்விற்குள் போட்டு வைத்தால் மண்ணெண்ணெய் குறைவாகச் செலவழியும்.

- எஸ். தேவராஜன்

''உங்க நம்பிக்கைக்கு விரோதமா நான் எதுவுமே செய்யலே. செய்யவும் மாட்டேன். என்னை நம்புங்கோ.''

''அப்போ... அவன் உனக்குத் தெரியாமத் தான் பம்பாய்க்குப் போறதுக்கு ஏற்பாடு செய்திருக்கான்னு சாதிக்கிறியா?''

''இன்னிக்கு மத்தியானம் அவன் வந்து சொன்னபோதுதான் தெரியும்.''

''நீ சொல்றது உண்மையா யிருந்தா, என்னை மதிக்காம, எனக்குத் தெரியாம போன அவனை இந்த நிமிஷம் முதல் மறந்துடணும். அவனுக்குக் கடுதாசி போடறதோ அவன் கிட்டத் தொடர்பு வைச்சுக்கவோ கூடாது. அவன் அந்த வீட்டுக்கு வரக் கூடாது.'' என்று கர்ஜித்தவர் அவள் மௌனமாக நிற்பதைப் பார்த்து அவனோட சொந்தத்தை இந்த நிமிஷம் முதல் மறந்துடறதா இருந்தா உள்ளே போ, மாட்டேன்னா உன் பொண்ணையும் அழைச்சிண்டு வெளியே போயிடு'' என்று முடித்தார்.

பெரியதொரு பூகம்பத்தை எதிர்பார்த்து உள் அறையொன்றில் இருந்தபடி அவர்களின் உரையாடலைக் கேட்டுக் கொண்டு அமர்ந்திருந்த சரண்யா அவர் மகாலக்ஷ்மியிடம் 'வெளியே போயிடு' என்று இரைந்ததும் தன் அம்மா என்ன செய்யப் போகிறாள் என்று ஆவலோடு எதிர் பார்த்துக் காத்திருந்தாள்.

'அம்மா நிச்சயமாகக் குமாரை இழக்கச் சம்மதிக்க மாட்டாள். அவளது இருண்ட வாழ்வில் தோன்றியுள்ள விடிவெள்ளியே அவன்தானே' என்று நினைத்த சரண்யாவுக்கு மகாலக்ஷ்மியின் செய்கை ஏமாற்றத்தை அளித்தது. கூடவே கோபத்தையும் ஏற்படுத்தியது.

அவளுக்குத் தன் தந்தையைப் பற்றி எதுவும் தெரியாது. தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்டுவிட்ட அவலச் சுமைகளை மகாலக்ஷ்மி ஒருபோதும் வெளியிட்டுக் கொண்டதில்லை. உள் அறையில் சிறிய அளவில் மாட்டப்பட்டிருந்த புகைப்படத்தில் தான் அவள் தன் தந்தையை – அவர் உருவத்தைப் பார்த்திருக்கிறாள். மகாலக்ஷ்மியின் மங்கல உருவம் அவள் நெற்றியில் பளிச்சென்று ஒளி வீசிக் கொண்டிருந்த குங்குமம்தான் அவர் உயிரோடிருக்கிறார் என்ற உண்மையை உணர்த்திக் கொண்டு இருந்தன. அவளுக்குச் சில நாட்களாகவே தன் தகப்பனாரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் கிளம்பி மனத்தை நிரப்பிக் கொண்டிருந்தது.

'அவர் எப்படி இருப்பார்? குமாரைப் போலவா?'

குமார்.



# நெஞ்சார்ந்த குடியரசு நாள் வாழ்த்துக்கள்

1950 ஜனவரி 26 அன்று இந்திய மக்கள் ஒரு மதச்சார்பற்ற சமதர்ம ஜனநாயகக் குடியரசு ஆதிக்கத்திற்கு அடிக்கல் நாட்டினார்கள். கடந்த 31 ஆண்டுகளில் நமக்குப் பெருமை சேர்க்கும் சாதனைகள் பல புரிந்திருக்கிறோம்.

- ஜனநாயகத்தை வலுமிக்க அடிக்கல் மீது அமைத்திருக்கிறோம்
- தீராத உணவுப் பற்றுக்குறையைக் கடந்தேறியிருக்கிறோம்.
- தொழில் துறையில் மிகச் சிறந்த நாடுகளில் ஒன்றாகத் தலையெடுத்திருக்கிறோம்
- அறிவியலிலும் தொழில்நுட்பவியலிலும் தலையாயதோர் இடம் பெற்றிருக்கிறோம்
- வெளிநாட்டுத் தாக்குதல்கள் மூன்றை முறியடித்திருக்கிறோம்
- பல நாடுகள் கூடும் அரங்குகளிலே நம் குரலும் செல்கிறது.

இருந்தும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், குறைவற்ற சரிசமமான நீதியை எல்லோருக்கும் உறுதிப்படுத்துவதற்கும் செய்ய வேண்டியது இன்னும் பல இருக்கிறது.

இதைச் செய்வதற்கு நாட்டு ஒற்றுமை உணர்வு தரும் வலிய பாசத்தால்தான் முடியும்



முன்னேற்றமும் இடையூறற்ற பாதுகாப்பும் நிலைக்க நாட்டின் ஒருமைப்பாடு உணர்வைத் திடப்படுத்துங்கள்
மதச் சார்பற்ற ஊக்கங்களை வலுப்படுத்துங்கள்.

davp80/331

நேற்றுவரை இந்த வீட்டில் அவனோடு ஒன்றாக இருந்தவன். அவ்வப்போது அவள் மனத்தில் எழும் உணர்ச்சிகளையும், ஆசைகளையும் உணர்ந்து அவைகளை உள்ளன்போடு பகிர்ந்து கொண்டவன். இந்தச் சிறை வாசத்திலிருந்து விடுதலை அளிப்பதாக அவளுக்கு உறுதி அளித்து வந்தான். அதை அவன் நிறைவேற்ற முயற்சியும் செய்து பார்த்து விட்டான். ஆனால் அம்மா தான் குறுக்குச் சுவராக நின்று அவன் கழற்ற முனைந்த விலங்கை மறுபடி மாட்டிப் பூட்டி விட்டுவிட்டாள்.

'இனி எப்போது விடுதலை கிடைக்குமோ?'

ஏமாற்றம் எரிச்சலை ஏற்படுத்த அதை வெளிப்படுத்தவும் முடியாமல் குமுறிக் கொண்டிருந்தாள் சரண்யா.

குமார் வீட்டை விட்டுப்போனதிலிருந்து சாம்பசிவம் மேலும் குரூரமாகிப் போயிருந்தார். சரண்யாவைப் பொறுத்த வரை அவருடைய கெடுபிடிகள் அதிகமாயின. அவருடைய செய்கைகளும், நடவடிக்கைகளும் அவரால் கண்காணிக்கப்பட்டுக் கொண்டிருப்பதை அவளால் உணர முடிந்தது. அவர் எப்போதும், தன்னைக் கண்காணிக்கிறார் என்ற உணர்வே அவளுக்கு 'அவரை எப்போதாவது ஏதாவது விஷயத்தில் ஏமாற்றி விட வேண்டும்' என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தது.

அதற்கு முன்னோடியாக அவள் மிகவும் பதவிசாகவும் அடக்கமாகவும் நடந்து கொள்ள ஆரம்பித்திருந்தாள்.

மகாலக்ஷ்மிக்குக்கூட சரண்யாவின் போக்கு வியப்பையே அளித்தது. சாதாரணமாக எதற்கும் எதிர் வாதம் செய்து கொண்டிருந்தவள் இப்போது வாய் மூடி மௌனியாக இருக்கிறாள் என்றால் அதை இயல்பாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

அன்று குமாரிடமிருந்து கடிதம் வந்தது. மகாலக்ஷ்மிக்கே தைரியமாக முகவரி எழுதி தெரிவித்திருந்தான் அவன்.

இது அவனுடைய இரண்டாவது கடிதம்.

முதல் கடிதம் சாம்பசிவத்தின் பெயருக்கு வந்திருந்தது. அதில் குறிப்பிடும்படியாக எதுவும் இல்லாமல் பம்பாய்க்கு மாற்றலாகி வந்துவிட்டதைக் குறிப்பிட்டு அதை அவருக்கு அறிவிக்கும் மூலமாக அதை முடித்திருந்தான். தன்னுடைய முகவரியைக் கூட அதில் அவன் தெரியப்படுத்தவில்லை.

இந்த இரண்டாவது கடிதத்தை மகாலக்ஷ்மிக்கே எழுதியிருந்தது மட்டும் அல்லாமல் தனக்குப் பதில் எழுதும்படியும் கேட்டுக் கொண்டு தன்னுடைய முகவரியையும் எழுதியிருந்தான். ஆனால் அந்தக் கடிதத்தையோ அவன் எழுதியிருந்த முகவரியையோ சாம்பசிவம் அவளுக்குத் தெரிவிக்கவில்லை. அதை அப்படியே கிழித்துக் குப்பைக் கூடைக்குள் போட்டு விட்டார்.

கடிதம் வந்ததும் அவர் அதைப் படித்து விட்டு ஆத்திரத்துடன் அதைக் கிழித்துப் போட்டதும் அப்போதுதான் அங்கே வந்த சரண்யாவின் கண்களில் பட்டு விட்டன. அவர் வெளியே புறப்படும் சமயத்தை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தாள் அவள். அவர் புறப்பட்டுச் சென்றதும் குப்பைக் கூடையை ஆராய்ந்து பார்த்தாள் சரண்யா. சுக்கல் சுக்கலாகக் கிழிக்கப்பட்டிருந்த அந்தத் துண்டுகளிலிருந்து எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏமாற்றம் நெஞ்சைக் கவ்வ எரிமலை வெடிப்பதுபோல் சாம்பசிவத்தின் மீது கோபம் வெடித்தது. அவருடைய ஆர்ப்பாட்டங்களுக்குப் பணிந்து கொண்டே இருக்கும் மகாலக்ஷ்மியிடம் கூட வெறுப்பே ஏற்பட்டது. அந்த மன உளைச்சலிலும், கோபத்திலும் அன்று எதுவும் சாப்பிடாமலேயே காலேஜுக்குப் புறப்பட்டாள் அவள்.



மிக்ஸியில் தயிர் கடையும் போது சிறிது நேரம் ஓடியபின் நிறுத்திவிட்டு, பின் ஐந்து நிமிடங்கள் கழித்து ஓடவிட்டால் வெண்ணெ நன்கு திரண்டு வரும். - வி. கலாதேவி

''சரண்யா, இன்னிக்கு உனக்கு என்ன வந்தது? ஏன் சாப்பிடாமக் கிளம்பறே?'' என்று பரிவோடு கேட்ட மகாலக்ஷ்மிக்குப் பதில் சொல்லக் கூட அவள் விரும்பவில்லை.

''நான் கேட்டுண்டே இருக்கேன். பதில் சொல்லாமப் புறப்பட்டா என்ன அர்த்தம்?'' என்று மகாலக்ஷ்மி கடுமையாகக் கேட்டதும் அவள் வெடித்தாள்.

''உனக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?''

''என்டி, கயிறிலேயோடுதான் பேசறயா? இந்த மாதிரி யெல்லாம் பேச உனக்கு யார் சொல்லிக் கொடுத்தா? பெத்த தாயார் கிட்டப் பேசற பேச்சா இது?''

''பெத்த தாயார்தான். யார் இல்லேங்கறா? அந்தச் சொந்தத்தைத் தவிர வேற எந்தச் சலுகையைக் கொடுத்திருக்கே? நீ காட்டற பரிவு, அன்பு எல்லாமே போலிதான்'' என்ற சரண்யா மேலும் தொடர்ந்தாள்.

''அந்த அன்பும் பரிவும் எதைச் சாதிச்சிருக்கு? உன்னைப் போலவே அவர் கிட்ட அடிமையா வாழணுங்கிறதைத் தவிர அந்த அன்பு மூலமா நீ எங்களுக்கு என்ன செஞ்சே? இதுலேருந்து விடுபட விரும்பி நம்பனையும் அழைச்சிண்டு போறதாச் சொன்னனே! அதைக் கேட்டியா? 'நானாவது போறேன்னு' சொன்னதுக்கும் என்னையும் தடுத்துட்டே. 'அவனுக்கு ஒரு கடிதாக கூடப் போடக் கூடாது'ன்னு அவர் போட்ட கட்டளையையும்

அப்படியே ஏத்துண்டே. உன்னோட சுயநலம் எங்களோட கௌரவத்தை மதிக்கணும் கறதைப் கூட உன்னைத் தடுத்துடறது. அந்தச் சுயநலத்துக்காகத்தான் குமாரை இழந்தே. மீதி நான் இருக்கேன். அவனை இழந்துட்டாலும் எங்கேயோ அவன் உயிரோட தான் இருக்கான். ஆனா என்னை இழந்துட்டேன்னு அது என்னைப் பலிவாங்கிக்கிறதாத் தான் இருக்கும்'' — சுடு நெருப்பாய் வார்த்தைகளை வீசி அவளைச் சுட்டுவிட்டுச் செல்லும் மகளை இரக்கமாகப் பார்த்தான் மகாலக்ஷ்மி.

அந்தச் சூடு அவளுக்குப் புதிதல்ல.

வார்த்தைகள் வீசும் அனல் கொழுந்துகளை அவள் தாங்கிப் பழக்கப்பட்டவள்தான்.

ஆனால் அவை கிளம்பிய இடம்... பெற்ற மகளுக்கே, தான் பகையாகிப் போன விந்தைதான் என்ன!

இந்தச் சம்பவத்துக்குப் பின் சரண்யா அவளுடன் பேசுவதையே நிறுத்தி விட்டாள். தன்னுள் ஒரு முடிவுக்கு வந்து விட்டவள் போல் அவள் செயல் பட்டாள். தன்னுடைய தேவைகளைத் தானே கவனித்துக் கொண்டாள். அந்த உலகத்துக்குள் அவள் மகாலக்ஷ்மியை அனுமதிப்பதில்லை.

கல்லூரியிலிருந்து நேரம் கழித்து வீடு திரும்பினாள். அதைத் தட்டிக் கேட்க மகாலக்ஷ்மி முனைந்தபோது அவளை அவமதித்து நடந்து கொண்டாள். ஆனால் சாம்பசிவத்திடம் நேரடியாக மோதிக் கொள்ளவில்லை. அவர் வீட்டை விட்டுச் சென்ற பிறகுதான் புறப்படுவாள். அவர் வீட்டுக்கு வந்து சேரு முன்பு அவளும் வந்து விடுவாள்.

சரண்யா எங்கேயோ தவறு செய்கிறாள் என்பது மகாலக்ஷ்மிக்குத் தெரிந்தது. வீட்டை விட்டு வெளிக் கிளம்பாத அவளால் மகளுடைய நடவடிக்கைகளைப் பற்றி முழுதும் அறிந்து கொள்வதற்கு முடியவில்லை. வேலைக்காரனிடம் சொல்லித் தன் மகளைக் கண்காணிக்கவும் அவளுடைய தாய் மனம் விரும்பவில்லை.

அன்று சாம்பசிவம் மாலை வீடு திரும்பிய போதே மிகவும் கோபமாக இருந்தார். வழக்கம் போல அவருக்குக் காப்பியைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு அவர் உடை மாற்றிக் கொண்டவைகளை எடுத்து வைத்துவிட்டு அவள் திரும்பியபோது அவருடைய குரல் அவளைத் தடுத்து நிறுத்தியது.



சமையலறையில் வறுத்த வெந்தயப் பொடி எப்போதும் வைத்திருந்து, சாம்பாரில் ஒரு ஸ்பூன் சேர்த்தால் போதும்! சமையலறையே கமகமக்கும்! உங்கள் சாம்பார் வாசனை, சாப்பிடுபவர்கள் கையை விட்டே அகலாது. - ரமாமணி பார்த்தசாரதி

''உன் பெண் என்ன செஞ்சிருக்கா தெரியுமா?''

மகாலக்ஷ்மி இதயம் வெடிக்க அவர் மேலே சொல்லப் போவதைக் கேட்கத் தயாரானாள்.

''பாய் ஃப்ரெண்ட் கிடைக்கலேன்னு அன்னிக்கு ஒரு நாள் சொன்னாளே, இன்னிக்கு— இன்னிக்கு என்ன —கொஞ்ச நாளாவே ஒரு பாய் ஃப்ரெண்டோடதான் சுத்திண்டிருக்கா.''

'பாய் ஃப்ரெண்டு. அவன் யாரோ? எப்படிப்பட்டவனோ? சரண்யா அவனோடு பேசி பழகி ஏமாந்து போய் இழக்கக் கூடாததையெல்லாம் இழந்திருப்பாளோ?'

'இதையெல்லாம் அவரிடம் எப்படிக் கேட்பது?' ஒரு மாமனாரும் மருமகளும் பேசிக் கொள்ளக் கூடிய விஷயங்களா இவை? மேலும் சரண்யாவுக்கும் எனக்கும் இடையே ஏற்பட்டுவிட்ட மன விரிசலும் இவருக்குத் தெரியாதே.

அதை இவர் தெரிந்து கொள்ளாதவாறு இருவருமே நடந்து கொண்டு வந்தனர். விரிசலே இவரால் ஏற்பட்டது தானே!

அது எப்படியோ போகட்டும். இந்த விவகாரத்தை அறிந்து கொள்ள வேண்டும். சரண்யா பேசாவிட்டால் என்ன? அதற்காக அவளை நிலை தடுமாறிப் போக விடுவதா? கூடாது. வலிய அவளிடம் போய்ப் பேசித் தெரிந்து கொள்ள வேண்டும்.

'நீ யார்' என்று அன்று கேட்டாளே. அதற்கு இன்று பதில் சொல்ல வேண்டும். தன்னுடைய உரிமையை ஸ்தாபித்துக் கொள்ள வேண்டும். மகாலக்ஷ்மியின் தீர்மானத்துக்கு ஆதரவாக இருந்தன சாம்பசிவம் அடுத்துக் கர்ஜித்த சொற்கள்.

''அந்தக் கழுதையை மனம் போனபடி சுத்த விட்டுட்டு நான் சும்மா இருக்க முடியாது. அவளாலே ஊரிலே என் மானம் போறதுக்கு முன்னாலே நான் இதுக்கு ஒரு வழி பண்ணணும். அவளுக்குச் சீக்கிரமா ஒரு மஞ்சக் கயித்தைப் போட்டு வேற ஒருத்தன் வீட்டுக்கு அனுப்பிட முடிவு பண்ணிட்டேன். அப்போதான் அவ கர்வம் ஒடுங்கும். ராகவன் எனக்குப் பிள்ளையாப் பொறந்த பாவம், இந்தச் சனியனுக்கு' நான் எல்லாம் செய்து தொலைக்க வேண்டியிருக்கு.'

சரண்யாவுக்குத் திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று அவர் நினைத்தாலும் அதைச் சொன்ன முறையில் அவர் உபயோகித்த அசுபமான சொற்களால் மன வேதனை அடைந்தாள் மகாலக்ஷ்மி. ஆயி

னும் சுபமான காரியம் தன் சுபத் தன்மையை இழந்துவிடப் போவதில்லை என்ற எண்ணத்தால் சற்று மன நிம்மதியும் பெற்றாள்.

எப்படியோ சரண்யாவுக்குத் திருமணம் செய்துவிட சாம்பசிவம் முடிவு பண்ணிவிட்டார். அவளுக்கு வரும் கணவன் நல்லவனாக இருக்க வேண்டும். அவள் விரும்பும் விடுதலையும் இந்தத் திருமணத்தின் மூலம் அவளுக்குக் கிடைத்து விடும். சரண்யா தன்மீது இனிமேல் கோபம் காட்ட மாட்டாள் என்று நம்பினாள் அவள்.

வழக்கமாக அவர் வீட்டுக்கு வருவதற்கு முன் வந்துவிடும் சரண்யா அன்று இன்னும் வரவில்லை.

மணி ஏழும் அடித்து விட்டது.

சாம்பசிவத்தின் கோபம் உறுமிக் கொண்டிருக்க, மகாலக்ஷ்மி தவித்துக் கொண்டிருந்தாள்.

ஏழரை மணிக்கு ஒரு டாக்சி வந்து வாசலில் நின்றது. மிகவும் துணிச்சலாக அதிலிருந்து இறங்கி அதனுள்ளே இருந்தவனுக்கு 'டாடா' காட்டிவிட்டு உள்ளே வந்தாள் சரண்யா.

சாம்பசிவத்தின் கோபத்தையோ மகாலக்ஷ்மியின் தவிப்பையோ லட்சியம் செய்யாமல் உள்ளே செல்ல முயன்றவளை ''நில்லு'' என்று சாம்பசிவம் கர்ஜித்த ஒற்றைச் சொல், அவளை வாசலிலேயே நிறுத்தி வைத்தது.

சற்றும் பயமில்லாமல் 'என்ன' என்ற பார்வையைக் கேள்வியில் நிறுத்தி அவரை நோக்கிச் சொடுக்கினாள் சரண்யா. ஒரு ரேஸ் குதிரையின் திமிர்ப்பும், மதர்ப்பும் அவள் பார்வையில் பளிச்சிட்டன.



ஆசிரியர்: இன்றோடு உங்களுக்கு ஸ்கூல் முடிகிறது. லீவில் நிறைய படித்து, நல்ல அறிவோடு திரும்ப வாழ்த்துகிறேன்.

மாணவன்: (முணுமுணுப்பாக) உங்களுக்கும் அதே வாழ்த்துக்கள், டீச்சர். - பிரசன்ன

''எங்கே போயிட்டு இவ்வளவு நேரம் கழிச்சு வரே?''

அலட்சியமாக, ''சினிமாவுக்கு'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்ன சரண்யா உள்ளே போக அடுத்த அடி எடுத்து வைத்தாள்.

''யாரைக் கேட்டுண்டு போனே?''

''யாரைக் கேட்கணும்? என் ஃப்ரண்டு கூப்பிட்டான் போனேன்.''

''கூப்பிட்டானா? என்ன சொல்றே?''

''ஆமாம். என் பாய் ஃப்ரண்டு.''

'சாம்பசிவம் சொன்ன செய்தி பொய்யாக இருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்த மகாலக்ஷ்மியின் பிரார்த்தனை பலிக்கவில்லை.

''சரண்யா, இதுஉனக்கே நன்னாஇருக்கா?'' என்று கேட்டு இரண்டு அடி முன்னேறிய மகாலக்ஷ்மி சரண்யாவின் பார்வையைச் சந்திக்கத் திராணியற்று அப்படியே நின்றாள்.

''உள்ளே போ. நாளைக்கு உன்னைப் பார்க்க ஒரு வரனைக் கூட்டிண்டு வரப் போறேன். மறு வார்த்தை பேசாம அவனைக் கல்யாணம் செஞ்சுக்கணும்'' — சாம்பசிவம் கர்ஜித்தார்.

அதற்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை என்பது போலத் திமிர்ந்த நடையுடன் உள்ளே தனக்காக ஒதுக்கப்பட்டிருந்த தனது அறைக்குச் சென்றாள் சரண்யா.

அவள் அதைத் தாளிட்டுக் கொள்ளும் முன்பு விருட்டென்று அதற்குள் புகுந்த மகாலக்ஷ்மி தன் பெண்ணின் முன்பு பத்ரகாளி போல நின்றாள்.

''சரண்யா இது என்ன வேலை? எத்தனை நாளா அவனோட சிநேகம்?''

''இதைக் கேட்க உனக்கு அருகதையும் இல்லே. நான் இதுக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லே.''

''இருக்கு. நான் உன்னோட அம்மா. அவர் உனக்குக் கல்யாணம் செய்து வைக்க முடிவு பண்ணியிருக்கார். அப்போ உன்னை பரிசுத்தமான மனைவியா வரப்போறவன் கிட்ட ஒப்படைக்க வேண்டிய கடமையும் பந்தமும் எனக்கு இருக்கு.''

''அவர் பார்க்கிற வரனை நான் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன். அவர் பார்க்கற வரன் நல்லவனா இருக்க மாட்டான்.''

''அவர் நல்ல வரனாத்தான் முடிவு பண்ணுவார்.''

''அதை நீ சொல்றயா?'' என்று ஏளனமாகச் சிரித்த சரண்யா, ''என்னோட கல்யாண விஷயத்துலே நான்தான் முடிவு பண்ணுவேன். உன்னைப் போல ஒரு தன்மானம் பிக்கை இல்லாத கோழையா, வாழ்நாள் பூரா வாழ நான் இஷ்டப்படலே.''

''அப்படியானா....''

''முடிஞ்சா அவர் கிட்டச் சொல்லு. நான் 'ஒருத்தரை விரும்பறேன். அவரைத்தான் கல்யாணம் செய்துக்குவேன்'னு.''

''அப்படி நான் சொல்ல மாட்டேன். அது சரியில்லே.''

''அதுக்குத்தான் சொன்னேன், உனக்கு அருகதை இல்லேன்னு. 'நான் உன் அம்மா' என்று மார் தட்டிண்டாப் போறுமா? பெண்ணோட இஷ்டத்தையும் தெரிஞ்சுண்டு ஆதரவும் கொடுக்கணும். அதிகாரம் பண்ணறவரோட பழகிப் பழகி உனக்கும் அதுதான் வந்திருக்கு. ஆதரவு தரத் தெரியல்லே.''

''அதுக்கும் முறை இருக்குடி. நீ யாரையோ ஊர், பேர் தெரியாதவனைச் சொல்லி, இவனைத்தான் பண்ணிப்பேன்னு வீம்பு பிடிச்சா அதைக் கேக்க முடியுமா? நீ சொல்றவன் நல்லவனா இருக்கணும். அவர் மனசுக்குத் திருப்தியா இருக்கணும். இன்னும்.....''

சட்டென்று தான் உட்கார்ந்திருந்த ஆசனத்திலிருந்து எழுந்தாள் சரண்யா.

''அம்மா நீ முதல்லே இங்கேயிருந்து போ. என் கல்யாண விஷயத்தை எப்படி நடத்திக்கணும்னு நான் முடிவு பண்ணியாச்சு. இதிலே யார் சொல்றதையும் நான் கேக்கப் போறதில்லே. அதுக்காக நாளைக்கு அவர் யாரையோ அழைச்சுண்டு வரப்போறதாகச் சொல்லி இருக்காரே, அவரைப் பார்க்காம இருக்க மாட்டேன். இது போதும் உனக்கு. போ.''

சரண்யா வெளியே வந்தாள். அவள் அப்படிச் செய்தது, அறைக்குள் இருந்தால் மகாலக்ஷ்மி மேலும் ஏதாவது கேட்பாள் என்று நினைத்து அதைத் தடுத்துக் கொள்ளும் முயற்சியாக மகாலக்ஷ்மிக்குத் தோன்றியது. முகத்தில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு அவளும் வெளியே வந்தாள். அவளுக்கு ஒரு வகையில் நிம்மதியாக இருந்தது.

'நாளைக்கு வரப்போகும் வரன் எப்படி இருப்பானோ?' என்ற கவலை உள் நரம்பைச் சொடுக்கி இழுத்தது.

**மா**லை நெருங்கிக் கொண்டிருந்தது.

சாம்பசிவம் இன்னும் வரவில்லை.

சரண்யா அன்று கல்லூரிக்கு லீவு போட்டிருந்தாள். ஆயினும் காலையிலேயே வெளியே சென்றவள் சற்று முன்புதான் திரும்பி வந்திருந்தாள்.

வரப்போகும் விருந்தினரை உபசரிக்க ஏதாவது செய்யலாம் என்று நினைத்தாலும் சாம்பசிவம் அதைப் பற்றி எதுவும் சொல்லாததால் ஒன்றும் செய்ய முடியவில்லை.



உலகத்திலேயே தங்கம் அதிகமாக இருப்பது தென்னாப்பிரிக்காவிலும் ரஷ்யாவிலும்தான்.

இந்தியாவில்தான் தங்க நகைகள் அதிகமாகச் செய்யப்படுகின்றன, அணியப்படுகின்றன.

நம் நாட்டில் தங்கம் அதிகமாக விற்பனையாவது பம்பாயிலுள்ள ஜவேரிபஜாரில் தான்.

உலகம் பூராவிலும் ஒரு வருஷத்தில் நகைகள், பாத்திரங்கள், கைக்கடிகாரங்கள் செய்வதற்கு 1100 டன் தங்கம் பயன்படுத்தப்படுகிறது.

மிக அதிகமாக நகை ஆசை உள்ளவர்கள் இந்தியப் பெண்கள் தான், அடுத்தபடி இந்தாலியர்கள். - அனிதா ராமச்சந்திரன்

அப்போதுதான் தன்னுடைய இயலாமை மகாலக்ஷ்மிக்குத் தெளிவாகத் தெரிந்தது.

'மருமகன்' என்ற பெயரைப் போலியாகத் தாங்கிக் கொண்டிருக்கும் அந்தஸ்து இல்லாத வேலைக்காரி. முனியன் அந்த வீட்டின் விஸ்வாசமான வேலைக்காரன் என்றால் வீட்டில் உள்ளோரின் பசிக்குத் தகுந்த உணவை அவர்களுக்குப் பக்குவப்படுத்தி அளிக்கும் சம்பளமில்லாத சமையல்காரி இவள்.

சாம்பசிவம் வரும் நேரமாகி விடவே, சரண்யாவைத் தேடிப் போனாள் மகாலக்ஷ்மி.

''சரண்யா, அவா எல்லாம் வர நேரமாயிடுத்து. சீக்கிரமா டிரஸ் செஞ்சுக்கோ.''

''எனக்குத் தெரியும்.''

''நான் பின்னி விடட்டுமா?''

''வேண்டாம்.''

''கொஞ்சம் அடக்கமா டிரஸ் பண்ணிண்டு நல்ல புடவையாக் கட்டிக்கோ.''

''என்னைக்கொஞ்சம் தொந்தரவு பண்ணாம இருக்கியா?''

மகாலக்ஷ்மி பின்வாங்கினாள்.

அவர்கள் வந்து விட்டார்கள்.

'ஆனால் . இதென்ன! சாம்பசிவத்துடன் யாரோ ஒரு நடுத்தர வயது மனிதர் மட்டும் வருகிறார். பிள்ளையின் தகப்பனாராக இருக்குமோ? முதலில் இவர் வந்து பார்த்துவிட்டுப் பிறகு பிள்ளையை அழைத்துக் கொண்டு வருவார் போல இருக்கு' என்று தனக்குள் பலவாறாகச் சமாதானம் செய்து கொண்டாள் மகாலக்ஷ்மி. .

சாம்பசிவத்தின் உத்தரவுப்படி இருவருக்கும் காப்பி எடுத்துக் கொண்டு வந்தாள் மகாலக்ஷ்மி.

அப்போது அவர் வந்திருந்தவரிடம் சொல்லிக் கொண்டிருந்த சொற்கள் காதில் விழுந்தன.

''அனாதைப் பொண்ணு. அப்பன் சிறு வயசிலேயே விட்டுட்டு ஓடிப்போயிட்டான். யாரும் மனுஷா இல்லாம தாயும் பொண்ணுமா அனாதையா நின்னப்போ இங்கேயே சமையலுக்கு வச்சேன். இப்போ அந்தப் பொண்ணுக்கு ஏதாவது ஒரு இடம் தேடிக் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டியதும் என் பொறுப்பாயிடுத்து. நீங்க கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டாம். நான் என்ன செய்தாலும் அவா சரின்னு சொல்லுவா. சிம்பினா கோயில்லே திருமணத்தை முடிச்சுடலாம். உங்க குழந்தைங்களைக் காப்பாத்தறதுக்கு உங்களுக்கு ஒரு மனைவி கிடைச்சுருவா.''

மகாலக்ஷ்மிக்கு உடம்பே எரிந்தது. என்ன நயமான சொற்கள்! என்ன தயாள குணம் தன்னுடைய சொந்தப் பிள்ளையின் பெண்ணை —பேத்தியை அனாதை என்று சொல்ல அவருக்கு என்னமாய் நாவெழும்பிற்று... சிம்பிளா கோயில்லே — அதுவும் இரண்டாந் தாரமாக....

சாம்பசிவம் மனிதரே இல்லையோ?

சரண்யா நேற்றுக் கேலி செய்தாளே, அதை அவர் நிரூபித்துக் கொண்டிருக்கிறாரே!

வந்தவர் யாரோ வெளியூர் மனிதர் போலிருக்கிறது. எங்கே போய் அவரைப் பிடித்து வந்திருக்கிறார்?

காப்பியை வைத்துவிட்டுத் திரும்பிய போது அவரைக் கவனித்தாள். கறுப்பும்

வெளுப்புமாய் நிரவிக் கிடந்த தலையில் முன் நெற்றி தலையிலும் பரவி இருந்தது. வாழ்க்கையைச் சற்று அதிகமாகவே அனுபவித்த அடையாளங்கள் முகத்தில் தெரிந்தன. கண்களில் ஒளி கூட சற்றுக் குறைந்து ஒரு மயக்க நிலை ததும்பிக் கொண்டிருந்தது.

"குழந்தைகளைக் காப்பாற்றினால் மட்டும் போறுது. என் மனைவியாயிருக்கணும்" என்று அசட்டுத்தனமாக ஹாஸ்யம் பண்ணினார். சாம்பசிவம் அட்டகாசமாகச் சிரித்தார்.

"நீங்க லேடீஸை எஞ்ஜாய் பண்றவர்னு கேள்விப் பட்டிருக்கேன். கவலையே பட வேண்டாம். அவ ஈடு கொடுப்பா."

அவள் உள்ளமெல்லாம் புன்னகை உள்ளே வந்து நின்ற போது சரண்யாவின் பார்வை அவளைக் குத்திற்று. 'நல்ல வரனாகக் கொண்டு வருவார்னு சொன்னியே இப்போ பார்த்தியா' என்று வாயால் கேட்காமல் தன் கண்களாலேயே கேட்டாள் அவள்.

"சரண்யா."

இடி முழங்கியது. ஆனால் கோடை இடியாக இல்லாமல் மாரி காலத்து இடி போலக் கொஞ்சம்ஈரம் கலந்திருந்தது.

'சரண்யா என்ன செய்யப் போகிறாள்' மகாலக்ஷ்மியை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்து விட்டு ஹாலை நோக்கி நடந்தாள் சரண்யா.

அவளுக்குத் துணையாக உடன் வர முயன்ற மகாலக்ஷ்மியை ஒதுக்கிவிட்டு "ஹாலுக்குப் போக எனக்கு வழி தெரியும்" என்றும் சொல்லி விட்டுப் போனாள்.

"இவரை நமஸ்காரம் பண்ணு."

பண்ணினாள்.

அவர் அவளை விழுங்கி விடுவது போல் பார்த்தார். அந்தப் பார்வையில் இரையைப் பேராவலுடன் பார்க்கும் புலியின் பசி இருந்தது.

சட்டென்று சாம்பசிவத்தின் பக்கம் திரும்பி "எனக்குப் பிடிச்சிருக்கு" என்றார் அவர்.

"எனக்குப் பிடிக்கல்லே." என்று சொன்ன சரண்யா அவரைப் பார்த்து "மாமா, வாழ்க்கைங்கறது தானம் இல்லே. எதிராளியை மகா கேவலமா நினைச்சு அவ கையேந்தி நிக்கிறதா மனசிலே தானா ஒரு பாவத்தை ஏற்படுத்திண்டு பிச்சை போட. அதுலே மனசுகள்ரெண்டும் சங்கமம் ஆகணும். அப்படி சங்கமம் ஆற ஒருத்தரைத்தான் நான் கல்யாணம் செஞ்சுக்கப் போறேன்" என்றவள் தொடர்ந்து. "அதனாலே என்னை மறந்துடுங்கோ" என்று சொல்லிவிட்டு அதே வேகத்தில் திரும்பி உள்ளே வந்தாள்.

ஹாலில் அந்த மனிதர் சாம்பசிவத்திடம் கூறிய சொற்கள் காதில் வந்து மோதின. "என்னை இங்கே அழைச்சுண்டு வந்து இப்படி அவமானப்படுத்தி யிருக்க வேண்டாம். 'ஒவ்வொரு ராத்திரியும் துணையைத் தேடாம நிரந்தரமா மனைவிங்கிற பேரிலே ஒரு துணையை ஏற்படுத்திக்கோங்களேன்னு' அந்தத் தரகர் சொன்னதாலே தான் வந்தேன். இந்த சமையல்காரி பெண்ணுக்கு வாய் ஜாஸ்தி. அவளை அடக்கி வையுங்கோ. அதை இப்படியே வளர்த்திண்டிருந்தா ஒரு நாளைக்கு உங்களை வீட்டிலேயிருந்து துரத்திட்டு அவா சொந்தமாக்கிண்டுடுவா, ஜாக்கிரதை!"

அவர் போகும்வரை காத்திருந்தசாம்பசிவம் "சரண்யா இங்கே வா"என்று அழைத்த கர்ஜனையில் அந்த ஹாலே அதிர்ந்தது.

சர்வ அலட்சியமாக வெளியே வந்த சரண்யா "எதுக்குக் கூப்பிடறேள்?" என்று கேட்டாள்.

"உனக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தால் நீ அவர் கிட்டே இந்தத் தத்துவம் பேசுவே."

"சில சமயங்களிலே தத்துவம் தானாகவே வந்துடறது." என்றாள் சரண்யா.

"தத்துவம் தானாவரதா?" என்று ஏகத்தாளமாகக் கேட்ட சாம்பசிவம், "இந்த வீட்டிலே நான் சொல்றதை அப்படியே கேட்டு அப்படியே நடக்கிறவாளுக்கு தான்இடம் உண்டு. மத்த பேருக்கு இடமில்லே. உன் அண்ணன் என்னை மதிக்காமே இந்த வீட்டை விட்டுப் போனான். அப்பவே அவனைத் தலை முழுகிட்டேன். இன்னிக்கு நீ என்னை மதிக்காமே — நான் கொண்டு வந்த வரனை— அந்த மனுஷரை அவமானப்படுத்தினே. இன்னியோட இந்த வீட்டுக்கும் உனக்கும் உள்ள சொந்தமும் விட்டுப் போச்சு. இது சத்திரம் இல்லே. கண்ட கண்ட நாயெல்லாம் தங்கறதுக்கு" என்று பெருங்குரலில் கத்தவும் ஒடுங்கிப் போனாள் மகாலக்ஷ்மி.

"இந்த அமிருதமான வார்த்தைகளை என்னிக்குக் கேக்கப் போறேனோன்னு நானும்



### கலப்படம்

உணவுப் பொருளில் கலப்படம் நாளுக்கு நாள் மிகுந்து வருவதைத் தடுக்க அரசினர் தகுந்த நடவடிக்கை எடுத்து வருகின்றனர். குடும்பப் பெண்களாகிய நாமும் மனம் வைத்தால் இக் கலப்படத்தை ஓரளவு தடுக்கலாம்.

(1) ரெடிமேட் சாம்பார்பொடி ஊறுகாய் முதலியவைகளை வாங்காமல் வீட்டிலேயே தயாரிப்பதன் மூலம் குதிரைச் சாணம், செங்கல் பொடி வயிற்றுக்குள் போவதைத் தடுக்கலாம்.

(2) காப்பிக் கொட்டையை வாங்கி வறுத்துப் பொடி செய்வதால் புளியங்கொட்டை, ஈச்சங் கொட்டையைத் தவிர்க்கலாம்.

(3) ரோஸ், கலர் முதலியவற்றைக் குடிக்காமல் தக்காளி, ஆரஞ்சு, திராட்சை இவற்றின் இயற்கையான சாற்றைக் குடிப்பதன் மூலம் சாக்கரீன், கலர்ப் பவுடர் வயிற்றுள் போய் கான்சர் வராமல் பிழைக்கலாம்.

(4) மலிவாகக் கிடைக்கும் எந்தப் பொருளையும் (தேயிலை, காப்பி) தெருவில் வாங்காமல், தரமான கடைகளில் மட்டுமே வாங்கலாம். - நி. செல்வமணி

காத்துண்டிருந்தேன். கேட்டாச்சு. எனக்கும் இனிமே இங்கே இருக்க இஷ்டமில்லே. இப்பவாவது மத்தவாளுக்குப் புத்தி வந்தால் சரி'' என்று சொல்லிவிட்டு உள்ளே சென்ற சரண்யா ஒரு சிறு கைப்பெட்டியுடன் வெளியில் வந்தாள்.

சட்டென்று குறுக்கே வந்த மகாலக்ஷ்மி, ''சரண்யா, நான் சொல்றதைக் கொஞ்சம் கேளும்மா'' என்று ஆரம்பிக்கவும், ''நீ சொல்றதைக் கேக்கற பொறுமை எப்பவோ போயிடுத்தும்மா. உன்னோட நன்றிக் கடனுக்கு இன்னொரு பலியா நானும் இந்த வீட்டிலேருந்து போறேன். அதுக்கப்புறமாவது நீ காட்டிண்டிருக்கிற இந்த நன்றிக்கு மதிப்பு கிடைக்கிறதா அப்படின்னு பார்க்கலாம்'' என்று சொல்லிவிட்டுச் சாம்பசிவத்தைத் திரும்பியும் பாராமல் வேகமாக ஹாலை விட்டுக் கடந்து வெளியேறினாள்.

தானாகச் சென்றவளைத் தடுக்க முயன்று அன்று தோற்றுப் போன மகாலக்ஷ்மி இன்றுஅவரால் வெளியேற்றப் பட்டுச் செல்லும் மகளை மீட்கவும் சக்தியற்றுப் போய் அந்த உண்மைகளைத் தாங்கும் திறனற்றுச் சாய்ந்தாள்.



**குறுக்கு வழி**

கணவரின் இதயத்தில் குறுக்குவழியில் சென்று குடியேற வேண்டுமா? அதற்குச் சுலபமான வழி இருக்கிறது. சுவையாகக் கணவனுக்குச் சமைத்துப் போடுங்கள். இதயத்தைச் சென்றடைவதற்கு நாக்கின் அனுமதி தேவை.

''குடும்பம் ஒரு கோயில்'' நூலிலிருந்து - தேன் வள்ளியம்மை

சரண்யா வீட்டை விட்டுப் போய் மூன்று மாதங்களுக்கும் மேலாகி விட்டன. மகாலக்ஷ்மி கிட்டத்தட்ட நடைப் பிணமாகவேமாறிப்போயிருந்தாள். அவளுடைய வாழ்க்கையில் எந்த அர்த்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. எந்தக் குறிக்கோளுமின்றி இறைவன் கொடுத்திருக்கும் உயிரை இயன்ற வரை காப்பாற்றிக் கொள்வதற்கு மட்டுமே உண்பதும் உடுப்பதுமாகத்தோன்றியது. இவ்விதம் ஒருவித இலக்கும் இன்றி வாழ்வதை விடச் சாவதே மேலானதாகத் தோன்றியது. அந்த மாதிரி சமயங்களில் அவள் தன்னையே தன்னிலிருந்து பிரித்து நிறுத்தி, சாம்பசிவத்தின் நிலையில் நின்று நடந்துபோன நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்க்கத் தொடங்கினாள்.

சாம்பசிவம்.

வாழ்க்கையில் அவர் என்ன மகிழ்ச்சியை அனுபவித்திருக்கிறார்? பழைய கால வழக்கப்படி வெகு சீக்கிரத்திலேயே திருமணம் நடந்து இருபத்தைந்து வயது முடிவதற்குள் இரண்டு குழந்தைகளுக்கும் தந்தையாகியதோடு மனைவியையும் இழந்து தனி மரமாக நின்றுவிட்டார் என்று கேள்விப்பட்டிருக்கிறாள்.

மூத்தவன்தான் ராகவன். பிஞ்சிலே பழுத்து வெம்பிப் போனவன். தகாத சினேகங்களால் தறிகெட்டு அலைந்தவன். ஆசையோடு அவர் கைப்பிடித்த மனைவி அகாலத்தில் மரணம் அடைந்ததால் ஏற்பட்ட துக்கத்தை அதிகப்படுத்தத்தான் அவனால் முடிந்தது. மனைவியின் நினைவுக்கு மதிப்புக் கொடுத்துப் பெண்ணாசையையே துறந்திருந்த அவருக்கு இப்படியொரு பிள்ளையா? என்று ஊரே வியந்தது.

இளையவள் பெண். பிறக்கும்போதே மனைவியின் உயிரைக் குடித்துவிட்டுப் பிறந்த அந்தப் பெண்ணிடம் சாம்பசிவத்துக்குப் பரிவு ஏற்படவில்லை. ஐந்து வயதில் ஏற்பட்ட குடல் நோய் மூன்று வருஷம் அவளை வாட்டிவிட்டு சாம்பசிவத்தின் மனத்தில் வேண்டிய அளவு வெறுப்பையும் அவருடைய பணத்துக்குச் செலவையும் வைத்துவிட்டு ஒரு வழியாக அவளுடைய உயிரைப் பறித்துக் கொண்டு சென்று விட்டது. அந்தப் பெண் பிறந்ததற்காக அவர் எப்படி சந்தோஷப்படவில்லையோ அதே போல் இறந்ததற்காகவும் துக்கப்படவில்லை.

மகன் தறிகெட்டு அலைவதைத் தடுக்க ஒரு திருமணத்தைச் செய்துவைத்துப் பார்க்கலாம் என்று அவர் நினைத்தபோதுதான் அவர் கண்களில் மகாலக்ஷ்மி சிக்கினாள். அவள் வந்த பிறகாவது மகன் திருந்துவான் என்று எதிர்பார்த்தவருக்கு ஏமாற்றம்தான் கிடைத்தது.

ராகவன் மாறவே யில்லை.

எப்போதோ ராகவன் வீட்டுக்கு வரும் நேரங்களில் சிரமமில்லாத உறவாக அவள் கிடைத்தாள் என்பதைத் தவிர வேறு மாற்றம் ஏதும் இல்லை.

மகாலக்ஷ்மியின் சாந்தமான சுபாவம் அவனுக்குச் சாதகமாகவே இருந்தது. கணவனைத் தெய்வமாக மதித்துப் போற்றிய பெண்மையை அந்தத் தெய்வம் தனக்குத் தொண்டூழியம் செய்யும் அடிமையாக மட்டுமே ஏற்றுக் கொண்டிருந்தது.

மகாலக்ஷ்மி யாலும் ராகவன் திருந்தவில்லை என்று உணர்ந்ததுமே சாம்பசிவத்தின் குணம் மாறிவிட்டது. மகாலக்ஷ்மியை மருமகளாக்கிக் கொண்டதன் மூலம் வேண்டாத உறவுகளை ஏற்றுக் கொண்டதாக உணர ஆரம்பித்த சாம்பசிவத்தின் மனம் நாளுக்கு நாள் பாறையாக மாறிக் கொண்டிருந்தது. அதில் ஈவு, இரக்கம் என்பன்வ யாவும் அடியோடு வற்றிப் போயின. அந்த நிலையில் அவள் பெற்ற அந்த இரு குழந்தைகளின் மேலும் அன்பு ஏற்படுவதற்குப் பதிலாக வெறுப்பே ஏற்பட்டு நிரந்தரமாக மனத்தில் தேங்கி விட்டது.

ராகவன் வீட்டையே மறந்து போனதும் அவனுடைய மனைவியும் குழந்தைகளும்

சுமையாகத் தோன்ற அவர் தம்முடைய கோபத்தையும் வெறுப்பையும் பல விதத்திலும் அவர்கள் மீது காண்பிக்கலானார்.

அவர் தம் இளம் வயதில் ஆரம்பித்த தொழிற் கம்பெனி அவரது திறமையால் நன்றாக வளர்ந்து கொண்டு வந்தது. வாழ்க்கையில் தோல்வி மேல் தோல்வியாக ஏற்பட்டு அவர் மனம் பாறையாகி இறுகிக்கொண்டிருந்த சமயம் அவருடைய தொழில் மலை போல் வளர்ந்து வர்த்தக உலகில் ஒரு முக்கியமான இடத்தைப் பிடித்துக் கொண்டது. அவர் வர்த்தகத் துறையில் மதிக்கத் தகுந்த ஒரு முக்கிய மனிதராக விளங்கினார். அவருடைய திறமை அவருக்குப் பெரும் புகழையும் பணத்தையும் சம்பாதித்துக் கொடுத்தது. அவருடைய வாழ்வின் துன்பங்கள் கடந்த காலம் என்னும் இருளில் மறைந்து போக ஒளி மிகுந்த நிகழ்காலத்தில் அவர் நேர்மையும் திறமையும் ஒருங்கே கொண்ட ஒரு முக்கிய மனிதராகத் திகழ்ந்தார்.

அவரைத் தேடிச் செல்வம் குவிந்தது. வசதிகள் பெருகின. தன்னுடைய அந்தஸ்தை நிலை நிறுத்த அவர் பெரிய பங்களா வாங்கினார். கார் வாங்கினார். வேலைக்காரர்களை நியமித்தார். அந்த பங்களாவில் இருக்க மகாலக்ஷ்மியையும் குழந்தைகளையும் அனுமதித்தார் என்பதைத் தவிர அவர்களுக்கு வேறு எவ்விதத்திலும் சலுகை கொடுக்கவில்லை. அவர்கள் மீது அவருக்கு ஏற்பட்டிருந்த வெறுப்புக் குறையவில்லை.

அன்று காலை உணவை முடித்துக்கொண்டு முன் ஹாலுக்கு வந்தார் சாம்பசிவம். அவருக்குத் தேவையான உடைகள் எடுத்துவைக்கப்பட்டிருந்தன. ஷூ சோபாவுக்கு அருகில் கொண்டுவந்து வைக்கப்பட்டிருந்தது. ஆனால் அவைகளைக் காலால் ஒதுக்கி விட்டு சோபாவில் சாய்ந்து கொண்டார் அவர்.

அவர் அலுவலகத்துக்குக் கிளம்பாததைக் கண்ட மகாலக்ஷ்மிக்கு வியப்பாக இருந்தது. காரணம் கேட்பதற்குத் தைரியம் வரவில்லை. மரியாதையாலும் அவள் மௌனமாக இருந்தாள்.

## ஏழு புடவைக்குள் இளவரசி!

டெரிலின், டெரிகாட்டன், நைலான் என்றெல்லாம் இன்று மெல்லிய துணிகளுக்கு நாகரிகப் பெயர்கள் வழங்குகிறதே...இது ஔரங்கசீப் காலத்திலும் உண்டாம்! ஆனால் பெயர்கள்தான் வெவ்வேறாக இருந்தது. மிகவும் மெல்லிய மஸ்லின் துணிகளுக்கு இந்தத் துணியின் அபூர்வ மென்மையைக் கருதி. பல அழகிய பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள். அவை முறையே இரவுமணி, ஓடும் நீர், நெஞ்சத் காற்று என்பவை போன்றன.

டாக்கா மஸ்லினின் ஆச்சரியகரமான மென்மையைக் குறிப்பிடும் பல சுவையான கதைகளும் உண்டு. மொகலாய சக்கரவர்த்தியான ஔரங்கசீப் ஒரு நாள் ராஜ சபையில் தன் மகள் ஆடையின்றி வருவதைக் கண்டு திடுக்கிட்டு அவளைக் கடிந்து கொள்ள, மகள் அதை மறுத்துத் தன் உடம்பில் ஒன்றின் மீது ஒன்றாக ஏழு மஸ்லின் உடைகள் தரித்திருப்பதாகக் கூறினாளாம்!

ஆதாரம்: கல்கியின் ''கைராட்டையும் அதன் புத்துயிரும்''

தகவல்: - லலிதா கந்தசாமி



''மகாலக்ஷ்மி.''

சாம்பசிவத்தின் அப்போதைய நிலையில் கூட அவளை அழைத்த விதத்தில் எந்த மாறுதலும் இல்லை.

'என்ன' என்பது போல் மௌனமாக வந்து எதிரே நின்றாள் அவள்.

''முனியனைக் கூப்பிடு.''

மகாலக்ஷ்மி சென்ற சற்று நேரத்தில் முனியன் வந்தான்.

''முனியா, வக்கீல் பராங்குசத்தைப் போய் பாரு. அவர் முக்கியமான தஸ்தாவேஜு கொடுப்பார். அதை ஜாக்கிரதையாகக் கொண்டு வா'' என்று சொல்லிவிட்டுப்போன் அருகே சென்று டயல் பண்ணினார்.

அவர் பேசிவிட்டு வந்த போது மகாலக்ஷ்மி அவருடைய உத்தரவுக்குக் காத்து நிற்பதைப் பார்த்தார். கோபம் வெடித்தது.

காரணமில்லாமல் சொற்கள் பிறந்தன. ''இங்கே எதை வேடிக்கை பார்க்கக் காத்துண்டு நிக்கறே. இவன் எப்ப சாவான், இந்த வீட்டையும் சொத்தையும் பிள்ளை கிட்டே ஒப்படைக்கலாம்னுட்டா? இங்கே உனக்கு அதுக்கு ஒண்ணும் மிஞ்சாது. எல்லாத்தையும் கடன்காரன் கொண்டு போகப்போறான். இந்த வீடு போனா இந்தச் சௌக்கியங்கள் எல்லாமும் போயிடும். அதனாலே இப்பவே நீ உன்னோட தத்தாரிப் பிள்ளை கிட்டயோ, இல்லாட்டா வீட்டை விட்டுப் போனானே, அந்த ஓடுகாலிப் பெண் கிட்டயோ போயிடு.''

மகாலக்ஷ்மி அதிர்ந்து போனாள். இவர் சொல்வது நிஜம்தானா? இவருடைய நிலை அப்படியா மாறிவிட்டது? கடன் வாங்கும் படி அப்படி என்ன அவசியம் வந்துவிட்டது? என்று நினைத்தாள் மகாலக்ஷ்மி.

ஆனால் அவளுக்குத் தொழில் துறையைப்பற்றி என்ன தெரியும்? சில மாதங்களாகவே தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் நடந்து. அதனால் உற்பத்தி குறைந்து போய்விடவும் அவர் வேலை நிறுத்தத்தைச் சமாளிக்கவும் குறிப்பிட்டபடி குறித்த நேரத்தில் சாமான்களைச் சேர்க்கவும் புதிய ஆட்களை வேலைக்குச் சேர்த்து அதனால் நேரிட்டு விட்ட குழப்பம்

பெரிய தகராறுக மாறி, புதிதாக வந்தவர்களுக்கும் பழைய தொழிலாளர்களுக்கும் இடையே பெரிய சண்டையும் கைகலப்புமாக உருமாறியது. போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்திக் கலகத்தை அடக்கிச் சிலரைக் கைது செய்து ஜாமீனில் விடுவித்து வழக்கும் பதிவு செய்து விட்டனர்.

தொழிலாளர் வழக்கு மன்றத்தில் வழக்கு நடந்தது. கடைசியாக, பாதிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு நஷ்ட ஈட்டையும் கொடுத்து, வேலைநிறுத்தம் நடந்த நாட்களுக்குச் சம்பளம், போனஸ் முதலியன கொடுக்க வேண்டும் என்றும் தீர்ப்பாகியது.

என்னதான் பெரிய தொழில் வர்த்தகப் பிரமுகராயினும் உடனடியாக அவ்வளவு பெரிய தொகையைக் கட்ட அவரால் முடியாமல் போகவே தன்னுடைய நேர்மையைக் காப்பாற்ற தன்னுடைய சொத்துக்கள் யாவற்றையும் விற்றுவிட அவர் முடிவு செய்தார். இந்நிலையில் தொழிற்சாலையைத் தொடர்ந்து நடத்துவதா வேண்டாமா என்ற முடிவு செய்ய சட்ட ஆலோசனைக்காக பராங்குசத்தை அணுகினர். அவர்தொழிற்சாலை சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளைப் பார்த்து முடிவு சொல்வதாகச் சொல்லியிருந்தார். தொழிற்சாலையைத் தொடர்ந்து நடத்துவதாக இருந்தாலும் தற்காலப் பிரச்னைகள் அவரைச் சிந்திக்க வைத்தன. அவைகளை எதிர்நோக்கிச் சமாளிப்பது இந்த வயதான காலத்தில் அவருக்குச் சிரமமாகத் தோன்ற ஆரம்பித்திருந்தது.

''போயிடு'' என்ற வார்த்தை கொடுத்த வேகம் மகாலக்ஷ்மியை அவரை நிமிர்ந்து பார்க்கச் செய்தது.


மனிதன் பார்வையை மட்டுமே பெற்றிருக்கிறான். பெண் உள்ளுணர்வையும் பெற்றிருக்கிறாள்.
- அறிஞர் விக்டர் ஹியூகோ

''நீங்க இதே வார்த்தையை முன்னாலும் ஒரு தடவை சொல்லி யிருக்கேள். ஆனா நான் போகல்லே. அன்னிக்கு இந்தப் பங்களா வாசத்தை அனுபவிக்கிறதுக்காகத்தான் நான் போக விரும்பல்லேன்னு நீங்க நினைச்சிருக்கலாம். ஆனா இன்னிக்கும் நான் போகப் போறது இல்லே. இதுக்கும் நீங்க எப்படி நினைச்சாலும் சரி'' என்று சொன்ன மகாலக்ஷ்மி ஷூவை எடுத்துக்கொண்டுபோய் பழைய இடத்தில் வைத்தாள். உள் அறை நோக்கிப் போனாள்.

சாம்பசிவம் சிந்தித்தார். மகாலக்ஷ்மியை மேலும் அங்கு தங்கச் செய்வது எது என்பது அவருக்கு விளங்கவில்லை.

**கா**லங்கள் மாறிக் கொண்டிருந்தன.

பங்களா, கார், தொழிற்சாலை எல்லாம் போய்விட்டன. ஒரு சிறிய வீட்டில் சாம்பசிவத்தின் பணிவிடைகளைச் செய்துகொண்டு தனது பொழுதுகளை மகாலக்ஷ்மி கழித்துக் கொண்டிருந்தாள். அவளைப் போலவே விஸ்வாசமுள்ள வேலைக்காரனான முனியன் மட்டும் அவர்களுடன் இருந்தான்.

அன்று எங்கேயோ வெளியில் போய்விட்டு வந்த முனியன் மகாலக்ஷ்மியிடம் தனியாகச் செய்தி சொல்லிவிட்டுப் போனான். அதிலிருந்து ராகவன் நகரத்தின் புறப் பகுதியில் தனியாக ஒரு வீட்டில் வசித்து வருகிறான் என்பது தெரிந்தது.

'ஏன் அவர் தனியாக இருக்கிறார்? அவர் தேடிச் சென்ற உறவுகள் என்னவாயின' என்று சிந்தித்து ஒன்றும் புரியாமல் குழம்பினாள் மகாலக்ஷ்மி.

''முனியா, அவரை வீட்டுக்கு வரச் சொன்னயா?'' என்று கேட்டாள்.

''சொன்னேன் அம்மா. ஆனா அவர் வர மாட்டேன்னுட்டாரு.''

''ஏன்?''

''ஐயாவைப் பார்க்க அவருக்குப் பயமாயிருக்காம். 'அப்பா அப்பவே என்மேல் ரொம்பக் கோபமா இருந்தார் முனியா. இத்தனை வருஷம் கழிச்சு நான் எந்த முகத்தோடே அவரைப் பார்க்கிறது. வீட்டுக்கு வந்தேன்னாக்கூட அவர் என்னை ஏத்துக்க மாட்டாரு'ன்னு ரொம்ப வருத்தமா சொன்னாரும்மா.''

அன்று பகல் சாம்பசிவம் உணவருந்தி விட்டு இளைப்பாறிக் கொண்டிருந்தபோது ராகவனை முனியன் சந்தித்த விஷயத்தை அவரிடம் சொன்னாள் மகாலக்ஷ்மி.

இவ்வளவு அனுபவங்கள் ஏற்பட்ட பிறகும்கூட சாம்பசிவத்தின் குணம் மாறவில்லை.

''அந்தத் தறிகெட்ட பயலை நான் பார்க்கவே இஷ்டப்படலே'' என்று சொல்லி விட்டார்.

யாருக்காகச் சொந்தப் பிள்ளையையும் பெண்ணையும் கூட உதறிவிட்டு அவருடன் தங்கச் சம்மதித்தாளோ அந்த அவருடைய பிள்ளையைக்கூடத் தன் வீட்டில் ஏற்க மறுக்கும் அவருடைய மனம் ஏன் இப்படி வறண்டு போயிருக்கிறது? அதில் நீர் ஊற்றே கசியாதா? அந்த மனத்தில் ஊற்றுக் கசிய அவள் என்ன செய்ய வேண்டும்? மகாலக்ஷ்மி சிந்தித்தாள்.

வயதாகிவிட்ட – பிறர் உதவி இல்லாமல் தனியாக இருக்கவும் முடியாத இந்த நிலையில் அவரை விட்டு அவள் பிரிந்து சென்றால் இவ்வளவு நாட்களும் அவள் போற்றி வந்த கொள்கை அர்த்தமற்றதாகிவிடும்.

தவறு செய்வது மனித இயற்கை. அதை மன்னித்து ஏற்றுக் கொள்ளும்பெருந்தன்மை எல்லோருக்கும் வந்துவிடுவதில்லை. என்ற

உண்மையை எண்ணிப் பார்த்து மனம் கசந்தாள் மகாலக்ஷ்மி.

ராகவனுடைய போக்கினால் அவள் இழந்ததைவிட அவர் என்ன அதிகமாக இழந்துவிட்டார். வாழ்வின் மிக முக்கியமான இந்த இருபது வருடங்களை அவள் துணையின்றியே கழித்திருக்கிறாள். அப்படியிருந்தும் அவனை வரவேற்கவே காத்திருக்கிறாள். இப்போதைய நிலைமையில் ராகவன் வீட்டுக்கு வரவே பயப்படுகிறான்.

இவரோ அவனைப் பார்க்கவே மறுக்கிறார். தள்ளாத வயதில் அவரைத் தனியே விட்டுச் செல்ல அவளுக்கும் மனம் வரவில்லை. ராகவன் இதே நகரத்தில்தான் — அதுவும் தனிமையில் இருக்கிறான் என்பது தெரிந்த பின்னரும் அவனைப் பார்க்காமல் இருப்பது ஒவ்வொரு நாளும் அவளைத் துன்புறுத்திக் கொண்டே இருந்தது. சாம்பசிவத்தின் முன்னே மகாலக்ஷ்மி தளர்ந்து போனாள். அவளுக்கு எந்த வழியும் புலப்படவில்லை.

அன்று வழக்கம் போல் பூஜையை முடித்துக் கற்பூர ஹாரத்தியும் காட்டி மந்த்ர புஷ்பம் போட்ட பின்னர் ''மகாலக்ஷ்மி, மங்கள கீதம் பாடி ஆரத்தி எடு'' என்று உத்தரவிட்டு நகர்ந்து கொண்டார் சாம்பசிவம்.

அவருடைய உத்தரவை நிறைவேற்றி விட்டு அம்பிகைக்கு நமஸ்கரித்து விட்டு வழக்கம் போல் அவரையும் நமஸ்கரித்தாள் மகாலக்ஷ்மி.

''தீர்க்க சுமங்கலி பவ'' சாம்பசிவம் ஆசீர்வதித்து விட்டு முன் கூடத்துக்குச் சென்று விட்டார்.



புடவையில் வைத்துத் தைக்கும் ஜம்கியை ஒரு ரப்பர் பந்தில், ஒரு குண்டூசியையும், ஒரு ஜம்கியையும் வைத்து, பந்து முழுவதும் குத்தினால் அதை டேபிள் மேல் Paper weight ஆக வைத்தால் அழகாக இருக்கும். - மாலா

ராகவனைக் கைப்பிடித்த இத்தனை வருடங்களில் சாம்பசிவத்திடமிருந்து ' அவள் பெற்றுவரும் ஒரே ஒரு சுபமான சொல்-- ஆசீர்வாதம் இது ஒன்றுதான். இது ஒன்றால்தான் அவள் அவ்வளவு துன்பங்களையும் தாங்கி வந்திருக்கிறாள். 'இதற்கு என்ன அர்த்தம்?' தன்னை இவ்விதம் வாய் நிறைய ஆசீர்வதிக்கும் சாம்பசிவம் ராகவனைப் பார்க்க மறுப்பானேன்? — நெஞ்சம் கலங்க விடையறியாமல் கை கூப்பி நின்றாள் மகாலக்ஷ்மி. அவளுடைய உள்ளம் நெகிழ்ந்து கண்கள் மின்னின. அவளுடைய கலங்கிய கண்களினூடே புவனேஸ்வரியின் அருள் முகம் சிரித்தது. பாசத்தையும் அங்குசத்தையும் இரு கைகளில் தாங்கி மற்ற இரு கரங்களாலும் அபய வரதமாக அவள் பாலித்துக் கொண்டிருக்கும் அம்பிகை தன்னை ஏன் இப்படிச் சோதிக்கிறாள்?

அவளுடைய செய்கை எதுவும் மானிட மனத்துக்குப் புரியாதுதான். ஆயினும் அவளுடைய சோதனைகளைத் தாங்கிக் கொள்ளத் தன் மனத்தால் முடியவில்லையே.

''மகாலக்ஷ்மி.''

சாம்பசிவத்தின் குரல் அவளுடைய மோனத் தவத்தைக் கலைக்க அவசரமாக எழுந்தவளின் நெஞ்சில் ஏதோ ஒன்று பந்தாகச் சுருட்டி அடைக்க நிலையிழந்து கீழே சாய்ந்தாள்.

சத்தம் கேட்டு ஓடிவந்த முனியன்'' அம்மா அம்மா'' என்று கூவுவதைக் கேட்டு சாம்பசிவம் பூஜை அறைக்கு வந்து பார்த்தார். தன் நினைவற்று விழுந்து கிடக்கும் மகாலக்ஷ்மியைக் கண்டதும் ஒரு நிமிஷம் திகைத்துப் போனார். அதுநாள்வரையில் அவளை ஒரு யந்திரமாக நினைத்து வந்தவருக்கு இப்போதுதான் அவளும் ஒரு மனிதப் பிறவி என்ற எண்ணம் தோன்றியது.

''முனியா, அம்மாவைக் கொண்டு வந்து கூடத்தில் படுக்கவை'' என்று பணித்தார். ''ஓடிப்போய் டாக்டரை அழைச்சிண்டு வா''

அவளுடைய பொறுமையைப் பார்த்து, அவளை ஒரு தெய்வமாகவே கருதி வந்த முனியன் தயக்கத்தோடு அந்த பூஜை அறைக்குள் நுழைந்து ஒரு பூவைத் தூக்குவது போல் அவளை மிருதுவாகத் தூக்கிக் கொண்டு வந்து முன் கூடத்தில் சோபாவின் மீது படுக்க வைத்தான். நெஞ்சம் பதற டாக்டரை அழைத்து வர ஓடினான்.

மகாலக்ஷ்மியை நன்றாகப்பரிசோதித்த டாக்டர் ஏதோ சில மருந்துகளை எழுதிக் கொடுத்தார். ஒரு இன்ஜெக்ஷனும் போட்டார். பிறகு சாம்பசிவத்தைத் தனியாக அழைத்து ''இன்னும் கொஞ்ச நேரத்திலே இந்த மயக்கம் தெளியும். ஆனாலும் அவங்க இதயம் ரொம்ப .பலவீனமா இருக்கு. அவங்க மனசுலே ஏதோ ஏக்கம் இருக்கும்னு நினைக்கிறேன். அதைத் தெரிஞ்சு தீர்த்து வையுங்க'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

'மனசுலே ஏக்கம்' என்னவாயிருக்கும்?

தனக்கென்று ஓர் எண்ணம் இருப்பதாக மகாலக்ஷ்மி இன்றுவரை காட்டிக்கொண்டதே இல்லை.

குமார், சரண்யா இருவருமாவது அவ்வப்போது தங்களது எண்ணங்களைச் சொல்லியிருக்கிறார்கள்.

இவ்விதம் நினைத்ததும் 'ஒருவேளை குமார் சரண்யாவும் அவளைப் பிரிந்து சென்றதுதான் அவள் மன ஏக்கத்துக்குக் காரணமோ, என்ற எண்ணம் அவர் மனத்தில் தோன்ற அவ்விதமாயின் அதைத் தீர்க்க என்ன வழி என்று அவர் சிந்திக்க ஆரம்பித்தார்.

தன் மனத்தை அலச ஆரம்பித்தார் சாம்பசிவம். குமார் மீதும் சரண்யா மீதும் அவருக்குத் தனியாக எவ்விதக் குற்றமும் தெரிய

வில்லை. அவர்கள் இருவரும் அவரைப் பிரிந்து செல்லும் வரையில் கண்ணியமாகவும் மரியாதையாகவும்தான் நடந்து கொண்டு வந்திருக்கிறார்கள் என்கிற உண்மை அவருக்கு உறைத்தது. எந்த நிலையிலும் அவரை எதிர்த்துப் பேச மகாலக்ஷ்மி அனுமதித்ததில்லை. அதனால்தான் குமார் அவரை ஒரு வார்த்தைகூட எதிர்த்துப் பேசாமலே விலகிச் சென்று விட்டான்.

சரண்யா செய்தது சற்று அதிகப்படியானதுதான். ஆனாலும் அதற்கும் காரணம் என்ன?

தன்னுடைய மகன் ராகவன் தனக்கு அடங்கவில்லை என்பதால் தன்னுள் ஊறிப் படர்ந்திருந்த கோபமும் வெறுப்பும் இலக்கின்றி அவள் மீது பாய்ந்ததுதான் காரணம் என்பதைச் சாம்பசிவம் இப்போது உணர்ந்தார். குமாராவது பம்பாயில் இருக்கிறான் என்பது வரையில் தெரிந்திருந்தது. சரண்யா எங்கே போனாள் என்பது கூடத் தெரியாது. அவ்வளவு தூரம் அவர்கள் மீது தம் மனத்தில் படர்ந்திருந்த வெறுப்பை நினைத்த சாம்பசிவம் வெட்கப்பட்டார்.

''அம்மா முழிச்சுக் கிட்டாங்க.''

முனியன் அறிவித்ததைத் தொடர்ந்து வாசல் அறையிலிருந்து கூடத்துக்கு வந்தார் சாம்பசிவம்.

அந்த நிலையிலும் அவரைக் கண்டதும் எழுந்திருக்க முயன்றாள் லக்ஷ்மி.

''எப்படி இருக்கு?''

''தேவலை. தலையைச் சுத்தறாப்பலே இருந்தது. அப்புறம் ஒண்ணுமே தெரியல்லே.'' தயங்கித் தயங்கி வெளி வந்தன வார்த்தைகள்.

''உனக்கு என்னவேணும்?''

''ஒண்ணும் வேண்டாம்.''

''டாக்டர் சொன்னார், உனக்கு ஏதோ மனசு ஏக்கம்னு. என்ன ஏக்கம்? சொல்லு.''

மகாலக்ஷ்மியின் இதயம் வியப்பால் ஒரு முறை விரிந்து அடங்கியது.

சாம்பசிவமா கேட்கிறார்? அவருக்கு இப்படிக்கூடக் கேட்கத் தெரியுமா என்ன?

அவரே இப்படிக் கேட்டிருக்கும்போது தன் மன விருப்பத்தை அவரிடம் சொல்லி விட வேண்டியதுதான்.

''உங்க பிள்ளையை நான் பார்க்கணும்.''

''சரி. போய்ப் பார்த்துட்டு வா. முனியனை அழைச்சிண்டு போ.''

''இல்லே. நான் அப்படிக் கேக்கல்லே. நான் அவரைத் தனியாப் போய்ப் பார்த்துட்டு வரணும்னு நினைக்கல்லே. அவர் இங்கே வரவும், இனிமே இங்கேயே இருக்கறதுக்கும் நீங்க அனுமதிக்கணும். அப்போ முனியன் போய் அவரை அழைச்சிண்டு வருவான்.''

''நான் அவனைப் பார்க்க இஷ்டப் படல்லே. அவனைப் பார்க்கணும்கிற மன ஏக்கம் ஒண்ணும் எனக்குக் கிடையாது.''

மகாலக்ஷ்மியிடம் உடம்பில் பலமில்லாத போனாலும் உள்ளத்தில் பலம் வந்தது. அது வார்த்தைகளிலும் தொனித்தது.

அவ்வளவு நாட்களும் அவர் எதிரில் நின்று ஒரு வார்த்தைகூட அவரை மறுத்துப் பேசியறியாதவள் இன்று பேசினாள்.

''இவ்வளவு வருஷமா நான் உங்ககிட்ட எதுவுமே எனக்காகக் கேட்டதில்லே. குமாரும் சரண்யாவும் என்னை விட்டுப் பிரிஞ்சு போனபோது கூட நான் அவாளோடே போக நினைக்கல்லே. அதுக்கு நீங்க பல காரணங்கள் நினைக்கலாம். ஆனா என்னாலே ஒரு காரணத்தைத்தான் நினைக்க முடிஞ்சுது. உங்க பிள்ளையையும் நீங்க பிரிஞ்சு, அவரோட செயலாலே ஏற்பட்ட வேதனைகள்தான் உங்கள் வார்த்தைகளிலே கோபமாகவும் ஆத்திரமாகவும் வெளிப்பட்டிண்டிருக்குன்னு நான் புரிஞ்சுண்டிருந்தேன். அதே சமயம் என்னோட இழப்பையும் வேதனையையும் நீங்க புரிஞ்சுக்கல்லேயேன்னு எனக்கு வருத்தமாகவும் இருந்தது. உடல் தளர்ந்து போயிருந்த உங்களோட மனசுலே ஏற்படற வேதனைகளுக்கு ஒரு வடிகாலா இருக்கவேண்டியது உங்க பிள்ளையோட எனக்கு நீங்க ஏற்படுத்தி வைச்ச சொந்தத்தாலே ஏற்பட்ட என் கடமைன்னு நான் தீர்மானிச்சேன். அதனாலேதான் குமார் என்னைக் கூப்பிட்டபோதும் சரி, சரண்யா கிட்டப் போகச் சொல்லி நீங்க கோபப் பட்டபோதும் சரி, நான் போகல்லே. என்னோட அந்த உரிமையை மட்டும் நான் இழக்க விரும்பல்லே. இப்போதும் அதே உரிமையாலேதான் கேக்கறேன். உங்களோட பிள்ளை இங்கே வரதுக்கும் இனிமேல் உங்களோடேயே இருக்கறதுக்கும் நீங்க அனுமதி தரணும். உங்க ரெண்டு பேரையும் சேர்த்துப் பார்த்து அதுனாலே உங்க மனசுலே ஏற்படற அமைதியைப் பார்க்கணுங்கிறது தான் என் ஆசை.''

சாம்பசிவம் பதில் சொல்லவில்லை. அவ்வளவு நேரமாக வழக்கத்துக்கு விரோதமாகப் பேசிய ஆவேசமான பேச்சினால் மகாலக்ஷ்மி மறுபடியும் மயக்கம் அடைந்தாள்.



**பெண்களைப் பற்றிய ஆராய்ச்சி !**

60 ஆண்டு காலமாக 3000 பெண்களின் வாழ்க்கைப் பிரச்னைகளை ஆராய்ந்த சிக்மண்ட் பிராய்டின் மாணவர் ஐஸ் கூறுவதாவது :

✱ பெண்கள் ஆண்களை விடத் திடமானவர்கள்.

✱ பெண்கள் பலவீனமானவர்கள் என்று சொல்வது மிகவும் அறிவிலித்தனமாகும்.

✱ பெண்களிடத்தில் எப்போதும் எச்சரிக்கையாகவே இருங்கள்! -தேன். வள்ளியம்மை

"சரண்யா இங்கே வா. இந்த விளம்பரத்தைப் பார்த்தியா" மோகன் அழைத்த குரலின் அவசரத்தால் கை வேலையை விட்டு விட்டு வந்த சரண்யா அவன் காட்டிய விளம்பரத்தைப் படித்தாள்.

'குமார், சரண்யா,

நீங்கள் இருவரும் இருக்கும் இடம் எனக்குத் தெரியவில்லை. கடந்த சில மாதங்களாக மகாலக்ஷ்மி படுத்த படுக்கையாக இருக்கிறாள். அவளை நீங்கள் தெய்வமாகக் கருதுவது உண்மையானால் கீழே கண்ட விலாசத்துக்கு வரவும். —சாம்பசிவம்.

கீழே முகவரி கொடுக்கப்பட்டிருந்தது.

"உடனே போகணும்" என்று அவசரப்பட்டாள் சரண்யா.

"அன்னிக்கு வீட்டை விட்டு வந்தபோது இல்லாத அக்கறை இப்போ வந்துடுத்தாக்கும்" என்று கேலி செய்தான் மோகன்.

"என்ன அண்ணா விஷயம்?" என்று கேட்டாள் அப்போது அங்கே வந்த உஷா. அவன் விளம்பரத்தைக் காண்பித்தான்.

"உடனே ரெண்டு பேரும் புறப்படுங்கோ" என்று உஷாவும் அவசரப்படுத்தினாள்.

"நீயும் வாயேன் உஷா."

"நான் குமாரோட வரேன். அன்னிக்கு சரண்யா வீட்டை விட்டு வந்தபோதும், எற்கனவே குமார் கேட்டுக் கொண்டிருந்ததனால்தான் நேரே நம்ம வீட்டுக்கு அழைச்சிட்டு வந்தேன். அவர் வராமல் நான் அங்கே போய் யார்னு சொல்லி அறிமுகப்படுத்திக்கிறது?"

"அவனுக்கு மனைவியா வரப்போறவன்னு தான் சொல்லிக்கணும்."

"ஐயோ, சாம்பசிவம் எப்படி ட்ரீட் பண்ணுவாரோ" என்று தோளைக் குலுக்கினாள் உஷா.

"சரி. நாமெல்லாம் ஒண்ணாவே போகலாம். குமாருக்குக் கால் போட்டுப் பேசி அப்புறமா முடிவு பண்றேன்."

'கால்' கிடைத்தது. செய்தியைக் கேட்டதும் பதறிப்போனான் குமார். உடனே பிளேட்டில் வருவதாகச் சொன்னான்.

மீனம்பாக்கம் விமான நிலையம்.

குமாரை எதிர்பார்த்து மூன்று ஜோடிக் கண்கள் காத்திருந்தன.

பரபரப்புடன் இறங்கி வந்த குமாரை எதிர்கொண்டான் முனியன்.

"முனியா...."



**பலன் தரும்**
**யோசனை.. யோசனை...**

"இரண்டு 500 மில்லி கிராம் எடையுள்ள மாத்திரைகளின் பெயர் "பரிகல்ப". இவை இரண்டையும் காலையில் ஒன்றும் மாலையில் ஒன்றும் மணமான பெண்கள் தங்கள் மாதவிடாய் காலத்தில் மட்டும் தொடர்ந்து 6 மாதங்கள் உட்கொண்டால் 4 வருட காலத்திற்குக் கருத்தரிக்காது. இதனால் எந்தவிதமான பின் விளைவுகளும் ஏற்படாது என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். "பரிகல்ப" என்ற இந்த ஆயுர்வேத மருந்தை அண்மையில் கண்டு பிடித்துள்ளனர். இம் மாத்திரையின் விலை ஒரு பைசாதான்.. ●

-"இந்தியன் எக்ஸ்பிரஸ்" இதழிலிருந்து - தொகுப்பு: எஸ். தேவாதிராஜன்

"ஆமாம் ஐயா. நான்தான். தினமும் இங்கே வந்து பாக்கறேன். என்னிக்காவது நீங்க வரமாட்டீங்களான்னு நப்பாசை."

"உனக்கு எப்படித் தெரியும் முனியா, நான் வருவேன்னு?"

"பெரிய ஐயா எழுதிக் கொடுத்த விளம்பரத்தை அச்சுக்குக் கொண்டு போய்க் கொடுத்ததே நான்தானுங்களே. 'குமார் வராம இருக்க மாட்டான் முனியா. மீனம்பாக்கத்துக்குப் போ! என் மேலே கோபமிருந்தா அதையெல்லாம் மறந்துடச் சொல்லு' அப்படின்னு ஐயா சொல்லி அனுப்பினாருங்க."

"அண்ணா..."

"சரண்யா" என்று அவளை அணைத்துக் கொண்ட குமார் "மோகன், நான் உனக்கும் உஷாவுக்கும் ரொம்பக் கஷ்டத்தைக் கொடுத்திட்டேன் இல்லே" என்று கேட்டான்.

"இல்லே, இல்லே. கல்யாணத்துக்கப் புறம் மனைவியா பொறுப்பாப் பார்த்துக் கொள்ள வேண்டிய உரிமையை முன்னாலே கொடுத்தே அவ்வளவுதான். இப்போ இருக்கிற நிலைமையைப் பார்த்தா உன்னோட தாத்தா சாம்பசிவம் மனசு மாறிட்டார்னு தெரியறது. அவரோட ஆசீர்வாதத்தோடேயே கல்யாணத்தை முடிச்சுடலாம்."

"ஐயா, நீங்க எல்லாம் ஒண்ணா வாங்க. நான் முதல்லே போறேன். பெரிய ஐயா சொல்லியிருக்கிறபடி உங்க அப்பாவைப் பார்த்து விவரம் சொல்லி அழைச்சிகிட்டு வரேன்" என்று சொல்லி விட்டு அவர்களைப் பிரிந்து சென்றான் முனியன்.

**ம**காலக்ஷ்மி இணைறிக் கொண்டிருந்தாள்.

காலையில் மறுபடியும் நெஞ்சில் பந்து ஒன்று வந்து முட்டி மோதியது. அதை விலக்கவும் முடியாமல் எடுக்கவும் வகை தெரியாமல் அவள் இணைறினாள்.

தாகம் நாக்கை வரட்டி எடுத்தது.

'முனியா' என்று அழைக்க நினைத்த நாக்கு புரண்டு கொடுக்க மறுத்துச் சண்டித்தனம் செய்தது.

சாம்பசிவத்தையும் காணவில்லை.

அவருடைய பூஜைக்கு நேரமாகிவிட்டதே என்று நினைத்துக் கொண்டாள் மகாலக்ஷ்மி. அவளுடைய மனத்தில் பரபரப்பு ஏற்பட்டு உடல் முழுதும் பரவிக் கொண்டிருந்தது.

எல்லாம் தயாராக இல்லாவிட்டால் கோபிப்பாரே என்று அவயவங்கள் அவசரப்பட்டன.

கண் திறக்க மறுத்து முரண்டு பிடித்தது. காதுகளில் லேசாகக் கார் வரும் ஓசை கேட்டது.

கண்களைத் திறக்க முயன்றாள் முடியவில்லை. ஆனால் காதுகள் கூர்மையாக இருந்தன.

''அப்பா 'மன்னிச்சுடுங்கோ'னு கேட்டா அது அர்த்தமில்லாததாப் போயிடும். வாழ்க்கை பூராவும் தப்பையே செஞ்சிண்டிருந்தவனை எப்படி மன்னிக்க முடியும்?''

ராகவனின் குரல் போல் இருக்கிறதே!

மகாலக்ஷ்மியின் கண்கள் திறக்கத் துடித்தன.

''மகாலக்ஷ்மியால் முடிஞ்சுதே! என்னோட கோபத்தையும் ஆர்ப்பாட்டத்தையும் தாங்கிண்டு அதை மன்னிச்சிண்டு இருக்க அவளாலே முடிஞ்சுதே! உன்னையும் மன்னிச்சு உன் குத்தங்களையும் மன்னிக்க நினைக்கவும் அவளாலதான் முடிஞ்சுது.''

சாம்பசிவமா சொல்கிறார்?

அவளுடைய தவம் பலித்து விட்டதா?

''அவளைப் பொறுத்தவரையிலும் நான் ரொம்பவும் மோசமா நடந்துண்டுட்டேன். ஒரு கணவன்னு சொல்லிக்கிறதுக்கே அருகதை இல்லே.''

''ஒரு மஞ்சக் கயித்தை நீ கட்டிட்டதாலே அவ எல்லாத்துக்கும் கட்டுப்பட்டுண்டு இருந்தா. அதாம்பா இந்த மண்ணோட பெருமை. அதுவும் மகாலக்ஷ்மியைப் போல் பொறுமைசாலிகளாலேதான் அதுவும் முடியும்.''

அரை நினைவில் இந்த வார்த்தைகள் கனகாபிஷேகம் செய்வதைப் போல் மகாலக்ஷ்மிக்குத் தோன்றின.

மற்றுமொரு முறை காரின் ஓசை கேட்கவும் தனக்குப் பிரமை என்று நினைத்துக் கொண்டாள் மகாலக்ஷ்மி.

யார் யாரோ வரும் ஓசைகள்.

புரியாத வார்த்தைகள் குழப்பமாய்க் கேட்டன.

''மகாலக்ஷ்மி.... மகாலக்ஷ்மி...''

குரலில் பரிவைக் குழைத்து இனிமையாய் இதயத்தைத் தடவுவது போல் ஒலித்த குரல். உணர்வை மீட்ட அதன் எதிரொலியாய்க் கண் மலர் மலர்ந்து கொண்டிருந்தது. சின்ன அரும்பு சூரிய ஒளி பட்டு இதழ் இதழாய்ப் பிரிவது போல இமைகள் சிறிது சிறிதாக விலகி நன்றாக விழிகள் திறந்து பார்த்தபோது...!

அடடா! இவர்கள் யார்?

''மகாலக்ஷ்மி, இதோ பார்த்தியா அம்மா யார் யார் எல்லாம் வந்திருக்கான்னு?'' ராகவன், குமார், சரண்யா, இன்னும் இன்னும்....''

இது சாம்பசிவத்தின் குரலல்லவா!

அதுவா இவ்வளவு இனிமையாய் ஒலிக்கிறது?

பாலை வனத்தில் தேன் ஊற்று சுரந்து விட்டதா?

நன்றாக விழித்துக் கண்களைத் திறந்து பார்த்தாள் மகாலக்ஷ்மி.

சாம்பசிவம், குமார், சரண்யா, ராகவன், அதோ இன்னும் இருவர் ஆணும் பெண்ணுமாய்.... முனியன்...

எல்லோரையும் ஒரு சுற்றுச் சுற்றி வந்த அவள் விழிகள் மகிழ்ச்சியால் மலர அந்த மகிழ்ச்சியை முழுவதும் விரிந்து வாங்கிக் கொண்ட இதயம் துடிக்க மறந்துவிட்டது.

●

---



பால், உணவுப் பொருள் இவை தீய்ந்து போய்ப் பாத்திரம் அடிப்பிடித்து விட்டால் அதைப்போக்க: வெங்காயத்தை! சிறிது நீருடன் அப்பாத்திரத்தில் வேகவைத்தால் அடிப்பிடித்தது சுலபமாக நீங்கிவிடும்.

# வெங்காய மகிமை!

உங்கள் வீட்டு சமையல் கத்தி துருப்பிடித்து விட்டதா! துருப்பிடித்த இடத்தை ஒரு வெங்காயத்தை எடுத்து அதில் குத்தி வையுங்கள், சிறிது நேரத்தில துரு தானே போய்விடும்.



# தலைநகரில் கோதை உலா

மாதங்களில் சிறந்தது மார்கழி! டிஸம்பர் 16ம் தேதி.
குளிர், உடம்பில் உள்ள எலும்புகளை யெல்லாம் எண்ணிக்கொண்டு இருக்கிறது.
அப்போது, ''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளாம்'' என்று ஒரு குரல், சுருதி,
தாளத்துடன் பாட, பல குரல்கள் அதைத் தொடர்கிறது. அட,
பஜனை! டெல்லி குளிரில் மார்கழி பஜனையா! என்ன வித்தியாசமான
இன்பம் என்று ஜன்னல் வழியே எட்டிக் கீழே பார்த்தால்—
பெண்கள், முற்றிலும் தங்களைக் கம்பளியால் போர்த்திக்கொண்டு, ''வையத்து வாழ்வீர்காள்'
''ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாட'' வாருங்கள் என்று நம்மைக் கூவி
அழைக்கிறார்கள். இந்நிகழ்ச்சி மார்கழி மாதம் முப்பதும், பனியில்,
குளிரில், பனிமழையில் தொடர்ந்து நடைபெறுகிறது.
''நாடினேன்! நாடி நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்'' என்பதுபோல
இப்பணியின் மூலஸ்தானத்தைத் தேடினேன். தேடினேன்,
தேடி நான் கண்டுகொண்டேன்.

1955ம் ஆண்டிலிருந்து மூன்றும் பேருக்குத் தெரியாமல் ''கோதா தேவி
சங்கம்,'' கரோல் பாக்கில், திருமதி பி. வி. எஸ். ஐயங்கார் அவர்களால்
அவர்கள் இல்லத்தில் ஆண்டாளின் புகழ் பாட ஆரம்பிக்கப்பட்டது. இப்போது, அந்த
இல்லத்தை 'ஆண்டாள் இல்லம்' என்று அழைக்கும் அளவுக்கு அன்னாரின் பணி தொடர்ந்து
வருகிறது.

இச்சங்கத்தின் முக்கியமான பணிகள்: மார்கழி மாதம் முழுவதும்
வைகறைப் பொழுது பஜனை. பின் வேறு வேறு வீடுகளில்
திருப்பாவை 'முப்பதும் தப்பாமே' பாடி, வெற்றிலை பாக்கு, பழம் விநியோகம். போகிப்
பண்டிகை அன்று, ''பாடிப் பறை கொண்டு யாம் பெறும் சன்மானம்'' என்று
ஸ்ரீராம் மந்திர்' லோடி ரோடில், பக்தர்களை பஸ்ஸில் திரட்டிக் கொண்டு
''கூடி இருந்து குளிர்ந்தேலோ எம்பாவாய்'' என்று திருமதி
ஆண்டாளுக்கும், திரு ரங்கநாதருக்கும் திருக் கல்யாணம் செய்து
மகிழ்வது. அங்கு, திருக்காணப் பாட்டுகள், ''ஆண்டாள் சரித்திரத்தைச் சொல்லி''
பாலிப்பட்டு, மகளிர் அனைவரும் சேர்ந்து கும்மி அடிப்பது, நமது பண்பாடு
இன்னும் மாறவில்லை என்பதைப் பறைசாற்றுகிறது.

பின்பு, பங்குனி உத்தரத்தன்று ஸ்ரீ ஆண்டாள் திருமண நாளை டில்லி ஸ்ரீ வைகுந்த நாதர்
கோயிலில் விமரிசையாகத் திருக்கல்யாண உற்சவம்.
ஆகஸ்ட் மாதம் வரும் திரு ஆண்டாளின் ஆடிப்பூர பிறந்த தின கொண்டாட்டம்.

அன்று அங்கத்தினர்கள் தங்கள் யாராவது ஒருவர் இல்லத்தில், ''திரு ஆடி
பூரத்தில் செகத்துதித்தாள் வாழிய'' என்று அவள் புகழ் பாடி, வெற்றிலை பாக்கு விநியோகம்
செய்வார்கள். கன்னிப் பெண்கள் வீட்டில் இதைச் செய்தால்
கல்யாணம் ஆகிவிடுகிறது என்று பரவலாக நம்பப்படுகிறது.

—ஆர். சகுந்தலா



# என் கதை

## -ரேகா

அக்டோபர் 10, 1954. இதுதான் என் பிறந்த தினம். என் பெற்றோரின் ஆறு குழந்தைகளில் நான் இரண்டாவது. எங்கள் குடும்பம் பெரும்பான்மை தென்னிந்தியக் குடும்பங்களைப் போலவே பழைமையிலும் சம்பிரதாயத்திலும் ஊறினது. வீடெல்லாம் கடவுள் படங்கள். பாட்டி விதித்தபடி பூஜை, புனஸ்காரம். வெள்ளிக் கிழமை எண்ணெய்க் குளி. அவ்வப்போது குடல் சுத்திக்காக விளக்கெண்ணெய் குடிப்போம்.

குழந்தையாக இருந்தபோது நான் குண்டு. பள்ளிக்கூடத்தில் எனக்குப் பேர் Big Lotta. ரொம்பவும் கூச்ச சுபாவம். சாதுவாக இருப்பேன். வெளியே பையன்களைப் போல் துறுதுறுப்பாக இருப்பேன். சுபாவமாகவே இரட்டை வேடம் அமைந்து விட்டது.

என்னுடைய தங்கை ராதா என்னைவிட அழகாக, சுறுசுறுப்பாக இருப்பாள். அவளுடைய நடை உடை பாவனைகளைக் காப்பி அடிப்பேன். எனக்கு 'மிமிக்ரி' வரும். எல்லாரையும் சிரிக்க வைப்பேன். மற்றபடி நான் மக்குதான், மண்டுதான்.

சென்னையில் சர்ச்பார்க் கான்வென்டில் படிப்பு. நன்றாகப் படிப்பேன். ஆனால் நான் ஒரு மோசமான மாணவியாகத்தான் இருந்தேன். மூளையைக் கசக்கிக் கொள்ளப் பிடிக்காது. கணக்கு போன்ற பாடங்கள் வேப்பங்காய். எனக்கு ரொம்பவும் பிடித்தது காமிக்ஸ் புத்தகங்கள். இப்போது கூட வேறெதுவும் படிப்பதில்லை. சோபியா லாரேனின் சுயசரிதை மட்டும் படித்திருக்கிறேன்.

என் அம்மா புஷ்பவல்லி. அப்பா ஜெமினி கணேஷ். சினிமா குடும்பம்தான் என்னுடையது. நான் மூன்று வயதிலேயே நடிக்க ஆரம்பித்து விட்டேன். சினிமா உலகக் கவர்ச்சி எனக்குப் பிடித்திருந்தது. ஆனாலும் நான் நடிகையாக விரும்பவில்லை. நாட்டியக்காரியாகலாம் என்று நினைத்தேன். ஆனால் நடனம் பயிலும்படி வற்புறுத்தப்பட்ட போது அதை வெறுத்து ஒதுக்கி விட்டேன்.

பத்து வயசாகும்வரை என் குடும்பம் ரொம்பவும் அன்னியோன்னியமாக இருந்தது. வசதியாக ஆடம்பரமாக வாழ்ந்தது. என் அம்மாவின் செல்லப் பெண்ணாக வளர்ந்தேன். வீட்டில் நாலு கார்கள். ஆள் படை. என் செலவுக்காக ரூபாய் பத்து பாக்கெட் மணி தினமும் கிடைக்கும்.

### அப்பாவும் நானும்

என் அப்பாவைப் பற்றி அம்மா அதிகம் சொன்னதில்லை. ஆனாலும் என் அப்பாவைப் பற்றி அதிகம் நினைப்பதுண்டு. எங்களை நிர்க்கதியாய் விட்டுப் போன அப்பா. மனசிலே அவரைப் பற்றி வெறுப்புணர்ச்சி. அவர் இல்லாமல் வீடும் மனசும் வெறிச்சென்று போயிற்று. பல வருஷங்களுக்குப் பிறகு அவர் திரும்பவும் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள முயன்றபோது 'எதற்காகவாம்?' என்ற கோபம்தான் மேலோங்கியது. இரண்டு வருஷங்களுக்கு முன்னால் தான் அவரைச் சந்தித்தேன்.

பல வகையில் அவருக்கும் எனக்கும் ஒற்றுமை உண்டு. என்னுடைய முகவாய்க் கட்டு அமைப்பு அச்சாக அப்பாவுடையது. அவரைப் போல நானும் விடியற் காலையில் எழுந்துவிடுவேன். வாழ்க்கையை முழுசாக அனுபவிக்க வேண்டும் என்ற கொள்கையில் நானும் அவரும் ஒன்றுதான். அழகை ரசிப்பவர்கள் நாங்கள். அவரைப் போலவே மேக்அப் இல்லாமல் சாதாரணமான தோற்றம். அவரைப் போலவே எனக்கும் மண்டைக் கர்வம் அசாத்தியம். இப்போ அவரை, அவருடைய நல்ல குணங்களுக்காக நேசிக்கிறேன். எல்லாரும் வாழ்க்கையில் தவறு செய்பவர்கள்தாம். அப்பாவும் விலக்கல்ல. குடும்பத்தைக் கைவிட்டதற்காக அவர் இன்று வரை மன்னிப்புக் கேட்டதில்லை. ஆனால் உள்ளூற எத்தனை வருத்தப்படுகிறார் என்று தெரியும். அப்பாவின் பாசம் திரும்பக் கிடைத்ததில் சந்தோஷம்.

### சினிமா பிரவேசம்

குழந்தையாக சினிமாவில் முகம் காட்டியிருந்தபோதிலும் அதில் முழுவதும் ஈடுபட்டது 10 வயசுக்கு அப்புறம்தான். அப்பாவிடமிருந்து பணம் வருவது நின்று விட்டது. வீட்டில் கஷ்டம் வளர்ந்தது. படிப்புக்காக விடுதிப் பள்ளி ஒன்றுக்கு

அனுப்பப்பட்டேன். எனக்குப் பிடிக்கவில்லை. ஓடி வந்து விட்டேன். 'படிப்பில் அக்கறை இல்லையென்றால் சினிமாவில் நடிக்க வேண்டும்' என்று அம்மா சொன்னாள். சரி என்றேன். சினிமாவில் மூளைக்கு வேலை இல்லை என்பதால் சம்மதித்தேன். அம்மாதான் என்னைச் சினிமா நடிகையாக்கினாள். முதல் படம் என் தாய் மொழி தெலுங்கில். 13 வயசில் ஒரு தமிழ்ப் படத்தில் ஹீரோயின். பேர் நினைவில்லை.



பம்பாய் போனேன்

● ஜெமினி ஸ்டுடியோவில் ஒரு நாள். பிஸ்வஜித் என்னைப் பார்த்தார். கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து படம் எடுக்க வேண்டும் என்று ஒரு பார்ட்டி வந்தது. அவர்களுக்கு என்னை ஹீரோயின் வேடத்துக்குச் சிபாரிசு செய்தார். ஆப்ரிக்காவில் படப்பிடிப்பு என்றதும் எனக்கு ஒரே 'த்ரில்'.

அரிந்தி அப்போது கட்டுப் போட்டாலும். தெரியாது. ஆனால் பம்பாய் பட உலகில் —1969 அக்டோபரில் — ஆரம்பத்திலேயே பெயர் வாங்கி விட்டேன். எப்படித் தெரியுமா? 'அஞ்சனா சபர்' என்ற அந்த ஆப்பிரிக்கக்காரர் படத்தில் பிஸ்வஜித் என்னை முத்தமிடுகிறார். பம்பாய் பத்திரிகையில் எல்லாம் அந்த முத்தக் காட்சி பிரசுரமாகி ஒரே சர்ச்சையாகி விட்டது. அம்மாவுக்கு ஒரே கோபம். பம்பாய் சினிமா வேண்டாம் என்று வீட்டுக்கு அழைத்துக் கொண்டு விட்டாள். ஆனால் பம்பாய்க்கு மறுபடியும் போகத்தான் வேண்டியிருந்தது. போட்டோகிராபர் திரேந்திர கிஷன் குடும்ப நண்பர். நிறையத் தயாரிப்பாளர்களிடம் அறிமுகப் படுத்தினார். மோகன் சைகல் பெரிய தயாரிப்பாளர். ஏற இறங்க ஒரு பார்வை பார்த்தார். 'என் அடுத்த படத்துக்கு நீதான் ஹீரோயின்'



மேலட்டை வண்ணப்படம்: என். பிரபாகர்

என்றார். அவ்வளவுதான். அதைத் தொடர்ந்து பெரிய பெரிய தயாரிப்பாளர்களுடைய படங்கள்! 18க்கு 'புக்' ஆகிவிட்டேன்.

பம்பாய் எனக்குப் பிடிக்கவில்லை. தனிமை, தனிமை. எப்போதும் பெரிய கூட்டத்துக்கு நடுவே தனிமையாகவே உணர்ந்தேன்.

'அஞ்சானா சஃபர்' படத் தயாரிப்பாளர் எனக்காக ஒரு பார்ட்டி கொடுத்தார்கள். வந்தவர்கள் எல்லாம் பஞ்சாபிகள். அவர்கள் பேசின பாஷை புரியவில்லை. பாட்டில் பாட்டிலாகக் குடித்தார்கள். ஒரே ஆர்ப்பாட்டமான கேளிக்கை. நான் ரொம்பவும் பயந்து போனேன்.

சைகலின் 'சவான் பாதோன்' படப்பிடிப்பு ஜாலியாக இருந்தது. ரிலீஸான என் முதல் படம் அது. வெள்ளி விழா கொண்டாடியது. சினிமாவில் அடியெடுத்த முதலிலேயே புகழேணியின் உச்சிக்குப் போய்விட்டேன். அப்போது என் வயது 16தான்.

தலையிலிருந்து கால் வரை போர்த்திக் கொண்டு நடித்தேன். ஆனாலும் ''சவான் பதோன்'' எனக்குக் கவர்ச்சி நடிகை என்று பெயர் வாங்கித் தந்தது. நிறையப் பேருக்குப் பொறாமை. 'ஆட்டிக் குலுக்கி முன்னுக்கு வந்து விட்டாள்' என்று என் காது கேட்கச் சொன்னார்கள். நான் கவலைப்படவில்லை.



எல்லாவற்றையும் விளையாட்டாக எடுத்துக் கொள்ளும் வயசு. நடிப்பிலும் ஈடுபாடு இல்லை. அப்படியும் இரண்டு வேளையும் நடிக்க வேண்டியிருந்தது. கட்டாய வேலை. நடிப்புத் தொழிலை வெறுத்தேன். பொறுக்க முடியாத எரிச்சல் வரும். செட்டை விட்டு ஓடிப்போய் விடுவேன். 'ரேகா திமிர் பிடித்தவள். செட்டில் ஒத்துழைக்கமாட்டாள்' என்று அவப் பெயர். நான் பொருட்படுத்தவில்லை.

எனக்கு நடிப்புத் திறமை இருக்கிறது என்று மற்றவர்கள் சொன்னார்கள். ரந்தீர் கபூர், சத்ருகன் சின்ஹா, தர்மேந்திரா, ரிஷிகேஷ் முகர்ஜி, சுனில் தத் எல்லாரும்



என்னைப் புகழ்ந்தார்கள். அவர்கள் படத்தில் என்னை நடிக்க வைத்தார்கள்.

மீனா குமாரிதான் எனக்கு அதிகம் ஊக்கம் தந்தார். நன்றாக நினைவிருக்கிறது. 'பிங்கி' யோகிதா பாலியுடன் நான் அவரைப் பார்க்கப் போனேன். இரண்டு பேரையும் பார்த்தார். பிங்கியிடம் சொன்னார்: ''நீ அழகாய் இருக்கிறாய். ஆனால் உன் முகம் அகலம். உடம்பில் சதை போட்டால் மூஞ்சியில் அதிகம் தெரியும்' என்றார். என்னைப் பார்த்து மீனா குமாரி சொன்னது: ''உன் மூஞ்சி சின்னதாக இருக்கிறது. ஆனால் அதுதான் உனக்குச் சொத்து. குண்டானால் கூடத் தெரியாது.''

எனக்கு ஒரே சந்தோஷம். மற்ற நடிகைகள் போல் குண்டாகி விடுவேனோ என்று கவலைப்பட்டுச் சாக வேண்டியதில்லை.

## என் சினிமா வாழ்க்கை

● 1975லிருந்து யோகம் அடித்தது. சொந்த வாழ்க்கையில் நிகழ்ந்த சில விபத்துக்கள் மனத்தளவில் முதிர்ச்சி தந்தன. நான் மிகவும் நேசித்த அத்தை என் கண்ணெதிரிலேயே செத்துப் போனாள். புற்று நோய். அதுவரை சாவை அத்தனை கிட்டத்திலிருந்து பார்த்ததில்லை. மிகவும் அதிர்ச்சி தந்த சாவு அது. ஒரு நாள் முழுவதும் தனிமையில் யோசித்தேன். ''மனிதர்களுக்குச் சாவுதான் சாசுவதம் என்றால் எதற்காக இந்த வாழ்க்கைப் போராட்டம்? 'நான்', 'என்னுடையது' என்று பறக்கிறார்களே! எதற்காக?'' இந்தக் கேள்வி என்னைக் குடைந்தது. இப்போதும் குடைகிறது.

பின்னொரு சமயம் டைபாயிட் ஜுரத்தில் விழுந்தேன். வாழ்க்கை பற்றி இன்னும் அதிகம் சிந்திக்கும் சந்தர்ப்பமாக இருந்தது. எனக்காக ஒரு கொள்கையும் வகுத்துக் கொண்டேன். 'இனிமேல் வாழ்க்கையை, செய்யும் தொழிலை சீரியஸாக எடுத்துக்கொள்வேன். உண்மையான நண்பர்களைச் சம்பாதித்துக் கொள்வேன்.'

ஜுரத்தினால் இன்னொரு லாபம். அனுவசியமாக உடலில் ஏறியிருந்த 15 கிலோ அளவுச் சதை குறைந்து விட்டது.

அதன் பிறகு வந்த படங்கள் 'தோ அஞ்சானே', 'இமாம் தரம்'. (இந்தப் படத்தில் தமிழ் பேசும் கொத்து வேலைக்காரியாக நடித்தேன்.) இரண்டும் என் நடிப்பில் தேர்ச்சியையும் முதிர்ச்சியையும் அறிமுகப்படுத்தின.

என் சினிமா வாழ்க்கையின் திருப்புமுனையாக அமைந்த படம் 'கர்' (வீடு') கவர்ச்சியில்லாத குடும்பப் பெண் கதை. கணவனிடமிருந்து குண்டர்களால் பறிக்கப்படுகிறாள். கணவனை முழுதும் நேசிக்கிறவள். காதல் கட்டங்களில் உண்மையாக நடித்தேன். முதல் தடவையாக நான் காதலை உணர்ந்து பரவசப்பட்டேன். அதன் பின் 'முக்காதார்-கா சிக்கந்தர்' — அமிதா பச்சனுடன். முதல் தடவையாக செத்துப் போவது போல் நடித்த படம் இது. என்னை ரொம்பவும் பாதித்த படம்.

ஒரு நாள் ரிஷிகேஷ் முகர்ஜி போன் செய்தார். ''சின்னப் பொண்ணு (அவர் அப்படித்தான் என்னைக் கூப்பிடுவார்) என் படத்தில் நடிக்கப் போகிறாய்'' என்றார்.

முதலில் 'கோல்மால்' படத்தில் நடிக்கக் கூப்பிட்டார். அதன் கதையைக் கேட்டதும் 'எனக்குப் பொருத்தமான ரோல் இல்லை' என்றேன். ரிஷிதா வற்புறுத்தவில்லை. எனக்காகவே ஒரு கதையை எழுதுவதாகச் சொன்னார். அப்படித்தான் 'கூப் சூரத்' (ரொம்ப அழகு) படம் பிறந்தது. படம் பிடிக்க 20 நாள்தான் ஆயிற்று. முழுக்க முழுக்க எனக்குப் பொருத்தமான ரோல். ஜாலியாக நடித்தேன். படம் ஓகோ என்று ஓடிக்கொண்டிருக்கிறது.



## நல்ல நடிகையாவதற்கு என்ன வேண்டும்?

● நல்ல நடிகையாக வேண்டுமென்றால், வாழ்க்கையில் எல்லா வித அனுபவங்களும் வேண்டும். அப்போதுதான் நடிப்பு நிஜம் போல வரும். எனக்கு 26 வயதாகிறது. வாழ்க்கையில் பல அம்சங்களை, பலவிதமான மனிதர்களை, அனுபவங்களைச் சந்தித்துவிட்டேன். எனக்கு ஞாபக சக்தி அதிகம். கூர்ந்து நோக்கும் சுபாவம் வேண்டும். ஒரு கர்ரக்டரின் பிரத்தியேக குணங்களை, மானரிஸத்தை, பிரதிபலிக்க இது அவசியம். கூர்ந்து நோக்கப் பழகினால் ஞாபக சக்தி தானே வந்துவிடும். தேதி, உடை, சூழ்நிலை, இடத்தின் வாசனை இதையெல்லாம் கூடப் பதிவு செய்துகொண்டு ஞாபகத்தில் வைத்திருப்பேன். 'மிமிக்ரி' ஒரு வரப்பிரசாதம். ஏதா

எது ஒரு படத்தில் நான் செய்த ரோல் நிஜ வாழ்க்கையில் நான் சந்தித்த நபரை முழுசாகப் பிரதிபலிப்பதாக இருக்கும். பல சமயம் நடிப்பையே நிஜம் என்று நம்பி விடுவதுண்டு. 'கர்' படத்தில் நடித்தபோது கதாநாயகன் விநோத் மெஹ்ராவை நிஜமாகவே காதலிப்பது போல் உணர்ந்தேன்.

நல்ல நடிகைக்கு அழகு, கவர்ச்சி முக்கியமில்லை. அழகு மனதிலிருந்து வரவேண்டும். மேக்-அப்தான் என்னை அழகாகக் காட்டுகிறது. அது இல்லையென்றால் நான் சாதாரணப் பெண்தான். ஆனால் என் மனசு அழகாக இருக்கிறது என்று உணர்கிறேன்.

**என் காதலர்கள்**

● சின்ன வயதில் ஜிதேந்திரா மீது எனக்குக் கொள்ளைப் பிரியம். நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைத்தபோது நேசம் வந்தது. ஆனால் சீக்கிரமே பிரிந்து விட்டோம்.

ஜிதேந்திராவுக்கு நேர் எதிர் விநோத்-மெஹ்ரா. ரொம்ப நல்ல அமைதியான சுபாவம். என்மேல் தலைகால் புரியாத காதல். நானும் அவரைக் கல்யாணம் செய்துகொள்ளலாம் என்று கூட நினைத்தேன். ஆனால், மௌஷுமி சட்டர்ஜியுடன் நெருக்கமாக இருந்த நிலையில் அவரைப் பார்த்து விட்டேன். அதன் பின் விநோத் மெஹ்ராவை அடியோடு மறந்து விட்டேன். பிறகு கிரண் குமாருடன் சில வாரங்கள். நன்றாகக் காதலிக்கத் தெரிந்தவர். ஆனால் அவரை அதிகமாக நெருங்கவில்லை.

**ஆண்களே அப்படித்தான்!**

● என் அனுபவத்தில் சொல்கிறேன். ஓர் ஆண் ஒரு பெண்ணை உண்மையாகவே காதலிக்கலாம். அதே நேரத்தில் இன்னொரு பெண்ணுடன் சந்தர்ப்பம் கிடைத்தால் எந்த ஆணும் அதைப் பயன்படுத்தாமல் விடுவதில்லை. ஆனால் ஒவ்வொரு ஆணும் தன்னைக் காதலிக்கும் பெண்ணிடம் எதிர்பார்ப்பது அவள் முழுக்க முழுக்க அவனுக்கு மட்டுமே சொந்தமாக இருக்க வேண்டும் என்பதுதான். ஆண் தடம் தவறினால் தப்பில்லை; பெண் தவறினால் பெரும் பொல்லாப்பு. அவள் வாழ்க்கையே அதோகதி! ஏன் இந்தப் பயங்கரப் பாகுபாடு என்று எனக்குப் புரியவில்லை. ஆனால் எல்லா ஆண்களும் இப்படியே இருப்பதால் அவர்களுடைய தவறுகளை மன்னித்துப் பொறுத்துப் போக வேண்டியிருக்கிறது. லேசான காதல் துரோகம் ஆண்களின் அடிப்படைக் குணமாக இருக்கிறது.

நான் இப்போது ஒருவரைக் காதலிக்கிறேன். தீவிரமாக, முழுசாக. அவரும் என்னை மிகவும் நேசிக்கிறார். இருந்தாலும் அவர் வாழ்க்கையில் நான் பங்கு கொள்ள முடியாது. அதைப் பகிர்ந்துகொள்ள மனைவி இருக்கிறாள். எனக்குக் கல்யாணத்தில் விருப்பமில்லை. அந்த அமைப்பில் நம்பிக்கை இல்லை.

நான் அவர்களிடமிருந்து எதிர்பார்ப்பதெல்லாம் என்னை மதித்து நடத்த வேண்டும் என்பதுதான். இன்றைக்கு எனக்கு கிடைத்திருக்கும் இந்த சந்தோஷம் போதும். எதிர்காலத்தைப் பற்றி அக்கறை இல்லை. இன்று நான் செத்துப்போக நேரிட்டால் சந்தோஷமாக, திருப்தியாகச் சாவேன்.

பேட்டி : அஜல் குமார்



**எச்சரிக்கை!**



குரோம்பேட்டையில் இருக்கும் அந்த சிநேகிதி வீட்டில் எப்போதும் கொசுத் தொல்லை உண்டு. கொசு பத்தியை ஏற்றிவைத்துக் கொண்டு ஓரளவு அதன் தொல்லையைத் தவிர்க்க முயற்சிசெய்வாள். மாலை வேளைகளில் அந்தக் கொசு பத்தியை ஏற்றி வைத்து ஜன்னல் கதவுகளை எல்லாம் மூடி வைத்திருந்தால் இரவு நேரத்தில் அவ்வளவாக கொசுக்கடி இருக்காது! அதனால் ஒரு நாள் மாலை, பத்தியை ஏற்றி வைத்தாள். வெளியே சென்று திரும்பிய அவளது பெண் உடை மாற்றிக்கொண்டு அதன் அருகில் போட்டு வைத்திருக்கிறாள். பத்தி புகை சூழ வேண்டும் என்று பெண்ணையும் அழைத்துக்கொண்டு பக்கத்து வீட்டில் டி.வி. நிகழ்ச்சி பார்க்க வீட்டை பூட்டிக்கொண்டு சென்று விட்டாள். டி.வி.யில் நாடகம் முடிந்து வீடு திரும்பியதும் வீட்டுக்குள் புகை நாற்றம் மூக்கைத் துளைத்தது. ஆம்! கொசு பத்தி ஏற்றி வைத்திருந்த இடத்திலிருந்து தொடர்ந்த நெருப்பு, துணி மாட்டும் டவல் ஸ்டாண்டு வரை எட்டி அதிலிருந்த நல்ல வேட்டி புடவை ஷர்ட் இவைகளை பஸ்மமாக்கியிருந்தது!

- ரமணி ரங்கநாதன்

# FOR TOTAL RELIABILITY IN HIGH TENSILE FASTENERS:

# 'TVS'

Yes, for years, the name 'TVS' has been synonymous with total reliability in quality high tensile bolts, screws and nuts.

Precision engineered, cold forged and heat treated—the standard and special fasteners are manufactured to meet specific requirements.

What's more, Sundram Fasteners plans production to suit delivery commitments which will optimize your procurement efficiency. The result: a big saving in inventory costs.

Cars, trucks, buses, three-wheelers, scooters, motorcycles, tractors, industrial engines, tillers, diesel locomotives and earth-moving equipment are fitted with TVS fasteners as OE. They are also used in other non-automotive engineering applications.

'TVS' high tensile fasteners conform to Indian, ISO, American, British and DIN standards. Fasteners are also made to customers' specifications.

Available in diameters from 6 mm (¼") to 24 mm (1"), and in lengths from 12 mm (½") to 200 mm (8").

Sundram Fasteners—a single source for all your standard and critical special fasteners needs.

**Where fastening is critical**
**'TVS' the first choice**




Manufactured by:
**Sundram Fasteners Limited**
PADI, MADRAS 600 050

PHONE: 632701 GRAMS: SUNLOC
TELEX: 041-7849 FASN IN

SAA/SFL/3115

Regd. No. TN MS (S) 231